## "எதிர்பாராமல் வரும் விருந்தாளிகளுக்கு என்றல்லவா இந்த பாட்டில்

# கிஸான் ஸ்க்வாஷ் வைத்திருந்தேன்!"

முன்யோசனை மிருந்த மனைவிமார்கள் எப்பொழுதும் எதிர்பாராமல் வரும் விருந்தினருக்காக தனியாக ஒரு பாட்டில் கிஸான் ஸ்க்வாஷை வைத்திருப்பார்கள். கனிந்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்ட இப்பானங்கள் விட்டமின் சத்துக்கள் கொண்டவை. வருஷம் முழுவதும் அருந்துவதற்கு ஏற்றவை. வீட்டில் எப்பொழுதும் கிஸான் ஸ்க்வர்ஷ் வைத்திருங்கள். ஆரெஞ்சு, லெமன் மற்றும் இதர ஆறு வகைகளில் கிஸான் ஸ்க்வாஷ் கிடைக்கின்றன.

கிஸான் பிராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்




JWT/KP-1314-a



மிகவும் துல்லியமான சருமத்திற்கும் இதத்தை அளிக்கும் இனிய குணம் கொண்டது மெரோலின் சோப். அதுமட்டுமல்ல, அதன் மருந்து கலந்த அம்சம் மேனிக்குப் பூரண பாதுகாப்பையும் அளிக்கிறது.

# மெரோலின்




"இதனுல்தான் நான் மெரோலின் சோப்பை மிகவும் விரும்பி உபயோகிக்கிறேன்" என்கிருர் சிறந்த கன்னட நடிகையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ஸ்ரீமதி லீலாவதி.

வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ்

கோழிக்கோடு

# கல்கி பொருளடக்கம்

பிலவ, வைகாசி 8 ❋ மே 21, 1961









புகையிலையின் உற்பத்தி, உபயோகம், ஏற்றுமதி இவைகளில் அமெரிக்க ஐக்கிய நாடுகளும், சீனாவும் இந்தியாவுமே தலைமை வகிக்கின்றன. இன்று உலகிலேயே புகையிலை விளைச்சலில் அமெரிக்காவுக்கும் சீனாவுக்கும் அடுத்தபடியாக மூன்றாவது ஸ்தானம் பெற்றிருப்பது இந்தியாதான். பதப்படுத்தப்பட்ட வர்ஜீனியா புகையிலையின் ஏற்றுமதி 1959—ல் பிற நாட்டு நாணயச் செலாவணியாக 16 கோடி ரூபாய்க்குச் சற்று அதிகமாக இந்தியாவுக்குத் தேடித் தந்தது.

## புகையிலையின் வரலாறு... 7




# பனாமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT.707 TM

Gorens' Advtg



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 42

# அமைச்சரின் சமாதானம்

அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் அவர்களின் துணிச்சலான பதிலைக் கண்டு வியந்து பாராட்டுகிறோம். ஆதாயம் அளிக்கக் கூடிய திட்டங்களுக்கே வெளிநாடுகளிலிருந்து கடன் வாங்கப்படுகிறது என்று திருச்சி தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் பேசியிருக்கிறார். இதற்குச் சான்றாகக் கனடாவின் கடன் உதவி கொண்டு நிறைவேற்றப்பட்டு வரும் குந்தா மின்சாரத் திட்டத்தைக் காட்டியுள்ளார். கனடா நாட்டுப் பொருளாதார நிபுணர்களும் மின்சாரப் பொறி இயல் நிபுணர்களும் தமிழ் நாட்டுக்கு வந்து பரிசிலனை செய்து இத்திட்டம் ஆதாயமளிக்கக் கூடியதாக இருக்கும், போட்ட முதல் திரும்பி வரும் என்ற நம்பிக்கை ஏற்பட்ட பின்னரே கடன் உதவி அளித்திருக்கிறார்கள் என்று சமாதானமும் கூறியிருக்கிறார். பாராட்டுகிறோம். ஆனால் இதே முறைப்படிதான் அமெரிக்காவும் ருஷ்யாவும்கூட இந்தியாவுக்குக் கடன் தந்திருக்கின்றன என்று நெஞ்சில் கை வைத்து நிதிமந்திரி கூறுவாரா ?

அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் இப்பொழுது ஏற்பட்டுள்ள 'துப்பாக்கியில்லாத சண்டை.' (cold war) காரணமாக, இந்தியா அமெரிக்காவின் பக்கம் சாய்ந்துவிடக் கூடாதே என்று ருஷ்யாவும், ருஷ்யாவின் கம்யூனிஸ வலையில் இந்தியா விழுந்து விடக் கூடாதே என்று அமெரிக்காவும் போட்டி போட்டுக் கொண்டு கடன் கொடுத்து உதவுகின்றன. இந்தப் பச்சையான உண்மை நமது நாட்டில் யாருக்குமே தெரியாது என்று எப்படி மந்திரி திரு சுப்பிரமணியம் நினைத்து விட்டார் என்பது புரியவில்லை.

மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டத்தை நிறைவேற்ற இந்திய மக்களைவிட இன்று இதர நாடுகளே மகாநாடு கூட்டி அதிகமாக விவாதிக்கின்றன. உலக பாங்கு நாடுகளான அமெரிக்கா, பிரிட்டன், மேற்கு ஜெர்மனி, கனடா ஆகிய நாடுகள் ஒவ்வொன்றும் எந்த அளவு இந்தியாவுக்கு உதவ முடியும் என்று ஆலோசித்து வருகின்றன. இந்தத் தடவை இந்தியாவுக்கு அதிகமாக உதவ வேண்டும் என்று சொல்லி அதற்கு முன்மாதிரியாக அமெரிக்கா, நூறு கோடி டாலர் கடன் கொடுப்பதாக முதல் கையெழுத்துப் போட்டிருக்கிறதாம். கொடுத்த பணம் திரும்பி வராவிட்டால் அமெரிக்காவுக்குப் பரவாயில்லை. அது பணம் கொழிக்கும் நாடு. ஜெர்மனி அப்படியில்லை. கொடுத்த பணம் திரும்பி வருமா என்ற யோசனையில், அது தலையைச் சொறிந்து கொண்டிருக்கிறது. அப்படியேதான் பிரிட்டன், கனடா முதலிய நாடுகளும். ஆனால் முடிவில் அமெரிக்காவின் வற்புறுத்தலினால் மேற்கத்திய நாடுகள் யாவும் இந்தியாவுக்குக் கடன் கொடுத்து உதவும் என்பதில் ஐயமில்லை.

அப்படியே ருஷ்யாவும் மூன்றாவது திட்டத்துக்குக் கடன் கொடுத்து உதவும்.

ஆனால் இப்படிக் கடன் வாங்கிக் கொண்டே போனால் அவற்றைத் திருப்பிக் கொடுக்க என்ன திட்டம் இருக்கிறது ? அதற்குத்தான் பதிலைக் காணோம் !

இதுவரையில் சுமார் 700 கோடி ரூபாய் வரை சர்க்கார் நடத்தும் பொதுத் துறைகளில் அரசாங்கம் முதலீடு செய்திருக்கிறது. சென்ற வருஷம் இவற்றிலிருந்து கிடைத்த லாபம் அரை சதவிகிதம்கூட இல்லை.

எந்தத் தனிப்பட்ட தொழிலதிபராவது இப்படி ஒரு தொழிற்கூடம், வர்த்தகம் நடத்துவாரா ? அரை சதவிகித லாபம் கிடைத்ததென்றால் வாங்கிய கடனை என்றைக்கு அடைப்பது ?

இதில் இன்னொரு சங்கடமும் இருக்கிறது. வெளி நாடுகளிலிருந்து வாங்கிய கடனை அடைக்க அந்தந்த நாட்டுக்குத் தேவையான பொருள்களை ஏற்றுமதி செய்துதான் அடைக்க வேண்டும். நமது ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்து அடைக்கமுடியாது. பிற நாடுகளிலிருந்து நம் நாட்டில் இறக்குமதியாகும் பொருள்களின் மதிப்பையும் இந்நாடுகளுக்கு நமது நாட்டிலிருந்து ஏற்றுமதியாகும் பொருள்களின் மதிப்பையும் சற்றுப் பாருங்கள்.

| | இறக்குமதி | ஏற்றுமதி |
|---|---|---|
| அமெரிக்கா | 198 கோடி | 93 கோடி |
| மே. ஜெர்மனி | 105 கோடி | 17 கோடி |
| பிரிட்டன் | 182 கோடி | 154 கோடி |

ஜப்பான் நாட்டிலிருந்து இறக்குமதி செய்த தொகைக்கு 18 கோடி ரூபாய் குறைவாகவே பொருள்கள் ஏற்றுமதி செய்திருக்கிறோம். மிகவும் பின்தங்கிய நாடு என்று சொல்லப்படும் ஈரான் நாட்டிலிருந்து இறக்குமதி செய்ததைவிட 28 கோடி குறைவாகவே ஏற்றுமதி செய்திருக்கிறோம்!

இப்படி உலகத்தில் எந்த நாட்டுக்கும், அந்நாடுகளிடமிருந்து இறக்குமதி செய்ததைவிட அதிகமான மதிப்புள்ள பொருள்களை ஏற்றுமதி செய்ய நம்மால் முடியவில்லை. அதிகமாக இல்லாவிட்டாலும், இறக்குமதி செய்யும் அளவுக்காவது ஏற்றுமதி செய்யலாமே? அதுவும் நமக்குச் செய்ய முடியவில்லை.

மிகவும் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளிலிருந்து கண்ணை மூடிக்கொண்டு கடன் வாங்கும் நாம், அவர்களுக்கு என்னென்ன பொருள்களை ஏற்றுமதி செய்யக்கூடும் என்பதை முதலில் சிந்திக்க வேண்டும். நமது நாட்டுக் கைத்தொழிற் சாமான்களான பத்தமடைப் பாய், சட்டி, பானை, விக்கிரகங்கள் போன்றவை தான் வெளி நாடுகளுக்கு அனுப்ப முடியும். இவையும் அவர்களுக்கு ஒரு சில நாட்களுக்குப் புதுமையாகத் தோன்றிப் பிறகு வேண்டாம் என்று கூறிவிடக் கூடும். இதே நிலைமை நமது சென்னை ராஜ்ய 'பிளீடிங் மெட்ராஸ்' என்ற கைத்தறித் துணிக்கு ஏற்பட்டதை யாரும் மறந்திருக்க முடியாது. ஒவ்வொரு சலவைக்கும் வண்ணம் மாறும் இந்தக் கைத்தறித் துணியிலிருந்த மோகம் அமெரிக்கர்களுக்கு மாறிப் போய் பல கோடிக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள துணிகள் தமிழ்நாட்டில் தேங்கி அதனால் நெசவாளர்கள் பட்ட அல்லல்கள் கொஞ்ச நஞ்சமல்ல.

அதேபோல் சர்க்கார் வர்த்தகத் துறையினர் (State Trading Corporation) இந்தியாவிலிருந்து ருஷ்யாவுக்கும் போலந்துக்கும் தோல் பூட்சுகளைச் செய்தனுப்பினர். அந்த இரண்டு நாடுகளும் அவற்றை ஒரேயடியாக நிராகரித்ததன் காரணமாக, பத்து லட்சம் பெறுமானமுள்ள சாமான்கள், 1957-ம் ஆண்டிலிருந்து சர்க்கார் கைத்தொழில் ஸ்தாபனத்தில் வாங்குவாரற்றுக் கிடக்கின்றன என்று நமது மதிப்பீட்டுக் கமிட்டி அறிக்கை கூறுகிறது. இவ்வளவுக்கும் ருஷ்யாவும், போலந்தும் நமக்கு மிகவும் வேண்டிய நாடுகள் என்றுதான் பெயர்.

இந்த நிலையில் கடன் கொடுக்கும் நாடுகள் நமது திருப்பித் தரும் திறமையை உணர்ந்துதான் கடன் கொடுக்கின்றன என்று திரு சி. சுப்பிரமண்யம் சொல்வதில் சிறிதும் உண்மை இல்லை.

நமது ஏற்றுமதி வர்த்தக நிலை, 'அந்நிய நாடுகளிலிருந்து மேலும் மேலும் கடன் வாங்காதே!' என்றுதான் நமக்கு எச்சரிக்கை செய்கிறது.

கடன் கொடுக்கும் நாடுகளுக்கு நாம் கடனை அடைக்கும்வகையில் நமது நாட்டிலிருந்து அனுப்பக் கூடிய பொருள்கள் ஒன்றுமே இல்லாத போது, கடன் கொடுப்பவர்கள் நோக்கத்தில் என்ன இருக்கக் கூடும் என்பதனையும் ஊகித்து நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டியது அவசியம்.

# சுதந்திரக் கட்சியின் சாதனை

இன்றைய பாரத அரசாங்கம் இதுவரை 6,750 கோடி ரூபாய் கடன்பட்டிருக்கிறது. நாளை பிறக்கப் போகிற குழந்தை தலையில்கூட இந்தக் கடனைத் தீர்க்க வேண்டிய பொறுப்பு இருக்கும். நமது அரசாங்கம் இதுவரை வாங்கியிருக்கும் கடனின் சுமை இது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சர்க்கார் வாங்க இருக்கும் கடனையும் சேர்த்தால் சுமை இதைவிட இன்னும் அதிகமாகலாம்!

இது சர்க்காரே பெருந் தொழில்களையும் வியாபாரத்தையும் எடுத்து நடத்துவதால் விளையும் தொல்லை. ஆனால் நாட்டில் அன்னிய மூலதனத்துடன் தொழில் வளம் பெருக்கும் பொறுப்பைத் தனிப்பட்ட முதலாளிகள் ஏற்று நடத்தினால் தேசம் முன்னேற்றம் அடையும்.




சர்க்கார் நிர்வாக மதிப்பீட்டு கமிட்டியின் அறிக்கை சர்க்கார் ஊழல்களை மீண்டும் எடுத்துக் காட்டியிருக்கிறது.

---

தொழில்கள் எல்லாம் பொறுப்புடன் நடத்தப்படும். நஷ்டம் உண்டானாலும் அது தனி மனிதர்களைத்தான் சாரும். நஷ்டத்தினால் பொது மக்கள் பாதிக்கப்பட மாட்டார்கள். இதை ஓயாமல் சுதந்திரக் கட்சி சொல்லிக் கொண்டு வந்திருக்கிறது. சட்டசபைகளிலும், மக்கள் சபையிலும் ஓர் எதிர்க்கட்சி இருந்து செய்யவேண்டிய காரியத்தை வெளியில் இருந்த வாக்கிலே சுதந்திரக் கட்சி செய்ததன் விளைவாக, இன்று பாரத சர்க்கார் தங்கள் கொள்கையில் சிறு மாறுதல் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று தெரியவருகிறது. தனிப்பட்ட முதலாளிகளுக்கும், தொழிலதிபர்களுக்கும், தாங்களாகவே வெளிநாடுகளிலிருந்து கடனும் உதவியும் பெற்றுத் தொழில்கள் நடத்த வசதிகள் தரப்படும் என்ற செய்தி வந்திருக்கிறது.

காங்கிரஸ்காரர்கள் இந்தக் கொள்கை மாற்றத்தைத் தாங்களாகவே செய்ததாகக் கூறிக் கொள்ளலாம். எனினும் சுதந்திரக் கட்சி ஆளும் வர்க்கத்தினருக்குப் பிரத்யட்ச நிலையை ஓரளவு உணர்த்தியிருக்கிறது என்பது மறைக்க முடியாத உண்மையாகும்.

# என்ன சேதி?

## கவிஞருக்கு அஞ்சலி

ரவீந்திரரின் நூற்றாண்டு விழா சென்னை ராஜாஜி மண்டபத்தின் புறத்தேயுள்ள புல்வெளியில் இயற்கையின் இனிய சூழ்நிலையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இயற்கையோடு இயைந்த முறையில் செய்யப்பட்டிருந்த அலங்காரங்கள் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் இருந்தன. நமது பழங்காலப் பண்பாட்டையும், இன்றைய வசதிகளையும் இணைத்துச் செய்யப்பட்டிருந்த பான்மை யாவரது பாராட்டுக்கும் உரித்தாயிற்று. நாகஸ்வர இன்னிசை சபையோரை வரவேற்க, கலாக்ஷேத்திரக் குழுவினரின் பிரார்த்தனை கீதத்துடன் விழா தொடங்கியது. ரவீந்திரரின் இனிய குரலில், அவரது கவிதைகளின் ஆங்கில மொழிபெயர்ப்பைக் கேட்கவும் ஏற்பாடு செய்திருந்தார்கள். டாக்டர் ராதாகிருஷ்ணன், கவியின் கருத்தைத் தமக்கே உரிய முறையில் எளிமையாக எடுத்துரைத்தார். உதவி ஜனாதிபதியின் கடல்மடை திறந்தாற்

போன்ற பேச்சைக் கேட்டவர்கள் கருத்தின் ஆழத்திலும் மொழியின் நயத்திலும் மனத்தைப் பறிகொடுத்தார்கள் என்றால் மிகையில்லை.

அந்த அரிய பேச்சுக்குப் பின்னர் நன்றி நவில வந்த திரு ஏ. வி. செட்டியார் அவர்கள் சற்று அடக்கத்தோடும் சுருக்கமாகவும் தம் கடமையை ஆற்றியிருந்தாரானால் வெகு நன்றாக இருந்திருக்கும்.

இந்த விழாவில் சாகித்திய அகாடமி, தென்மொழி புஸ்தக டிரஸ்ட், அண்ணாமலை பல்கலைக் கழகம் ஆகியவை டாகுரைப் பற்றிப் பிரசுரித்த தமிழ் நூல்கள் வெளியிடப் பட்டன. கலா க்ஷேத்திரக் குழுவினரின் பாதுகா பட்டாபிஷேக இசை நாடக நிகழ்ச்சியுடன் அன்றைய வைபவம் முடிவு பெற்றது.

## காங்கிரஸ் அபிமானம்!

மந்திரி திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் திரு ஈ. வெ. ரா. அவர்களுக்கு ஒரு புதிய 'ஷாக்' கொடுத்திருக்கிறார். திரு ஈ. வெ. ரா. அவர்களுக்குக் காங்கிரஸ் என்றால் தனியான அபிமானம் இருந்து வருகிறதாம்.

இந்தக் கூற்றுக்குச் சான்றாக, திரு ஈ. வெ. ரா. அவர்கள் அந்தக் காலத்தில் காங்கிரசுக்கு உழைத்ததை எடுத்துக் காட்டுகிறார்.

திரு ஈ. வெ. ரா. ஒரு காலத்தில் காங்கிரசுக்குத் தொண்டு செய்திருந்தாலும் அதெல்லாம் மறந்து போய், அவர் காங்கிரஸின் முதல் விரோதியாகிப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. காந்தி மகானிலிருந்து ஒருவர் விடாமல் காங்கிரஸில் இருக்கும் அத்தனை மேலோர்களையும் அவர் நாக்கூசாமல் திட்டியதைத் தேசம் நன்கறியும். இன்றும்கூட தாம் காங்கிரசுக்கு விரோதி என்றும் காமராஜருக்கு மட்டும் ஆதரவாளர் என்றும் அவர் கூறுகிறார். திரு காமராஜருக்கு ஆதரவாளராக அவர் இருப்பதற்குக் காரணம், தாம் குறிப்பிடுகிற நபர்களுக்கெல்லாம் அவர் உத்தியோகங்கள் தருவது தான் என்றும் ஆட்சேபிக்கத்தக்க முறையில் சொல்லி வருகிறார்.

இந்த லட்சணத்தில் இப்பொழுது திரு ஈ. வெ. ரா.வைக் காங்கிரஸ் ஆதரவாளர் என்று கூறி அவரைக் குளிப்பாட்டுகிறார்கள்.

## கும்பலில் கோவிந்தா!

திருச்சியில் கூடிய தமிழ் நாட்டுக் காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தினர் விலைவாசிகள் உயர்வைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றனர். இந்தத் தீர்மானம் மந்திரிகளின் முன்னிலையிலேயே நடைபெற்றிருக்கிறது. எந்த மந்திரிகளுடைய கவனத்தை ஈர்க்க வேண்டுமோ, அந்த மந்திரிகளும் கூட இருந்து இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறார்கள்!

காங்கிரஸின் ஐந்தாண்டுத் திட்டங்கள் காரணமாகத்தான் அதிகப் பணம் தேவைப்படுகிறது. பணத்துக்காகப் பண்டங்களின்மீது மறைமுக வரிகள் போடப்படுகின்றன. அதுவும் போதாதென்று நாஸிக் அச்சகத்தில் காகித நோட்டுகள் வேறு அச்சடித்து விடுகிறார்கள். இவற்றின் காரணமாகத்தான் விலைகள் விஷம் போல் உயர்கின்றன!

ஆக, நாட்டில் விலைவாசிகள் உயர்வதற்குக் காங்கிரஸ் கட்சியினரும், காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பிலுள்ளவர்களுமே காரணம். ஆனால் இப்போது காங்கிரஸாரே விலைவாசி உயர்வுக் கண்டனத் தீர்மானம் போடுவது கூட்டத்தில் திருடியவனே 'திருடனைப் பிடி, திருடனைப் பிடி' என்று கூச்சல் போடுவது போல் இருக்கிறது!

எதிர்க் கட்சிகளுடன் சேர்ந்து காங்கிரஸும் ஒரு கண்டனத் தீர்மானம் போட்டு விட்டால், மக்கள் உண்மையான பொறுப்பாளி யார் என்று தெரியாமல் குழம்புவார்கள் என்று காங்கிரஸ்காரர்கள் நினைக்கிறார்கள் போலும்!

## சென்னை அரசினர் செய்த நற்காரியம்

எட்டாவது வகுப்புவரையில் படித்து நிறுத்திவிட்ட பெண்கள், விரும்பினால் வீட்டிலிருந்து படித்து எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சை எழுதலாம் என்ற ஒரு புது உத்தரவு வந்துள்ளது. இது படிப்பில் ஆர்வமுள்ள பெண்களுக்கு ஒரு வரப்பிரசாதமாகும். ஓய்வுநேரத்தை வீணடிக்காமல் படிப்பில் கவனம் செலுத்த முடியுமல்லவா?

தமிழகத்தில் எட்டாவது வரை படித்த பெண்கள், திருமண வயது அடைந்தவுடன், படிப்பை நிறுத்திவிட்டு, திருமணமாகிக் கணவன் வீட்டுக்குப் போய்விடுகிறார்கள். அவர்கள் மேலும் தொடர்ந்து படிக்க விரும்பினாலும் வசதியும் வாய்ப்பும் கிடைப்பதில்லை. சென்னை சர்க்காரின் இந்தப் புது உத்தரவைத் தமிழ் நாட்டுத் தாய்க்குலம் மகிழ்ச்சியுடன் வரவேற்கும். வேறு சில ராஜ்யங்களில் கல்லூரிப் படிப்புக்குக் கூடப் பெண்கள் வீட்டிலிருந்தபடியே படித்துப் பரீட்சை எழுதலாம் என்று பல்கலைக் கழகங்கள் அனுமதிக்கின்றன. அதேபோல் நமது சென்னை சர்வகலாசாலையும் தாய்க்குலத்துக்கு வசதி செய்து தரவேண்டும்.



# திருமூலர் தவமொழி

## ராஜாஜி – சோமு

6

திருமூலருடைய திருமந்திரமானது சாதாரணக் கவிதைகளைப் போல் இலக்கிய இன்பத்தை வழங்குவதற்காகச் செய்யப்பட்ட ஒரு காவிய நூல் அன்று. நம்முடைய பாரத நாட்டில் பல்லாயிரம் ஆண்டுகளாக ஞானிகளின் அனுபவ உணர்வில் நிலவி வந்துள்ள தத்துவங்களை உபதேசிப்பதற்காக எழுந்த மறை நூல் அது! தவத்திலிருந்து பிறந்த சொற்களானதால் அவற்றின் ஒலியிலும் நடையிலும் இலக்கியப் பண்போடு ஒரு தனியான சக்தியும் இணைந்திருக்கிறது.

மனித உடம்புக்குள் நிற்கும் மெய்ப்பொருளை நேரிலே கண்டவர் திருமூலர். தாம் அடைந்த பேரின்பத்தை உலக மக்கள் எல்லாம் பெற்று உய்யவேண்டும் என்பது திருமூலருடைய லட்சியம். இதற்கு வேண்டிய பல இரகசிய முறைகள் திருமந்திரப் பாடல்களிலே பொதிந்துள்ளன!

முனிவர் சொல்லுகிறார் :

**நான்பெற்ற இன்பம்**
**பெறுகஇவ் வையகம்!**

"நான் அடைந்து அனுபவித்த அந்தப் பேரின்பத்தை உலக மக்கள் பெறுவார்களாக!" என்று தொடங்குகிறார். இந்த வையக மக்களும் தம்மைப் போலவே அந்தப் பேரின்பத்தை அடைய வேண்டும் என்பது முனிவருடைய ஆசைமட்டுமில்லை, அவருடைய ஆசீர்வாதமும் ஆகும்! "பெறுக!" என்ற சொல்லில் முனிவரின் ஆசையும் வாழ்த்தும் ஒலிக்கின்றன.

**நான்பெற்ற இன்பம்**
**பெறுகஇவ் வையகம்!**
**வான்பற்றி நின்ற**
**மறைப்பொருள் சொல்லிடின் –**

(மறைப் பொருள் – வேதத்துக்குப் பொருளாகிய பரம்பொருள்.)

வானளாவி நின்று, அதையே தனது வெளித் தோற்றமாகக் காட்டுகிற எல்லையற்ற பரம்பொருளின் தன்மையை நான் சொல்வதாயிருந்தால்,

**வான்பற்றி நின்ற**
**மறைப்பொருள் சொல்லிடின்,**
**ஊன்பற்றி நின்ற**
**உணர்வுறு மந்திரம்!**

வானைப் பொருந்தி நிற்கிறது பரம்பொருள். அதுவே இந்த ஊனிலே பொருந்தி நிற்கிற இரகசியப் பொருளும் ஆம்!

இந்த உடம்பினுள் உணர்வாக நிற்கிற தத்துவமே வானமெங்கும் பரவி நிற்கும் பரம்பொருள்! அதைக் காட்டும் மந்திரமும் அந்த உணர்வே.

**ஊன்பற்றி நின்ற**
**உணர்வுறு மந்திரம்-**
**தான்பற்றப் பற்றத்**
**தலைப்படும் தானே**

அந்த உணர்வான மந்திரத்தைப் பற்றப் பற்ற, பிடிக்கப் பிடிக்க, தரிசனப் பேரின்பம் தானாகவே வந்து தலைப்படும் — ஆட்கொண்டு முன்னிற்கும்!

வானில் வியாபித்துள்ள பரம்பொருளே ஊனிலும் மறைந்து நிற்கிறது; உணர்விலே கலந்து உறைகிறது! இந்த உணர்வு நிலையைப்

பற்றிக் கொண்டு சடுபட சடுபடப் பேரின்பமானது தானே வந்து சித்திக்கும். "இந்தப் பேரின்பத்தை நான் பெற்றேன். அதை உலகமும் பெற்றுக் கடைத்தேற வேண்டும்!" என்கிறார் திருமூலர்.

நான்பெற்ற இன்பம்
பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற
மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற
உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத்
தலைப்படும் தானே!

'பற்றப் பற்ற' என்று இரண்டு முறை அடுக்கிச் சொல்வதன் நோக்கம், பயிற்சி செய்து அந்த உணர்விலே நிலைக்க வேண்டும் என்பதைக் காட்டுவதற்கு! தலைப்படுதல் என்ற சொல் இதற்குப் பொருள் கூறும் பழைய உரைகாரர் "மாமணிச் சோதியானை உயிரில் வெளிப்பட்டு நின்றருளல்" என்கிறார்.

तदन्तरस्य सर्वस्य

तदु सर्वस्यास्य बाह्यतः

ததந்தரஸ்ய ஸர்வஸ்ய
தது ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யத:
என்பது உபநிஷதம்.

உடம்புக்கு வெளியே பரவி நிற்கும் பொருளே உடம்புக்கு உள்ளேயும் மறைந்து நிற்கிறது. இந்தப் பொருளைக் கண்டு அனுபவிப்பதற்கு உரிய வழி, இந்த உடம்பின் உணர்வைக் கொண்டு உள்ளும் புறமும் இரண்டற்ற பாவனையில் தியானிப்பதே! இதுவே தவயோகி கண்ட பேரின்பம். அந்தப் பேரின்பத்தை நாமும் கண்டு அனுபவிப்போமாக!

## அமெரிக்காவின் விண் வெளிப் பயணம்

விண்வெளிக்கு மனிதனை அனுப்பி அவனை க்ஷேமமாகப் பூமிக்கு மீட்டுக் கொள்ளும் அற்புத சாதனையை ருஷ்யா சில நாட்களுக்கு முன்பு செய்து காட்டியது. இப்போது அமெரிக்காவும் இதை அதனாலும் செய்ய முடியும் என்பதை நிரூபித்துவிட்டது. ஆலன் பி. ஷெப்பர்டு என்ற 37 வயது அமெரிக்கக் கப்பற்படைத் தளபதியை 115 மைல் உயரத்துக்கு வான வெளியில் அனுப்பி, முன்னேற்பாட்டுப்படி குறிப்பிட்ட இடத்தில் அவர் இறங்கும்படி செய்து விண்வெளிப் பயணப் போட்டியில் அமெரிக்காவும் அதற்கு உரித்தான இடத்தைத் தேடிக்கொண்டு விட்டது. ருஷ்யாவின் முன்னேற்றத்தைக் கண்டு உற்சாகம் குன்றியிருந்த அமெரிக்க மக்களுக்கு இந்தச் சம்பவம் மிக்க மகிழ்ச்சியை அளித்திருப்பதில் வியப்பில்லை. திரு ஷெப்பர்டின் முயற்சி ஆரம்ப முயற்சி தான். இதைத் தொடர்ந்து மேலும் பல புது முயற்சிகள் வேகமாக நடைபெறும் என்று எதிர்பார்க்கலாம்.



ஆனால் ஒரு நாட்டின் சாதனைகளை மற்றொரு நாட்டின் சாதனைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து, சிலவற்றை உயர்வாகக் கருதுவதும், மற்றும் சிலவற்றை இகழ்ச்சியாகக் கருதுவதும் விரும்பத்தகாத அம்சங்கள். சாதாரண மக்கள் ஒருகால் அறியாமையால் இம்மாதிரி ஒப்புநோக்கிப் பந்தய மனப்பான்மையில் பேசினாலும் தேசத் தலைவர்களிடம் இம்மாதிரி மனப்பான்மை இருப்பது வருந்தத்தக்கது. விஞ்ஞான முன்னேற்றத்தில் எந்தப் புது சாதனையை எந்த நாட்டினர் செய்தாலும், மனித வர்க்கத்தினர் நலனுக்கு அது பயன்படுமாறு செய்து கொள்வதே எல்லா நாடுகளின் நோக்கமாக இருக்கவேண்டியது மிகவும் அவசியம்.

# சொர்க்கத்தின் நிழல்

திரு ஜெகசிற்பியன் எழுதிய 'சொர்க்கத்தின் நிழல்' அவருடைய இலக்கியப் பூங்காவில் அமர்ந்த ஒரு மணம் கமழ் ரோஜாவைப் போல் திகழ்ந்தது. படிக்க உகந்த எளிய நடை; அங்கங்கே இழைந்தோடிய உவமைகள்; கதா பாத்திரங்களின் மனக் கொந்தளிப்புகள் முதலியவற்றையே நான் மிகவும் ரசித்தேன். ஆயினும் ஆசிரியர் தமது கதை முடிவில் சிறிது அவசரப்பட்டு விட்டார்.

அழகுப் படைப்பான தேவகியின் வருத்தத்தை எடுத்துரைத்த ஆசிரியர் அறிவு நிரம்பிய விவேகானந்தனின் உள்ளம் எங்ஙனம் விம்மித் தத்தளிக்கிறது என்பதை விண்டுரைக்க மறந்து விட்டார். கோமதியின் உள்ளக் குமுறல்கள் மிகவும் அழகாகச் சித்திரிக்கப்பட்டு, படிப்பவரின் உள்ளத்தில் அநுதாப அலைகளை எழுப்பின.

புது தில்லி
4-5-61
நா. இராசாமணி

★

'விவேகானந்தன்-கோமதி, மோகன்-தேவகி' இந்த இரண்டு ஜோடிகளைக் கொண்டு இந்தப் பாவ உலகத்தின் போக்கை, தெளிந்த நீர்போல் சித்திரித்திருக்கிறார் ஜெகசிற்பியன்.

ஆரணி
6-5-61
இளம்பூர்ணன்

★

உதிர்ந்து கிடக்கும் பூக்களை எடுத்துக் காம்புகளில் பொருத்த முயலும் தேவகியை நினைக்கும்போது எங்கள் உள்ளம் படும்பாடு சொல்லத்தரமன்று. அவள் தந்தையும், டாக்டர் ராமநாதனும் நினைத்தது போல் அவள் பைத்தியமா? அல்லவே அல்ல, அவள் ஒரு தெய்வப் பிறவி.

தேவகியினால் சொர்க்கத்தின் நிழலில் களித்திருக்க இயலாமலிருந்தும், வாசகர்களாகிய எங்களுக்கு 'நாவல் உலக'த்தின் சொர்க்கத்தையே காட்டி விட்டாள்.

பட்டணம்
5-5-61
வி. கிருஷ்ணசாமி

★

உதிர்ந்த மலர்கள் என்னும் இரண்டாம் பாகத்துடன் முடிந்த சொர்க்கத்தின் நிழல்' என் மனத்தை விட்டு உதிராது. சமூக நாவல் சொர்க்கத்தின் நிழல் அழியாக் காவியமாகும்.

திருவண்ணாமலை
5-5-61
எழில்வாணன்

★

கவிதை உள்ளம் கொண்ட தேவகிக்காகவும், தன்னம்பிக்கையுடன் விவேகானந்தனை அடையப் பல துன்பங்களுக்குள்ளான கோமதிக்காகவும் இரண்டு சொட்டுக் கண்ணீர் வடித்தேன்.

மேலக்காவனூர்
4-5-61
அ. சிவபாக்கியம்

"சொர்க்கத்தின் நிழல்" ஆசிரியர் கடந்த பத்து மாத காலமாக, 'சொர்க்கத்துக்கு அழைத்துச் செல்கிறேன், அழைத்துச் செல்கிறேன்' என்று கூறிக்கொண்டே எங்களை அழைத்து வந்து—சொர்க்க இன்பத்தையும் எங்களுக்கு அளித்து விட்டு, இறுதியில் எங்களைத் துன்பத்தின் வாயிலான நரகத்துக்குக் கொண்டு வந்து விட்டு விட்டார். என்ன செய்ய?

மாத்தளை, இலங்கை
4-5-61
ச. நாகமணி

★

கானமழை பொழியும் புல்லாங்குழலை ஏந்திய கரங்கள் கோமதியின் மணிக் கழுத்தை எப்படித்தான் நெரித்துக் கொன்றனவோ! "ஹா!" என்று அலறிய கோமதி மண்ணில் சாய்ந்தபோது, என் இதயமே ஒரு கணம் நின்று விட்டது. கதையின் முடிவு பெருத்த ஏமாற்றம்தான் என்னைப் பொறுத்த வரையில்! பாவம்!

சென்னை-23
5-5-61
வி. ரா. சந்திரன்

★

கோமதியைக் கொன்று மோகனசுந்தரத்தைச் சிறைக்கு அனுப்ப ஆசிரியருக்கு ஏன் இவ்வளவு அவசரமோ? இப்பொழுதெல்லாம் கதாசிரியர்கள் கதையின் முடிவில் அதன் நாயகனையோ, நாயகியையோ கொன்று விடுவது எனத் தீர்மானம் செய்திருக்கின்றார்களா, என்ன? ஆனால் சொர்க்கத்தின் நிழல் ஆசிரியர் என்ன செய்தாலும், கதை இனிக்கத்தான் செய்கிறது.

பொள்ளாச்சி
5-5-61
பி. என். ஆறுமுகம்

★

மூல சக்தியாகிய இயற்கை, பலதிறப்பட்ட மனிதர்களைப் படைத்துப் பொம்மலாட்டமாக ஆட்டி வைத்து எதிர்பாரா விதத்தில் அழித்து, முடிவுகட்டி விடுவதுபோல், ஆசிரியரும், வாசகர்களுடன் தாம் சிருஷ்டித்த பாத்திரங்களை நெருங்கிப் பழகச் செய்துவிட்டு, திடீரென்று முடித்து விட்டது வெகுநேரம் வரை உள்ளத்தில் ஒருவித உணர்ச்சியை, உலகம் மாயம் என்ற வேதாந்தக் கருத்தை நிலவச் செய்து விட்டது.

செங்கல்பட்டு
4-5-61
வி. இராமமூர்த்தி
என். ராதா

★

ஏமாற்றம், சோகம், கண்ணீர் இம் மூன்றையும் ஒருங்கே கொடுத்தது எது என்றால், சொர்க்கத்தின் நிழல் நாவல்தான். மூன்று ஜோடி காதலர்களுக்கும் கடைசியில் முடிவு ஏமாற்றம். எல்லாரின் முடிவும் இப்படி அமங்கலமாகி யிருக்க வேண்டாம்!

திருமலைராயன்பட்டினம்
4-5-61
டி. ஸ்ரீதரன்

# முதல் மலர்

வீ. சுவாமிநாதன்



அபிராமி அடுக்களையில் தணல் அடுப்புப்பற்ற வைத்துக் கொண்டிருந்தாள். சுழல் சுழலாய் எழுந்த புகையின் நெடியில் மூச்சுத் திணறியது. விசிறியை எடுத்து விசிறியதும் செந்தழல் கணகணத்தது. சிறியதும் பெரியதுமாய்க் குருவி இறக்கைகள் போல் தீச்சுவாலைகள் குதித்துச் சிரித்தன.

குழந்தை கோகிலா தாயின் அருகே வந்து நின்றாள். பிஞ்சுக் கரங்கள் அபிராமியின் கழுத்து வளைவில் மெல்லப் படர்ந்தன. தொடர்ந்து பூப் போன்ற மென் கன்னம் அபிராமியின் கன்னத்தில் உராய்ந்து குறுகுறுத்தது. சிலிர்ப்பு தாங்கவில்லை.

அத்தனை சேஷ்டைகளுக்கும் அர்த்தம் அபிராமிக்குத் தெரியும். மணி மூன்று அடித்து விட்டது. கோகிலாவுக்குப் பசி கிள்ளுகிறது. பால் காயக் காத்திருக்கிறாள் அவள்.

இன்று நேரந்தான் ஆகிவிட்டது. ஏதோ நினைவுகளோடு உட்கார்ந்து கொண்டிருந்ததில் மணி ஆனதே தெரியவில்லை. வீட்டோடு வீடாய், தன் கண்ணுக்குக் கண்ணாய் வளர்ந்த மாதவன் வீட்டை விட்டுச் சென்றதிலிருந்தே இப்படித்தான். எதுவுமே நேராக நடக்க வில்லை; நேரத்துக்கு நடக்கவில்லை.

அவசரம் அவசரமாய்ப் பாலைப் பாத்திரத்தில் ஊற்றி அடுப்பிலேற்றினாள் அபிராமி. பால் காய்ந்த பிறகு 'டிபன்' செய்தாக வேண்டும். அன்னம் வடித்தாக வேண்டும். சுகன்யா இப்போது கல்லூரியிலிருந்து திரும்பி வருவாள். ரமணியும் கோபாலனும் கூட ஆபீஸிலிருந்து வருகிற நேரந்தான். அவர்களின் பின்னாலேயே சுகன்யாவின் அப்பாவும் வந்தாகிவிடும். அத்தனை பேருக்கும் பதில் சொல்லியாக வேண்டும். இருந்தும் கை கால்கள் ஏனோ ஓடவில்லை.

"அம்-மா!" இளம் முகம் சிணுங்கியது.

"பசிக்கிறதா, கண்ணு?" கன்ன மிருதுவில் உதடுகளைப் பதித்தவாறே தாய் கேட்டதும், குழந்தையின் உதடுகள் பிதுங்கிக் கருவிழிகள் சுழன்றன — 'ஆமாம்' என்ற பாவனையில்.

"கொஞ்ச நேரம் இரு. பாலைத் தந்துவிடறேன்."

கோகிலா தாயின் அணைப்பிலிருந்து விலகி ஜன்னலண்டை சென்று நின்றாள். தளிர் விரல்கள் கம்பிகளைப் பற்ற எழில் முகம் கம்பிகளிடையே பதிந்து சிவந்தது. அப்பால், தோட்டத்தில், பார்த்துப் பார்த்துப் பாதியாய் வளர்க்கிருந்த பயிர்ச் செடிகளைப் பார்த்தவாறே நிற்கையில் அந்தக் குழந்தையின் உள்ளத்தில் கூடப் புரியபடாத ஏக்கம் குமைந்து குமைந்து தான் எழுந்தது. மாதவன் சென்றதிலிருந்து பயங்கரமான ஒரு வெறுமை வீட்டையே சூழ்ந்து கொண்டிருக்கிறது.

அடுப்படியில் உட்கார்ந்தவாறே கோகிலாவின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள் அபிராமி. குழந்தையின் எண்ண ஓட்டங்கள் முகத்திலேயே தெளிவாகத் தெரிந்தன, நீரில் விழுந்த கைப்பொருள் வெய்யில் இறங்குகையில் தெரிவது போல.

பாவம், கோகிலா! மாதவன் மேல் அத்தனை பிரியம் அவளுக்கு. அவளுக்குத்தான் கோகிலா என்றால் உயிர். அவளைத் தரையிலே விடாமல் சதா தூக்கிக் கொண்டு திரிவான்.

இந்த நேரத்தில் அவன் எங்கே நிற்கிறானோ?

பாத்திக்குப் பாத்தி நகர்ந்த குழந்தையின் பார்வை சட்டென்று அந்த ரோஜாச் செடியின்மேல் தங்கியது.

''....அம்மா! ரோஜாச் செடி வாடிப் போகிறதம்மா !......'' மழலையாய் அவன் தெரிவித்தான். அபிராமி அதிர்ந்து போய் நிமிர்ந்தாள்.

'' ....நிஜமாகவா ?....''

'' ...வந்து பாரேன் !....''

தணல் அடுப்பின் பீடத்தில் நெருப்புப் பொறிகள் உதிர்ந்தன. தாங்க முடியாத தாபம் அபிராமியைத் திடீரென்று கவ்வியது. அவசரம் அவசரமாய் ஜன்னலண்டை போய்ப் பார்த்தாள். இமை விளிம்புகளில் நீர் முத்துக்கள் நிறைந்தன.

மாதவன் வைத்த செடி அது. அவன் அரும்பாடுபட்டு வளர்த்தான். மண்ணைக் கொத்தி, குழித்து, கன்றை ஊன்றி அதில் அவன் நீருற்றும்போது கோகிலா அந்தச் சேற்று நீரைக் கையால் அளைந்து விளையாடுவாள். எட்ட நின்று சுகன்யா வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். அதே செடி இன்று வாடி வதங்குகிறது. தினந்தினம் நீர் ஊற்றி வளர்த்தவன் அவன். வீட்டைவிட்டுப் போய் விட்டான். அந்தச் செடியைக் கவனிக்க வேறு ஆளில்லை.

அருந்த நீர்கூட இல்லாமல், இந்த ரோஜாச் செடியைப் போல, எங்கே அவன் வாடுகிறானோ?

எண்ண எண்ணக் கண்களில் நீர் புரண்டது. தான் வைத்த செடிக்கு நீர் ஊற்றும் பொறுப்பு இருந்தவரைத் தவறாமல் நிறைவேற்றி விட்டான் அவன். 'நான் வளர்க்கிறேன்' என்று சொல்லி அவனை ஆளாக்கும் பொறுப்பை அன்று ஏற்றுக் கொண்டாளே அபிராமி, அதை எவ்வளவு தூரம் நிறைவேற்றியிருக்கிறாள்? அன்பு மகளாய் சுகன்யாவும், கணவனுமாக 'வீட்டை விட்டுப் போ!' என்று அவனுக்கு வாசலைக் காட்டிய போது மூச்சோடு மூச்சாய்ப் பேச்சு ஒடுங்கி எதையும் தடுக்க மாட்டாமல் தானே நின்று விட்டாள் அவள்!

எட்டு வருஷங்கள் ஆகிவிட்டன, அந்த நிகழ்ச்சி நடந்து. இருந்தும் நேற்றுத்தான் நடந்ததுபோல் மனத்திரையில் நிழலாடுகிறது. அப்போது மாதவனுக்குப் பதினைந்து வயது. குழந்தைத்தனத்தைத் தவிர வேறெதுவும் தெரியாத பருவம். கோகிலா பிறக்கவில்லை. ரமணி, கோபாலன், சுகன்யாதான். சுகன்யா மாதவனை விட இரண்டு வயது சின்னவள்.

மாதவனின் தாயார் ஜானகம் அபிராமியின் தூரத்து உறவினள். அவளுடைய உயிர்த்தோழிகூட. அரும்பிலேயே கருகிப் போய் அநாதையாய் நின்றான், மாதவனைப் பிடித்துக் கொண்டு. இடிபோல் ஏற்பட்ட துக்கத்தைத்தாங்க ஜானகத்தின் நெஞ்



சில் இடமில்லை. ஏக்கத்தில் மருகி மருகியே சீக்கிரத்தில் மறைந்து போனாள். உயிர் பிரியும் நேரத்தில் மாதவனை அபிராமியின் கையில் ஒப்படைத்தாள். அபிராமியின்மேல் அவளுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை.

“நான் பிழைக்க மாட்டேன், அபிராமி! பதியன் போட்ட ரோஜாச் செடியைத் தாய்ச் செடியிலிருந்து பிரித்துத் தருவதைப் போல் நான் மாதவனை உன்னிடம் ஒப்படைக்கிறேன். அவனை எப்படியாவது நீ பொறுப்பாக வளர்த்து ஆளாக்கிவிடு. இனிமேல் நீதான் அவனுக்கு அம்மா, அப்பா, சகலமும்....”

சொன்னவள் சொன்னபடியே உடனேயே சென்றுவிட்டாள். ஆனால் அவள் சொல்லிச் சென்ற சொற்கள் யாரோ இப்போதுதான் சொல்வது போல் திரும்பத் திரும்பக் காதில் ரீங்காரமிடுகின்றன. வெட்ட வெளியில் விளங்காத சூன்யத்தில் நின்று கேலியாக நகைக்கிறாளா ஜனகம்?

வீட்டின் புறக்கடையில் அவள் கையால் கிழங்குகளைப் பதித்ததும் வாழைக் குருத்துக்கள் மண்ணைக் கீறிக் கொண்டு எழுந்தன. தாய்மையில் பெண்ணின் மேனி மேடிட்டுத் தலைகுனிந்து போவதுபோல் பூவும் குலையுமாய் அவை இப்போது பூரித்துக் குலுங்குகின்றன. பாத்தி பாத்தியாய்த் தண்டுக் கீரைகளும், தக்காளிப் பழங்களும் கன்னிப் பெண்ணாய் மின்னி, கண்ணைப் பறிக்கின்றன.

தன் அன்பின் ஆதரவான தழுவலில் விகசிக்கும் மெல்லியலாய் அவள் கைப்பட்டதும் செடி கொடி வர்க்கம் செழித்து வளரும் காரணம் அவளுக்குத் தெரியும். கைராசி என்று மட்டும் சொல்லிவிட முடியாது. கடுமையான உழைப்பும் கருத்தும்தான் உண்மைக் காரணம்.

காலைக் கருக்கலில் கண் விழித்துக் கிணற்றடிக்கு வந்து விடுவாள். கடகடவென்று உருளும் ஜகடையில் ஓடும் கயிற்றில் குடம் குடமாய் நீர் சேர்ந்து வாய்க்காலாய்ப் பாத்திக்குப் பாய்கையில், செழித்த புஜத்தில் திரண்ட சதைக்கோளம் மேலும் கீழுமாய் இறங்கி ஏறும். கிணற்றையே வற்ற வைக்கும் இந்தக் கைகளுக்குச் சோர்வே கிடையாதா என்று அபிராமி ஆச்சரியப்படுவாள்.

“இல்லை அக்கா! நேற்றுத்தான் எருப் போட்டிருக்கிறேன். இன்று இத்தனை தண்ணீர் பாயாவிட்டால் எரு நிலத்தில் பிடிக்காது...” என்று கூறுவான் அவன் சிரித்துக் கொண்டே.

‘அக்கா!’ என்று அத்தனை அன்பாக அவன் அழைக்கும் போதெல்லாம் அபிராமி நெகிழ்ந்து போவாள். நெஞ்சில் பரிவு புனலாய்ப் பொங்கி நிறையும். தனக்கென்று தன்னுடன் பிறந்தோர் யாரும் இல்லாத குறைக்கு இது இதமாய் இருக்கும். அந்தச் சகோதர வாஞ்சை இணையில்லாததுதான்.

அடிக்கடி தன் கணவனிடம் கூட அவள் அதைச் சொல்வதுண்டு. ‘நான் கழித்து எங்கள் அம்மாவுக்கு ஒரு பிள்ளை பிறந்திருந்தால் அவனுக்கு இப்போது மாதவன் வயசு தானே இருக்கும்!...மாதவன் மாதிரிதானே இருப்பான் அவனும்...”

அப்போதெல்லாம் கணவனின் புருவங்கள் குவிந்து வளைவது அபிராமிக்குத் தெரியும். அவர் அதுபோன்ற வாஞ்சையெல்லாம் ஒரு பிரமை என்று எண்ணுபவர். விளங்காத அன்பின் ஆதாரங்களைப் புரிந்து கொள்ள அவர் முயன்றதில்லை. மும்முரமாய்ப் பணம் சேர்க்கும் ‘பிஸினஸ்’ — வேலையில் புரிந்து கொள்ள அவகாசமில்லை.

மனைவி ஏற்றுக்கொண்டு வந்த பொறுப்பைப் பற்றி அவர் குறை கூறியதில்லை. மாதவன் வீட்டோடு வளர்வதைப் பற்றி மனத்தாங்கலும் இல்லை. ‘சொன்னதை அவன் செய்து வந்தால் சரி’ என்ற மனோபாவம். அவனை ஒரு பொருட்டாகக் கருதவில்லை. சரிசம உரிமை தரத் தயாரில்லை. நெருங்கிய ரத்த சம்பந்தம் இல்லாததால் இந்த அந்தஸ்து நேர்மையாய் நிலைக்க முடியாது என்பது அவர் தீர்மானம்.

எத்தனையோ முயன்றும் கணவன் மனத்தை மாற்ற முடியாமல் அபிராமி தோற்றுத்தான் போய்விட்டாள்.

ஊன்றிய ரோஜாச் செடிக்கு ஒழுங்காக நீர் ஊற்றினால் வளர்வதுபோல் இன்று வாலிபத்தின் முதிர்ச்சியில் களையும் கம்பீரமுமாய் ஆகிவிட்டான் மாதவன். அதுவே அபிராமிக்கு உள்ளூறப் பெருமையாய்த் தானிருந்தது.

ஆனால் மாதவனுக்கு ஏனோ படிப்பில் நாட்டமில்லை. ஒழுங்காகத் தேறிவர முடியவில்லை. கடைசியில் அவளுடைய கணவன் பொறுமை இழந்து முற்றுப்புள்ளி வைத்துவிட்டார். அவன் வருந்தவில்லை. அவனுடைய நாட்டமெல்லாம் வேறெங்கேயோ தங்கி நிற்கிறது என்றுதான் அபிராமிக்குத் தோன்றியது.

மாதவனுடனே ரமணியும் கோபாலும்தான் வளர்ந்தார்கள். சுகன்யாவும்கூட. வளர்ச்சியில் உடல் முறுக்கேறி நிற்காவிட்டாலும் உள்ளம் முரண்பட்டு நின்றார்கள். படிப்பில் பிள்ளைகளும் பூஜ்யம்தான். ஆனால் அப்பாவின் ‘பிஸினஸ்’ கர்வமும், மமதையும் தந்தது.

அனாதையாய் நின்ற மாதவன் அவர்கள் கண்களில் அலட்சியமாய்ப் பட்டான். பேச்சாலும் செயலாலும் அவனைக் கோணி ஊசியாய்க் குத்தி வதைப்பதில் அவர்களுக்கு மகிழ்ச்சி. எண்ணிலடங்காது அவர்கள் ஏவிய வேலைகள் ‘வீட்டில் அவன் ஒரு பணியாள்’ என்று குறிப்பிடாமல் குறிப்பிட்டுக் கொள்ளும்.

மாதவன் புன்னகை மறையாது அத்தனையையும் தாங்கிக் கொள்வான். பண்பும் பணிவுமாய்ப் பதில் மொழிகள் அமையும்.

அம்மாதிரி சமயங்களில் அபிராமி குழப்பமடைந்து தடுமாறுவாள். கண்கள் கலவரத்தில் தாழும். மாதவனுடைய பார்வை நிராதரவாய் அவள்மேல் பாய்வது போன்ற உணர்வு ஒன்று தாக்கும். கணவனிடம் பயமும், பிள்ளைகளை அடக்கத் திறனின்மையுமாய்த் தவிப்பாள். வேறு வழி?

ஒரு நாள். பண்டிகை தினம். ஆள் படை அமர்த்தி அமர்க்களமாய்க் கொண்டாட ஏற்பாடு. சமையற்கார அம்மாள் உடனே மூன்று குண்டு விறகு வேண்டும் என்று கேட்டு விட்டாள்.

மாதவன் நிலைப்படிக்குத் தோரணம் கட்டிக் கொண்டிருந்தான். ரமணி ஈஸிசேரில்

# ஸ்வாமிமலை ஸ்ரீ ஸ்வாமிநாத ஸ்வாமி கோடி அர்ச்சனை

## 6 - 5 - 1961 வரைக்கான கணக்கு விவரம்

| | | வரவு ரூ. | ந.பை. | செலவு ரூ. | ந.பை. |
|---|---|---|---|---|---|
| **வரவு :** | | | | | |
| அர்ச்சனைக் கணக்கு | ... | 91 622 | 51 | | |
| ஸ்வர்ண புஷ்பம் கணக்கு | ... | 1,04,912 | 22 | | |
| ஸ்வர்ண மாலைக் கணக்கு | ... | 58,411 | 37 | | |
| பூர்த்திக் கணக்கு | ... | 8,485 | 79 | | |
| விவரமில்லாத வரவு | ... | 355 | 00 | | |
| **செலவு :** அர்ச்சனை | | | | | |
| அர்ச்சனையும் நைவேத்தியமும் (டிக்கட்டுகள்) | ... | | | 10,828 | 29 |
| குருக்கள், சாஸ்திரியார் ஆகியவர்களுக்குச் சம்பாவனை | ... | | | 10,099 | 50 |
| நிர்வாகச் செலவுகள் | ... | | | 8,649 | 00 |
| சேவார்த்திகளைக் கோவிலுக்கு அழைத்து வந்து கொண்டுபோய் விட பஸ் சத்தம் | ... | | | 6,650 | 00 |
| மளிகைச் சாமான்கள் (நைவேத்தியம்) | ... | | | 26,293 | 19 |
| தேங்காய், பால், புஷ்பம், வாழைப்பழம், மூங்கில் தட்டு முதலியன | ... | | | 8,249 | 45 |
| விளம்பரம், அச்சுக் கூலி, ஸ்டேஷனரி தபாற் செலவு | ... | | | 5,607 | 62 |
| இரண்டு மின்சார விசிறிகள், வெள்ளிக் குத்துவிளக்கு உபயம் | ... | | | 645 | 95 |
| இதர செலவுகள் | ... | | | 620 | 33 |
| ஸ்வர்ண புஷ்பம் | | | | | |
| விலை : தங்கம், செய்கூலி உட்பட | ... | | | 85,886 | 87 |
| அபிஷேகம், குருக்கள் சம்பாவனை | ... | | | 675 | 00 |
| கோவில் டிக்கெட் | ... | | | 3,017 | 00 |
| விளம்பரம், அச்சுக்கூலி, தபாற் செலவு இன்ஷ்யூரன்ஸ் முதலியன | ... | | | 2,334 | 83 |
| சஹஸ்ரநாம ஸ்வர்ண புஷ்ப மாலை | | | | | |
| ஸ்வர்ண மாலை, வைர பெண்டலாக்கு, திலகம் | ... | | | 51 886 | 35 |
| விளம்பரம், அச்சுக்கூலி, தபாற்செலவு முதலின | ... | | | 1 383 | 66 |
| வடஆவுருக்கான பிரயாணச் செலவு | ... | | | 2 295 | 85 |
| பூர்த்தி (ஒரு வார உற்சவம்) | | | | | |
| ஹோமம், அபிஷேகம், அலங்காரம் | ... | | | 4,545 | 15 |
| ஸ்வாமி புறப்பாடு (வீதிவலம்) | ... | | | 1,240 | 50 |
| பூர்த்தி விழாவின்போது சமாராதனைச் செலவு | ... | | | 10,018 | 28 |
| பந்தல் அலங்காரம், மின்விளக்குகள் | ... | | | 802 | 20 |
| ஸ்காந்தம், சம்பாவனை உள்பட | ... | | | 820 | 50 |
| விளம்பரம், தபாற் செலவு | ... | | | 1 298 | 37 |
| குருக்கள், வேத பாராயணம், ஓதுவார், கோவில் சிப்பந்திகளுக்கான சம்பாவனை | ... | | | 17 256 | 00 |
| மேற்கண்டவர்களுக்குக் கோடிவஸ்திர தானம் | ... | | | 1 202 | 81 |
| போக்குவரத்துச் செலவு | ... | | | 271 | 25 |
| கும்பாபிஷேகக் கமிட்டி சத்திரத்திற்குக் கொடுத்தது | ... | | | 501 | 00 |
| கணக்குகளைப் புத்தகமாகப் பிரசுரம் செய்தது | ... | | | 707 | 94 |
| மொத்தம் | | 2,63,786 | 89 | 2,63,786 | 89 |

ஸ்ரீ ஸ்வாமிநாத ஸ்வாமி கோடி அர்ச்சனைக் கமிட்டி கும்பகோணம், 6-5-61

கணக்குகள் தணிக்கைக் குட்பட்டது

R. கந்தசாமி மூப்பனார், தலைவர்
N. R. ராமானுஜம், காரியதரிசி
Dr. M. K. சுப்ரமணியம், டிரஷரர்

சாய்ந்து தூங்கி வழிந்து கொண்டிருந்தான். அதனால் அவனை அழைக்கக் கடைக்குப் போகச் சொன்னாள் அபிராமி. ரமணியின் நெற்றி சுருங்கி ரேகைகள் தோறுங்கின.

"ஊஹூம், என்னாலே முடியாது. இப்போது பத்து மணிக்கு எனக்கு 'கிரிக்கெட் மாட்ச்' இருக்கிறது. போயாகணும்..."

"விறகு அவசரமாய் வேணுமே ரமணி.... வாங்கிக் கொடுத்துவிட்டு 'மாட்ச்'சுக்குப் போயேன்!"

"...நேரமாயிடும்..."

"அனுப்ப வேறு யாருமில்லையே!..."

"..ஏன் மாதவனைப் போகச் சொல்லேன். சாப்பிட்டுவிட்டு வெறுமனே தூங்கிக்கொண்டு தானே இருக்கிறான்? அவனே தூக்கிக் கொண்டுகூட வந்து விடுவான். தூக்குக்கூலியும் மிச்சமாகும்..."

"ரமணி!" அபிராமியின் சீறல் ரமணியின் காதில் விழுந்திருக்க முடியாது. சொன்னதைச் சொல்லிவிட்டு, சொன்ன வேகத்தில் வெளியே போய் விட்டான்.

வேதனையில் தாழ்ந்து மறுபடியும் நிமிர்ந்த போது மாதவன் அவளெதிரே சலனமின்றி நின்றுகொண்டிருந்தான்.

"பணத்தைக் கொடு, அக்கா! நான் இதோ வாங்கி வந்து விடுகிறேன்!..."

பதினைந்தாவது நிமிஷத்தில் தலையில் பெரிய விறகுக் கட்டுடன் ஒவ்வொரு நிலைப்படிக்கும் குனிந்து குனிந்து உள்ளே வந்தான் மாதவன். மேடும் பள்ளமுமாய்ப் புடைத்து விம்மும் தசை நாளங்களில் துளிர்த்த வியர்வை நடுமுதுகு வாய்க்காலில் வெள்ளமாய்ப் பெருக்கெடுத்தோடியது.

"...ரமணி சொன்னானே என்று தூக்கிக் கொண்டு வருகிறாயா, மாதவா?..."

"...அப்படியெல்லாம் இல்லை, அக்கா! இந்த வீட்டுக்கு என்னால் இந்த லாபம் இருக்கட்டும் என்றுதான்..."

தலைச் சுமையைத் தள்ளிவிட்டு நெற்றி வியர்வையைத் துடைத்து விட்டபடி மாதவன் நிமிர்ந்தபோது ரமணியின் டப்பா சமையலறைக்குள் நுழைந்தாள்.

"நேற்று என் 'பாண்டு'க்கும் 'ஷர்ட்'டுக்கும் இஸ்திரி போட்டு வைக்கணும் என்று சொன்னேனே, மாதவா!..."

மாதவன் கண்களில் தயக்கம் படர்ந்தது.

"...மறந்து விட்டேன். இப்போது போட்டுத் தருகிறேன்..."

"...இப்போதும் வேண்டாம். நல்ல முகூர்த்தம் பார்த்துக் கொண்டு அவகாசமாய்ப் போடலாம்..நான் ஒரு மடையன். உன்னிடம் போய் ஒரு வேலை சொன்னேனே?..."

மாதவன் முகம் ஒரு கணம் வாடியது. அபிராமியால் குறுக்கிடாமல் இருக்க முடியவில்லை.

"புண்படுகை நாளும் அதுவுமாய் ஏன் அவனைக் கோபிக்கிறீர்கள்?..."

"நகர்ந்து போ, அபிராமி! உன் சொல்லைக் கேட்டு உதவாக்கரைகளையெல்லாம் வீட்டில் வைத்துக்கொண்டதால் இப்போது உபத்திரவம் தாங்கவில்லை..."

அவர் போய்விட்டார். கொஞ்ச நேரம் அபிராமிக்கு மாதவனுடைய முகத்தைப்




"எங்க வீட்டுக்குக் குடி வந்தேன்னு காற்று சென்டைப் பிய்ச்சிண்டு போய்விடும்! ஆமா!"

"அடி அம்மாடியோவ்! அப்படின்னு நான் இங்கே வரல்லே!"

பார்க்கத் துணிவில்லை. அந்த முகச் சாயலில் அவளுடைய அன்புத் தோழி ஜானகத்தின் முகம் தெரியும்.

அழற் பொறிகளாய்க் கொட்டிய வார்த்தைகள் அவன் நெஞ்சைத் தீய்க்குமே - ஏன் நான் கூட்டுச் சேர்ந்து கங்கணம் கட்டிக் கொண்டாற் போல் எல்லோரும் அவன் உயிரை சட்டியாய்த் தாக்குகிறார்களோ? நினைக்கும் போதே கண்ணீர் அலைபுரண்டது.

அறையின் தனிமையில் அவனை விட்டுவிட்டு அபிராமி அகன்றாள். நிலைப்படியைத் தாண்டியிருக்க மாட்டாள். தனக்குத் தானே மாதவன் பேசிக் கொள்வது அவள் செவியில் விழுந்தது. வேறு யாரும் அருகில் இல்லை என்ற தைரியத்தில் அவன் சற்றே வாய் விட்டுப் பேசிக் கொண்டிருக்க வேண்டும்.

"சுகன்யா! சுகன்யா! நீ என்னுடைய சுகன்யா தானே?"

விசும்பல் இடையே ஒடியது.

"சுகன்யா! உன் அப்பாவும் ரமணியும் என்னை இப்போது தாராளமாய்த் திட்டினார்கள்.. அடடே ஏன் அழறே? நானே அழலியே?"

அபிராமிக்குச் சிலிர்த்தது. மன இயல்புகள் புரிந்தது. அத்தனையும் புரியாவிட்டாலும் புரிவது போலிருந்தது. ஆமாம், அருகே சுகன்யா இல்லாத போதும் அவளை அருகில் இருப்பதாய்ப் பாவித்துக் கொண்டு அவளிடம் தன் உள்ளக் குமுறலைச் சொல்லி ஆறுதலடையும் அவன் உள் அர்த்தம் அப்படித்தானே இருக்க வேண்டும்?

இனி மேல் துயர் கொண்ட நேரத்தில் பரிவு காட்டும் அக்காவின் ஆதரவு மட்டும் அவன்



மனைவி : நான் கேட்டா காலணாக் கொடுக்க உங்களுக்கு மனசாகல்லே. ஆனால் அவன் கேட்டவுடனே பர்ஸை அப்படியே தூக்கிக் கொடுக்கிறீங்களே. இது நியாயமா ?

---

நெஞ்சை நிறைவுபடுத்த முடியாது. பூப் பூப்பது போல் அவனுக்குத் தெரியாமல் அவன் உடலின் ஏதோ ஓர் இடத்தில் எப்போதோ, எப்படியோ வடிவமே இல்லாமல் விசுவரூபம் எடுத்து விட்ட ஓர் உணர்ச்சி வேறு எதையோ நாடுகிறது. அடிபட்ட புறாவாய்த் துடிக்கும்போதெல்லாம் தனிமையில் அமர்ந்து சுகன்யாவின் பேரைத் திரும்பத் திரும்பச் சொல்லி அனுபவிப்பது அவனுக்குக் கரும்புச் சாறாய்த் தித்திக்கிறது. அவள் தன்னருகே நிற்பது போன்ற கற்பனையிலேயே நெஞ்சு பரவசத்தில் விம்முகிறது. மூச்சுக் காற்றோடு கலந்து ஒரு புது மணம் பரந்து தீச்சொற்கள் சுட்ட இடங்களில் மருந்திட்டு ஆற்றுகிறது.

எல்லாமின் எல்லைக்கோடுகளைக் கடந்த இயற்கை நியதி அந்த உணர்ச்சி! ஆனால் அந்தஸ்து மோகத்தில் எத்தனை பேருக்குப் புரியும் இது?

கற்பனையே இத்தனை இனிக்கும்போது கண்ணெதிரே சுகன்யாவைக் காணுகையில் அவன் மனம் எத்தனை தடுமாறும்? அவளோடு அதே வீட்டில்தானே வாழ்கிறான் அவனும்? அப்போதெல்லாம் அவன் நெஞ்சோட்டத்தில் இனி பிரியும் எண்ணம்தான் என்ன? நெஞ்சின் வெம்மையைத் தாங்க முடியாமல் நினைவு தவிக்கத்தானே தவிக்கும்? அத்தனை உணர்ச்சிக் கொந்தளிப்புகளையும் உதடுகளிடையே அடக்கிக் கொண்டு, வெளிப் பூச்சாக அவளோடு பேச எப்படி அவனால் முடிகிறது?

வெளிப் பூச்சாகத்தான் வினைய வரவேண்டும் என்பது விதியாக அமைந்த பிறகு, உள்ளும் புறமும் ஒன்றாய் எப்படி அவனால் இருக்க முடியும்? நெஞ்சில் அரும்பிய ஆசைத் தளிரை யாரிடம் போய்ச் சொல்வான்? என்னவென்று சொல்வான்?

அனாதையாய் அடிமையாய், அலட்சியப் பொருளாய் அவன் வளரும் வீடு அது. அந்தஸ்தில் அலட்சியப் போக்கோடு அழகோவியமாய் அந்த வீட்டில் வளரும் செல்வம் சுகன்யா. தன் ஜீவநாதத்தின் ஆதாரத் தளிராய் அவளைத் தேர்ந்தெடுக்க அவனுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? என்றாவது தன் ஆசை நிறைவேறும் என்று நப்பாசைப் படுவதில் என்ன அர்த்தமிருக்கிறது?

விரும்பியது கிடைக்காது என்று உணர்ந்த பின்னும் விரும்பியதை விலக்கவும் மாட்டாமல் சகிக்கவும் மாட்டாமல் அவன் இதய விகம்பம் ஒலிதான் 'சுகன்யா சுகன்யா' என்று எழுகிறதோ? இணையப் போவதில்லை என்று தெரிந்த பின்னரும் பிரிய முடியாது என்பதால்தான் அந்த வீட்டில் அத்தனை சுடுசொற்களையும் தாங்கிக் கொண்டு அவன் வாழ்கிறானோ?

இந்த விசித்திரக் கொடுமைதான் என்ன? தன் படைப்பைத் தானே கசக்கிப் பிழிவதில் தெய்வம் காணும் இன்பம்தான் என்ன?

உயிராய் இருந்து கொண்டு உள்ளத்தில் இல்லாத ஆசையை யெல்லாம் ஏன் தோற்றுவிக்க வேண்டும்? ஏன் அழிக்க வேண்டும்? 'எனக்கு அவள் வேண்டாம். அவள் பெயரின் சுவை போதும்; இணைப்பு வேண்டாம். பிரிவில்லாமல் இருந்தால் போதும்! அன்பு வேண்டாம், அடிமையாக இருக்க அனுமதித்தால் போதும்' என்று தேற்றிக் கொண்டிருக்கிறானே அவன் — அப்படித் தேறுவதற்கு எத்தனை பாடுபட்டிருக்க வேண்டும்?

அன்பே ஒரு வேதனைதான். எப்படி வளர்ந்தாலும் எந்த வடிவம் கொண்டாலும் இதயத்தை உறித்துப் பிழியும் சுபாவம்தான் அதற்கு.

எடுக்க எடுக்கக் குறையாமல், அடுக்க அடுக்க ஓயாமல் எழும் எண்ண வேகத்தில் அபிராமி தவிக்கிறாள். குழந்தை கோகிலா தோளைப் பற்றி உலுக்கச் சற்றே தன் நினைவு கொள்கிறாள்.

''ரோஜாச் செடி வாடிப் போகிறதுன்னு சொன்னேன். தண்ணி கொட்டாம ஏதோ யோசிக்கிறியே, அம்மா!''

ஒரு கையில் தூக்க மாட்டாமல் சொம்பு ஜலத்தைத் தூக்கிக் கொண்டு நிற்கிறாள் கோகிலா. பிஞ்சு விரல்களின் நடுக்கத்தில் நீர் ததும்பித் தரையில் வளைந்து நெளிந்து ஓடுகிறது.

''எனக்குக் கைவேலையா யிருக்கிறது. நீயே போய்க் கொட்டு. ஜன்னல் வழியாக நான் பார்க்கிறேன்.''

சொம்பைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு உடலைப் பின் தள்ளியபடி தளர் நடையில் தோட்டத்துக்குச் செல்கிறாள் கோகிலா.

ஊற்றிய நீர் வெடிப்புக்குள் இறங்கிய போது மேற்பரப்பில் கொப்புளங்கள் கிளம்பி உடைகின்றன. மேலும் இரண்டு சொம்பு நீர் ஊற்றியாகிறது. கோகிலாவின் செவ்விதழ்கள் பூரிப்பில் துடிக்கின்றன.

நேரம் வேகம் வேகமாய் ஓடிக் கொண்டிருக்கிறது. அவசரம் அவசரமாய் ஆகவேண்டிய காரியங்களைக் கவனித்தால்தான் முடியும்.

கோகிலா ஆதங்கத்துடன் செடியையே பார்த்துக் கொண்டு நிற்பது ஜன்னல் வழியே தெரிந்தது. மலரனைய அவள் நயனங்களிலும் எத்தனை தயங்கியது.

இந்த ரோஜாச் செடி எப்போது பூப் பூக்கப் போகிறது என்று யோசிக்கிறானோ? நீருற்றி வளர்த்த மாதவன் இல்லாததால் பூக்காமலே போய் விடும் என்ற பயமோ?

கோகிலாவுக்கு ரோஜாப் பூ ரொம்பப் பிடிக்கும். முன் நெற்றிக்கு விழும் கொடுக்குப் பின்னலில் ஒற்றை ரோஜா சொருகிக் கொண்டு விட்டால் ஆனந்தம் தலைகால் தெரியாது. குதிப்பில் கால்தண்டை 'ஜல் ஜல்' என்று ஒலிக்கும். தங்கள் வீட்டிலேயே எப்போது ரோஜாப் பூப் பூக்கப் போகிறது என்று காத்திருக்கிறாள் குழந்தை.

வைத்து வெகு நாட்கள் ஆகியும் ஏனோ அந்தச் செடி பூக்கவேயில்லை. மண்டி வளர்ந்தாலும் மலராமல் நின்ற அதைப் பார்க்கையில் அபிராமி பெருமூச்செறிந்தாள். மாதவன் நெஞ்சில் குதித்த ஆசைகளும் அப்படித்தானல்லவா?

ஒவ்வொரு நாளும் மாதவன் அந்தச் செடிக்கு நீர் ஊற்றுகையில் கோகிலாவும் வந்து விடுவாள். வாளியிலிருந்து இறங்கும் நீர்த் தாரையைக் குவிந்த தன் கைகளின் வழியாகச் செடியின் மேல் பாய்ச்சி விட்டுக் கலகலவென்று சிரிப்பாள்.

வாளியை அவன் நிமிர்த்துகையில் அவளிடம் கேள்வி பிறக்கும்.

"இந்தச் சடி இன்னும் பூக்கவில்லையே?"

"சீக்கிரம் பூத்துடும்."

"எப்போது பூக்கும்?"

"நாளைக்குப் பூக்கும்."

"எத்தனை பூக்கும்?"

"கோடி கோடி பூக்கும்!"

"நட்சத்திரம் மாதிரியா?"

"அவைகளைவிட ஜாஸ்தி."

"அம்மாடா!"

"ஓஹ்ஹோ!"

இருவருக்குமே அலுக்காத விளையாட்டு அது. ஆனால் அந்தச் செடி மட்டும் இன்னும் பூக்கவில்லை. நாளை நாளை என்று எத்தனையோ நாட்கள் ஓடியதுதான் மிஞ்சியது.

அன்றும் அப்படித்தான். செடிக்கு நீர் ஊற்றியபின் கோகிலாவின் கேள்விகளும் மாதவனுடைய பதில்களும் தொடர்ந்தன. தோட்டத்தின் ஒரு மூலையில் அபிராமி அமர்ந்திருந்தது அவர்களுக்குத் தெரியாது.

அப்போதுதான் புதிதாக ஒரு கேள்வியைத் தொடுத்தாள் கோகிலா.

"...முதல் பூ பூத்தா அது யாருக்கு? எனக்குத் தானே?"

மாதவன் தயங்கிப் பதில் சொன்னான்.

"...இல்லே..."

கோகிலாவின் முகப் பொலிவில் கருமேகம் ஓடியது.

"பின் யாருக்காம்?..."

"கன்யா அக்காவுக்கு..." அவன் கண்கள் மலர்ந்து குழைந்தன.

"...ஊஹூம், எனக்குத்தான் வேணும்..." கோபத்தில் உருளும் கண்களில் நீர் முட்டியது. ஆவெனத் திறந்த வாயில் அலாபனை எழுந்தது.

பூங்குழந்தையைத் தன்னோடு அணைத்துக் கொண்டான் மாதவன்.



"கோகிலா, கோகிலா, நீ சமர்த்துக் கோகிலா இல்லே? இரண்டாவது பூ உனக்குத் தரேன்...நான்தானே செடி வைச்சேன். நான்தானே வளர்த்தேன்....எனக்கு ஆசையாய் இருக்கு. எப்படியாவது முதல் பூவைக் கன்யா அக்காவுக்குத் தரணும்னு இருக்கு... அழாதே. கோகிலா, அழாதே...இரண்டாம் பூ உனக்கேதான்..." குழந்தையினும் குழந்தையாய்க் குழந்தையிடம் கெஞ்சினான் அவன்.

அபிராமிக்கு நெஞ்சடைப்புக் கண்டது.

"...இரண்டாம் பூ எனக்கே தரணும்..."

"...நிச்சயமாய்த் தருவேன்..."

"...சத்தியமா?..."

"சத்தியமா!..." மாதவன் கண்களில் வெற்றியொளி தோன்றியது.

கோகிலாவுக்கு என்ன தோன்றிற்றோ, என்னவோ? என்றும் போல் அடம் பிடிக்காமல் அன்று அடங்கிப் போனாள். ஊமை நெஞ்சில் உதித்த அன்பு ஒருவேளை இள நெஞ்சுக்குப் புரிந்திருக்கலாம்.

உண்மையில், குழந்தைக்குப் புரியும் எத்தனையோ பெரியவர்களுக்குப் புரிவதில்லை.

அபிராமி ஏங்கினாள். 'ஐயோ, மாதவா, ஏன் இப்படி இருக்கிறாய்? ஒரு தலையாய் வளரும் இப்பிரேமையில் உனக்கு என்ன கிடைக்கிறது? இது எதில் கொண்டு போய் விடும்?...'

அதற்குப் பின் கல்லை இட்டதும் ஜலத் தட்டுக்குக் குமிழ்கள் எழுவதுபோல் அடிக்கடி மாதவனின் இதய அந்தரங்கம் வெளியே பளிச்சிட ஆரம்பித்தது.

தினமும் அறையைக் குப்பையும் கூளமுமாய் அடித்து விட்டுக் கன்யா கல்லூரி சென்று விடுவாள். மாலையில் களைத்துத் திரும்புகையில் அறையின் அமைப்பில் ஒழுங்கு ஜொலிக்கும். பூக்கிண்ணத்தில் விதம்விதமான குரோட்டன்ஸ் பூக்கள் வண்ண ஜாலம் சிந்தும். தெய்வப் படத்தில் ஊஞ்சலாடும் மல்லிகைச் சரம் அவளுடைய கூந்தலில் ஏறக் காத்திருக்கும். தங்கி நிற்கும் ஊதுபத்திப் புகை நெஞ்சை மயக்கும்.

நிம்மதியாய்ச் சுகன்யா அமர்ந்து பார்வையை ஓட்டுகையில் அறையின் கதவருகே மாதவனின் நிழல் தோன்றி மறையும்.

மார்க்கெட்டுக்குப் போனால் லெசமயம் வெறும் பையுடன் திரும்பி வந்து நிற்பான்.

"ஏதுவுமே வாங்கலையா, மாதவா?..."

"முட்டைகோஸ்லாம் 'சௌ சௌ'வும் தான் இருந்தன. வந்துவிட்டேன்." சுகன்யாவுக்கு இவை இரண்டும் பிடிக்காது என்று அபிராமிக்கு நினைவு வரும்.

"இப்போ சமைக்க எதுவுமே இல்லையேடா..."

"தோட்டத்தில் கீரையும், பச்சைக் கொத்தமல்லியும் இருக்கே, பறித்துக் கொண்டு வரட்டுமா?..." சுகன்யாவுக்குக் கீரை மசியலும் கொத்தமல்லி சாம்பாரும் உயிர் என்பதும் அவனுக்குத் தெரியும்.

அவள் தனக்குத்தானே சிரித்துக் கொள்வாள். சிரிப்பினூடே வேதனை புரையோடும். சாப்பாட்டில்கூடச் சுகன்யாவுக்கு இது பிடிக்கும், இது பிடிக்காது என்று இவன் கூர்ந்து கவனித்து வைத்திருக்கிறானே, பாவம்! ஆனால் சுகன்யா இவனை இலட்சியப் படுத்தக் கூட இல்லையே!... வீட்டில் வாழ்கிறான், வேலை செய்கிறான் என்ற ஒரு மேன்போக்குதானே அங்கே இருக்கிறது?

ஓரிரு முறை சுகன்யாவின் எதிரே உட்கார்ந்துகொண்டு குறுவுப் பார்வையால் அவள் மனத்தை அளக்க அபிராமி முயன்றதுண்டு. அப்போதெல்லாம் இனத்தில் கவிழ்ந்து விழுந்த குடம்போல் நலுங்காமல் இருப்பாள் சுகன்யா. ஏதாவது கேள்வி கேட்டால் பதில் வராது. பார்வையில் சூன்யம் தேங்கும். பணக்காரத் தோரணை அதுதானோ என்னவோ?

அம்மாவிடமே இப்படி இருக்கிறது!

எப்படியோ ஒரு நாள் பதில் வந்துவிட்டது. கொஞ்ச நஞ்ச சந்தேகமும் அற்றுப் போய் விட்டது.

அவளுடைய கல்லூரிக்கு நடுப் பகல் ஆகாரம் எடுத்துச் செல்லும் பெண் சொல்லாமல் நாலு நாட்கள் நின்று விட்டாள்.

"நீ பின்னே எப்படியம்மா இன்னிக்கு எனக்கு 'டிபன் பாக்ஸ்' அனுப்புவே?" என்றாள் சுகன்யா இரண்டாம் நாள் காலையில்.

மாதவன் முகத்தில் அரும்பொளி நிழல் தட்டியது. ஆர்வத்தில் அவன் விம்மி நின்றான்.

"நான் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வரேன், அக்கா!"

அபிராமி நிமிர்ந்து பார்த்தாள். அந்தப் பணிவில் அவனுக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி.

சுகன்யா சற்றே மௌனமாய் நின்றாள்.

"அப்படியானால் மாதவனிடம் அனுப்புகிறேனே, சுகன்யா!"

"வேண்டாம். நான் காண்டினில் சாப்பிட்டுக் கொள்கிறேன்."

மாதவன் உதடுகள் ஒளிந்து கேவின. அவள் நெஞ்சில் நெகிழ்ச்சி இருந்தால் இந்தப் பதில் நிச்சயம் வந்திருக்காது என்று அபிராமிக்குத் தோன்றியது.

தன் நிலைக்கு ஒவ்வாத பாத்திரத்தின் மேல் பாசம் வைத்து விட்டால் தனக்குப் பயனும் இல்லை, சுகமுமில்லை. ஆனால் பாசமும் பந்தமும் நாமே ஏற்படுத்திக் கொள்வதா என்ன?

இன்று மனத்தோடு மனதாய்ப் புதைத்து வைத்து அவன் வளர்க்கும் அன்பும் ஆசையும், சுகன்யாவுக்குத் தெரியாது. இப்படியே ரகசியமாய் அதை எப்படிக் காக்க முடியும்? எத்தனை நாட்கள் காக்க முடியும்? ஏதாவது சமயமற்ற ஒரு சமயத்தில் நெக்குவிட்டு அனுஸ்வரங்கள் விழுந்து விடாது என்ன நிச்சயம்? பிரளயமே ஏற்பட்டது போல் வீடே தனக்கெதிரே சீறிக் கொண்டு வரும் போது மாதவனால் தாங்க முடியுமா என்ன?

இரண்டு நாட்களுக்கு முன் பிரளயமே ஏற்பட்டது போல் வீடு முழுதும் மாதவனுக்கு எதிராகச் சீறிக்கொண்டுதான் வந்தது. இடித்து வைத்த வெடி மருந்தைக் கொளுத்தி விட்டது சுகன்யாவேதான். மாதவனின் மன இயல்பை அவள் புரிந்து கொண்டு விட்டாள். அப்போதே அப்பா அண்ணன்கள் அத்தனை பேரையும் அழைத்துப் புயல் எழுப்பி விட்டாள். அத்தனை பேரும் வெறி கொண்டு ஆடித் தீர்த்து விட்டார்கள்.

அன்று தன் அறையில் கண்ணாடி எதிரே நின்று சுகன்யா அலங்காரம் செய்து கொண்டிருக்கிறாள். உடலைத் தழுவி இழைய இழைய மென் சேலை. இடையின் இறுக்கத்தில் வழியும் சதையின் பூரணம். மேனிச் செழிப்பில்

மேடிட்ட வனப்பில் தங்க மாட்டாத தலைப் பின் தொல்லை. தொல்லையில் வளையும் புருவங்கள். திபச் சுடராய் நெற்றித் திலகம்.

மாதவன் தன் வயமிழந்திருக்க வேண்டும். அறையின் வாசலில் அவளையும் அவள் பிரதிபிம்பத்தையும் பார்த்தபடி வெகு நேரம் நின்றிருக்கிறான். மனம் பொங்குகையில் அவன் தன் செய்கைகளைக் கவனிக்கிறான் என்றுகூட உணர முடியவில்லை அவனால்.

நாணிலிருந்து பாயும் அம்பாய்க் கூடத்தில் புகுந்தாள் சுகன்யா. கோபக் கூக்குரல் வெடித்துப் பரவியது. அத்தனை பேரும் கூடி விட்டார்கள்.

"நான் இனிமேல் இங்கே இருக்கவே மாட்டேன். என்னை ஹாஸ்டலில் சேர்த்து விடுங்கள். அவன் இருக்கும் இடத்தில் நான் இருக்கவே மாட்டேன்." இறுதியில் தீர்மானமாகச் சொல்லி விட்டாள் சுகன்யா.

ஆளுக்கொன்றாகப் பேசினார்கள். சுகன்யாவின் அப்பாவுக்குக் கோபம் எல்லை மீறிப் போய் விட்டது. பதுங்கிப் பாயும் புலி போல் வெறித்துப் பார்த்த கண்களில் தணல் எரிந்தது. துடித்த கைகள் மாதவனின் இரு கன்னங்களையும் வெளுத்து வாங்கின. அடித் தழும்புகளை அவன் மெல்ல வருடிக் கொண்டான். நெஞ்சுக் குழியில் அழுகையை அடக்கியதால் இமைகள் அழுந்தின. பேசவே இல்லை. ஒரு நல்ல அன்பை உள்ளத்தில் வளர்த்துக் கொண்டபின் பேச என்ன இருக்கிறது?

"நீ ஏன் போகணும், சுகன்யா? அவனை அனுப்புகிறேன். போடா வெளியே! போ, போகிறாயா இல்லையா?"

அந்த நேரத்திலும் சுகன்யாவைப் பார்க்காமல் அவனால் இருக்க முடியவில்லை. வாசற்படியைக் கடந்து அவன் செல்லும்போது பழுக்கக் காய்ச்சிய கம்பி அபிராமியின் நெஞ்சில் பாய்ந்தது. வாய் திறக்க மாட்டாமல் மேலுதட்டில் நாக்கு ஒட்டிக் கொண்டது.

குழந்தை கோகிலா விக்கித்து நின்றாள்.

வீட்டை அடுத்துத் தெருவின் வழியே அவன் நடந்து செல்கையில் பூஜையறையின் ஜன்னல் வழியே அபிராமி அவனைப் பார்த்தாள். அவனும் அவளைப் பார்த்தான்.

"போயிட்டு வரேன், அக்கா! ஆனால் சுகன்யாவைப் பார்க்கணும்னு தோணினா நாளைக்கே திரும்ப வந்துவிடுவேன்!"

அபிராமியின் கண்களில் நீர் மல்கியது. 'ஐயோ பைத்தியமே: விரட்டி அடித்த பிறகாவது அந்த நினைவை விட்டொழிக்கக் கூடாதா?'

"அபிராமி, அங்கே என்ன?" கூடத்தில் கம்பீரமாய்க் குரல் ஒலித்தது.

"ஒன்றுமில்லை."

வேதனையையும் மீறிக் கொண்டு ஓர் அச்சம். மணந்த கணவனிடமும், சொந்தப் பிள்ளைகளிடமுமே இத்தனை பயமா!...கொஞ்சம் தைரியம் இருந்திருந்தால் மாதவனுக்காக அவள் வாதாடி இருக்கலாமே! மெல்ல மெல்லச் சுகன்யாவிடம் அவன் ஆசையைத் தெரிவித்திருக்கலாமே!

அபிராமிக்குத் தன் மேலேயே அருவருப்புத் தட்டி விட்டது.

இப்போது என்ன அதைப் பற்றி? அவன் போய்விட்டான். ஆனால் வான் விளிம்பைத் தொட வேண்டும் என்ற ஆசையில் தொடுவானத்தைப் பார்த்தபடி போய்விட்டான். 'திரும்ப வருவேன்' என்று சொல்லி விட்டுப் போனான். ஆனால் வான் விளிம்பை எட்ட நினைத்தவர்கள் திரும்பி வருவது ஏது?

பாலைக் குடித்துவிட்டுக் குழந்தை கோகிலா வாசலில் விளையாடப் போய் விட்டாள். அறையில் இறைந்து கிடக்கும் பால் பாத்திரங்களைக் கழுவி, இடத்தில் வைக்கும்போது, அபிராமி ஜன்னல் வழியே ரோஜாச் செடியை மறுபடியும் பார்க்கிறாள். வதங்கிய இலைக் கொத்துக்கள் நீர் கண்டதால் சற்றே நிமிர்ந்திருக்கின்றன. இலைக் கொத்துக்களிடையே மாதவன் தாயார் ஜானகத்தின் முகம் புன்னகையில் தெரிகிறது.

வாசற்குறட்டில், சட்டத்தைப் பிடித்துக் கொண்டு, சாலையைப் பார்த்திருக்கும் கோகிலா இருந்தாற் போலிருந்து வீறிட்டு அலறுகிறாள், வெறி பிடித்து விட்டாற்போல்.

"அம்மா, அம்மா! மாடும்மா! மாடு! சுகன்யா அக்காவைத் துரத்திக் கொண்டு வரது. அம்மா! அம்மா! மாடு! சுகன்யா...."

காட்டுக் கத்தல் 'கிறீச்'சிட்டு எழுந்து வானத்தில் எதிரொலித்து விதானத்தின் வழியாகச் சமையலறைக்குள் பாய்கிறது. கேட்டதைக் கேட்டபின்னும் புரிந்து கொள்ள நேரம் பிடிக்கிறது அபிராமிக்கு.

"அம்மா, அம்மா! சுகன்யா அக்கா அம்மா!"

விரைந்து வாசலை அடைந்ததும் சித்திரத்தில் எழுதியது போல் செயலற்று நின்றுவிடுகிறாள் அபிராமி.

நட்ட நடுத் தெருவில் நாலு கால் பாய்ச்சலில் கொம்பிரண்டையும் கோரமாய் நீட்டிக் கொண்டு, கோபக் கண்களும், சீறும் சுவாசமும் நெட்டையாய் விரைத்த வாலுமாய் அத்தனை பெரிய அசுர மாடு அவ்வளவு வேகமாய் வேட்டையாட வரும்போது...

"சுகன்யா!"

கையில் விரித்த குடையும், காலைத் தடுக்கும் சேலையும், பயத்தில் தடுமாற்றமுமாய் மூச்சைப் பிடித்துக் கொண்டு....

கல்லூரிப் புத்தகங்கள் நாலாபுறமும் சிதறி விழுந்து காற்றில் புரண்டு சலசலக்கின்றன.

"ஐயோ, சுகன்யா!"

எல்லாரும் பார்த்துக் கொண்டேயிருக்கையில், யாரும் பார்க்க முடியாதபடி கண்ணிமைப்பதற்குள் ஒரே பாய்ச்சலில் ஓர் உருவம் காளைக்கும் சுகன்யாவுக்குமிடையே புகுந்து சுழல்கிறது.

இழுத்து விட்ட சுருள் கம்பியிலிருந்து விடுபட்டது போல் சுகன்யா மேல் எழும்பிப் பறந்து அபிராமியின் காலடியில் 'மொட்'டென்று விழுகிறாள். மயிரிழையில் பிழைத்து விட்டாளா? ஒரு காயம் கூட இல்லையே!

விழுவதற்கும் 'மயக்கம்' அழுத்துவதற்கும் இடையில் "அம்மா மாதவன்!" என்று சுகன்யாவின் வாய் குழறுகிறது.

பத்தடிக்கு அப்பால் ஆத்திர வெறியில் செய்யக்கூடாததைச் செய்துவிட்டு, தான் செய்ததை உணர்ந்ததும் தலை தொங்கிப் போய் நிற்கிறது ஒருமாடு. கூரிட்ட கொம்பு களிலும் கொழுத் திமிலிலும் ரத்தமும். தசைத் துண்டங்களும் குங்குமக் குழம்பாய் வழிகின்றன.

குழந்தை கோகிலா அவசரமாகக் கண்களை மூடிக் கொள்கிறாள். அபிராமியின் கண்கள் நிலைக் குத்திப் போய் நிற்கின்றன.

கசக்கி எறிந்த பூவாய்ப் புது மணத்துடன் தோட்டத்தின் வேலிக்குப் பக்கத்தில் மாதவன் நொறுங்கிக் கிடக்கிறான். மேலே கவிழ்ந் திருக்கும் பன்னீர் மரத்திலிருந்து நீளம் நீளமாய் வெள்ளைப் பூக்கள் இயல்பாகப் பொழிகின்றன.

மயங்கிக் கிடந்த சுகன்யாவைக் கைகளால் அள்ளிக்கொண்டு உள்ளே சென்றாள் அபிராமி.

மறுநாள் மாலைவரை சுகன்யாவுக்கு மயக்கம் தெளியவில்லை. எல்லோர் மனத்தையும் கவலை கவ்வியது. ஒரு திசையில் பெரும் புயலடித்து அடங்கியதும் எதிர்த் திசையில் மறுபடியும் புயலடிக்குமே-அதைப்போல் ஏதாவது காத் திருக்கிறதா என்ன? நேற்று பரிசோதித்துச் சென்ற டாக்டர் இன்று திரும்ப வரவில்லையே?

தைரியத்தை வரவழைத்துக் கொள்ள அபிராமி முயலும்போது அவள் முகம் ஆயிரம் விதமாய்க் கோணுகிறது.

மெல்லச் சுகன்யாவின் இமைகள் பிரிகின் றன. பூவிதழ்கள் இமைகள் பிரிகின்றன. பூவிதழ்கள் துடிக்கின்றன. நினைவு கொஞ்சம் கூடியதும் அவள் உதறிக்கொண்டு உட்காரு கிறாள். தாயும் தானும் மட்டுமே தனியாக இருப்பதை உணர்கிறாள்.

"அம்மா, மாதவன்!...."

அபிராமி பேசவில்லை. கண்ணீரே விவரம் சொல்கிறது.

சாய்ந்த நிலையிலே ஜன்னல் வழியே தோட் டத்தைப் பார்க்கையில் ரோஜாச் செடி தெரி கிறது. அந்தச் செடியைக் கவனிக்காமலே மேலே பறந்து செல்கிறது ஒரு வண்ணத்துப் பூச்சி. பூக்காத செடிக்கு அவ்வளவுதான் அந்தஸ்து.

சுகன்யா தன் நெற்றியைச் சேலைத் தலைப் பால் ஒரு முறை துடைத்து விட்டுக்கொள் கிறாள். தலைப்பிலே நெற்றியில் வழிந்த சாந்துத் திலகம் பற்றிக்கொண்டு வருகிறது. அவள் நீள் விரல்கள் கேசத்தில் சூடி வாடி யிருந்த பூச்சரத்தை எடுத்து வெளியே வீசி எறிந்தது.

"சுகன்யா!"

"இத்தனை நாட்கள் என்னை நானே ஏமாற் றிக் கொண்டேன், அம்மா!"

அபிராமிக்குப் புரியவில்லை.

யாரும் சூடாமலே வாடிவிடும் பூக்களும், யாரும் பார்க்காமலே உதிர்ந்துவிடும் பூக் களும் இல்லையா, அம்மா!....

"என்ன சொல்றீங்க சுகன்யா !...."

"நான்தான் தீர்மானித்து விட்டேனே. இனிமேல் சொன்னால் என்ன, அம்மா ! என் மனத்தைப் புரிந்துகொள்ள எனக்கே இத்தனை நாட்கள் ஆயிற்று. மாதவன் போன பிறகு தான் அத்தனையும் புரிகிறது, அம்மா !..."

"........"

"என் உள்ளத்தில் வளர்ந்த புரியாத அந்த அன்பு எனக்கு இப்போது புரிகிறது, அம்மா ! என்னையே அறியாமல் என்னிடம் தெய்வீகமாய் வளர்ந்த தூய அன்பு அது. அன்று அந்த அன்பைக் கண்டு பயந்தேன். அந்தஸ்து மோகம் திரையாய் மறைத்தது. மாதவன் கண்ணெதிரே இருந்தால் கட்டுக்கடங்காமல் மனம் தடுமாறும் என்று தோன்றியது. அதனால்தான் அத்தனை ஆர்ப்பாட்டம் அடித்தேன். அப்போதும் அன்பு அறியவில்லை.....இப்போது தெரிகிறது. அன்புக்கு அழிவில்லை. அந்தஸ்தும் ஆணவமும் அதை ஒன்றும் செய்துவிட முடியாது...."

"சுகன்யா !"

"மாதவனிடமும் அதே அன்பு வளர்ந்தது எனக்குத் தெரியும். அந்த உண்மை உனக்கும் தெரியும். அந்த அன்பிற்குக் காணிக்கையாகத்தான் இந்த விரதம் கொள்கிறேன்..."

அபிராமி நடுங்கினாள். "என்ன சுகன்யா இதெல்லாம் ?"

"...நேருக்கு நேராய் வாழ்ந்தால்தான் வாழ்க்கையா ? உடலோடு உடல் ஒன்றினால்தான் ஒன்றியதா ? நெஞ்சுக்குள் நெஞ்சாய் வாழ்ந்தால் வாழ்வில்லையா ? நினைவோடு நினைவாய் இணைந்தால் இணைப்பில்லையா?..."

"சுகன்யா ....! உன் பேரு சுகன்யாடி, உன் பேரு சுகன்யா !..." அன்பின் மோன ஒலி அபிராமியின் இதயத்தைத் தாக்கியது.

சுகன்யாவின் மூச்சு வேகமாய் ஓடியது. அவள் உடல் வெடுவெடு வென்று ஆடியது. தன் முடிவின் அதிர்ச்சியைத் தன்னாலேயே தாங்க முடியவில்லை போலும். நெற்றியில் வியர்வை முத்துக் கோலமாய் நின்றது.

திடீரென்று சாய்ந்த நிலையிலிருந்து சுகன்யா சரிந்து விழுந்தாள். அவள் இமைகள் அழுந்திப் போயின.

உள்ளே ஓடிவந்தாள் கோகிலா அப்போது. கால் தண்டை 'ஜல் ஜல்' லென்றது.

"அம்மா, இதோ பாரேன் !" துக்கத்தில் குழந்தை முகம் கருகி இருந்தது.

பிரிந்த உள்ளங்கையின் செவ்வண்ண ஈரத்தில் ஒட்டிய ரோஜா இதழ்களின் வெப்பும் மென்மையும் மனத்தைத் தாக்கின.

"இன்னிக்கு நமக்குத் தெரியாமலே இலையோடு இலையாய் இந்தச் செடி ஒரு பூப் பூத்திருக்கு....நாம் போய்ப் பார்க்கறதுக்குள்ளே தரையிலே இதழெல்லாம் கொட்டிப் போச்சம்மா."

அபிராமியால் சகிக்க முடியவில்லை. கோகிலாவை வாரிக் கட்டிக் கொண்டாள். கண்கள் மடை திறந்து கொண்டன.

முதல் பூப் பூத்தாயிற்று !

இரண்டாவதாய்ப் பூக்கும் பூ நிச்சயமாய்-சத்தியமாய்-குழந்தை கோகிலாவுக்குத்தான் !

# இரு அப்பாவிகள்!

"சர்.. ர்ர்ர்...ங்ங்...அச்...ங்ங்ங். ஹச் அப்பா!" சத்தத்தைக் கேட்ட பேப்பர், சூரியனைக் கண்ட பனிபோல் ஒருபுறமாக விலகியது. நிலவைக் கண்ட அல்லி போல் முகம் மலர்ந்தது. உடல் நிமிர்ந்தது முகம், ஒரு புதுவித மகிழ்ச்சியுடன் சத்தம் வந்த திசையை நோக்கித் தானாகவே திரும்பியது.

"ஸாரை எங்கேயோ பார்த்தமாதிரி இருக்கே!" அஸ்திவாரம் போட்டாகி விட்டது. "ஆமாம் ஸார்! உங்களைக்கூட எங்கேயோ பார்த்தமாதிரிதான் ஸார் இருக்கு. சட்டுனு ஞாபகத்துக்கு வர மாட்டேங்கிறதே!" கைதானாகவே நீளுகிறது "எங்கேயோ......மறந்து வெச்சுட்டேன். அதான்! ஹி ஹி ஹீ!"

"ஆங்... அதனாலென்ன! இதுகூடச் செய்யாட்டா அப்புறம் என்ன இருக்கு உலகத்திலே! என்ன நான் சொல்றது." காரியம் ஆகிவிட்டது.

இத்தனையும் ஒரு சிட்டிகை பொடிக்குத்தான்.

இப்போது இரு தரப்பிலேயும் காரம் ஏறி விட்டது. தூரத்திலே யாரோ இருவர்! ஓர் ஆண், ஒரு பெண்-ஆமாம்! இருவரும் கை கோத்து உல்லாசமாக ஜதி போட்டுக் கொண்டு போகிறார்கள், காதலர் பாதையிலே!

இருவருடைய முகமும், இரண்டாயிரம் 'வோல்டில்'' 'ஷாக்' அடித்த மாதிரி திரும்பியது. முகத்தில் எண்ணெயும், அசடும் 'மிக்ஸ்சராக' வழிந்தன

முதல்வர் ஆரம்பித்தார் "இதோ பாருங்கோ! இப்படி இவர்கள் "பப்ளிக்"கா போகிறதுனாலேதான், உலகமே கெட்டுப்போறது. மீதி இருக்கிற நல்லவர்களும் இப்படியே இவர்களைப் பாத்து ஆரம்பிச்சுடுறா. இதனாலே என்ன ஆறதுன்னு பெண்ணைப் பெத்தவர்களுக்கும் கஷ்டம் வரது. அதுபோல் பிள்ளையைப் பெத்தவர்களும் அப்புறம் ரொம்பத் தவிக்கிறாங்க. பிள்ளையோட புத்தி இப்படிப் பேதலிக்கப் போச்சேன்னு. நேத்திக்கி பாருங்கோ, ஒரு 'இன்ஸிடென்ட்'. ஒரு பிள்ளையாண்டான் என்ன பண்ணினான், தெரியுமா? திடீரென்று அப்பாகிட்டே வந்து 'தாம் தூம்'னு குதித்தானாம். 'என்னடா விஷயம்?' என்று கேட்டால் காலேஜிலே ஒரு பெண்ணுக்கு வாக்குக் கொடுத்து விட்டானாம், 'உன்னையே நான் கல்யாணம் பண்ணிக்கிறேன்'னு 'யாருடா பொண்ணு, குலம், கோத்திரம் எல்லாம் விசாரிச்சாயாடா?'ன்னு கேட்டால், 'அதைப் பற்றியெல்லாம் அக்கறையில்லை, எல்லாம் முன்பே முடிந்து போச்சு' என்று சொல்லிட்டானாம். என்ன தைரியம் பார்த்தேளோன்னோ இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கு? ஏதாவது சொன்னால் 'தூக்குப் போட்டுண்டுடுவேன். ரயில்லே போய் விழுந்துடுவேன்' என்கிறானாம். என்ன பண்றது அப்பறம். பிள்ளையோட அப்பா பேசாமல் தலையிலே துண்டைப் போட்டுக்கொண்டு வெளியிலே வந்துட்டாராம். எப்படியிருக்கு பார்த்தேளோன்னோ!"

"இப்படி ஜோடி ஜோடியா 'பார்க்'கிலேயும் இதிலேயும், போகிற பிள்ளைகள் மென்னியை முறிச்சுடணும் ஸார். அப்பத்தான் அவர்களுக்கெல்லாம் புத்தி வரும். வேணும்னா அப்பா அம்மாவைக் கேட்டு நல்ல பெண்ணாகப் பார்த்துக் கலியாணம் பண்ணிக்கிறதுதானே? யார் வேண்டாம்னா? எனக்கு வர ஆத்திரத்துக்கு அப்படியே..." நற, நறவென்று பல்லைக் கடித்தார் இரண்டாவது பிருகஸ்பதி.

'ஸார்! ஸார்!! அப்படியெல்லாம் ஏதாவது பண்ணிடாதீங்கோ! ஏன்னா..."

'ஏன் ஸார் உங்களுக்கென்ன சம்பந்தம் இதிலே?"

"அதோ போகிறானே அவன்தான் சாக்ஷாத் என்னுடைய புத்திரன்!"



'ஆ!!! அப்படின்னா வேறே வினையேவேண்டாம், அவன் காதலிச்சது என் பொண்ணைத்தானா?'

"அப்படின்னா நீங்களும் என்னைப்போல் தலையிலே துண்டைப் போட்டுக்கொண்டு வந்து விட்டேன்னு சொல்லுங்கோ!!"

இருவருக்கும் இடையே உள்ள இடம் குறுகியது. (சம்)பந்தமும் நன்றாக இறுகியது!!!

— ராதா

# நீண்டகால சேவைக்கான பாட்டரி

# எவரெடி

## — இதுவரை தயாரிக்கப்பட்டவைகளுள் மிகச் சிறந்த ரேடியோ பாட்டரி

இந்த அநுகூலங்களை எல்லாம் அளிக்க வல்ல ரேடியோ பாட்டரி இது ஒன்றே:

* பிரத்யேகமான 'மினி-மாக்ஸ்' தட்டை லெக்லின் அமைப்பு. அதன் ஒவ்வொரு கன அங்குல இடத்திலும் அதிகமான இயங்கும் சக்தி நிரம்பியதாய் உங்களுக்கு நீண்ட கால உழைப்பைத் தரும் வகையில் இருக்கிறது.
* அதி உஷ்ண மண்டலத்திற்கு ஏற்ற அதன் அமைப்பு கேடின்றி நீண்ட காலம் உழைத்து உன்னத சேவை புரிகிறது.
* எப்பொழுதும் நம்பிக்கைக்கு பாத்திரமானது மிகச் சிக்கனமானது-நீங்கள் வாங்குவதற்கு ஏற்ற மிகச் சிறந்த ரேடியோ பாட்டரி.








"NINE LIVES"
TRADE MARK

**ரேடியோ பாட்டரிகள்**

உபயோகம் செய்யப்படாத கணங்களில் இழந்த சக்தியை திரும்ப அடைகின்றன.

யூனியன் கார்பைடு இந்தியா லிமிடெட்

HCR 3590

# நெஞ்சம் சிறையானால்

வை. சுப்ரமண்யம்

“இன்றைக்கு ஒரு பையனைப் பார்த்தேன்!” என்ற முதல் வரியுடன் நிறுத்திக்கொண்டார் அவர். கச்சேரியில் பல்லவியைத் தொடுத்து விட்டு, பக்கவாத்தியக்காரர்கள் அனுசரணையாக வருவதற்கு அவகாசமும் கொடுத்து விட்டுச் சற்று ஓயும் பாடகர் போல் ஓய்ந்தார் அவர். கழுத்தைச் சுற்றிக் கொண்டிருந்த அங்கவஸ்திரத்தை எடுத்து அப்பால் போட்டு விட்டுச் சட்டையையும் கழற்றத் தொடங்கினார்.

இங்கேயும் பக்கவாத்தியக்காரர்கள் இல்லாமல் இல்லை. மனைவியும் பெண்ணும் இருக்கிறார்கள். மனைவி மட்டும் வேகமாக அவர் முன்னால் வந்து நின்றாள். தகப்பனார் குரல் கேட்டுப் படி தாண்டக் கால் எடுத்து வைத்த பெண், பேச்சு தன் தொடர்புடையதாயிருந்ததைக் கண்டு எடுத்த அடியை உள்ளேயே வைத்துக் கொண்டு விட்டாள். கால்களுக்குப் பதில் காதுகள் பணி புரியத் தொடங்கின.

“பையன் எப்படி? ஜாதகம் கிடைத்ததா?”

“ஜாதகம் கிடைத்தது. பையனைப் பற்றிச் சுருக்கமாக ஒரே வார்த்தையில் சொல்வதாயிருந்தால் அவன் ஒரு ராஜகோபுரம்! அவ்வளவுதான் போ!...ஜாதகத்தைக்கூட ஏன் வாங்கிக் கொண்டு வந்தோம் என்று வரும் வழியில் நினைத்துக்கொண்டே வந்தேன்.”

“நீங்கள் பேசுகிறது யாருக்குப் புரியும்? இது என்ன புதிரா, இடக்கா? பையன் என்னமோ ராஜகோபுரம் என்கிறீர்கள்; ஜாதகத்தை ஏன் வாங்கிக்கொண்டு வந்தோம் என்றும் தோன்றுகிறதே உங்களுக்கு?...ஏன், பையன் நன்றாயில்லையா? அதற்காக அப்படி...”

“அடசே! பையன் ராஜகோபுரம் என்றால் அதிலே எல்லாம் அடங்கிவிட்டது...முகம் ராஜ முகம்...”

“ராஜ முகத்தை இங்கே யார் கண்டிருக்கிறார்கள்...?”

தகப்பனார் ஒரு சிரிப்பை உதிர்த்ததைக் கேட்டுக் கொண்டாள் பெண். அவரது கலகலத்த சுபாவம் அவளுக்கு எப்போதும் பிடிக்கும்.

“ராஜ முகத்தை நீ காணுவதற்காக எந்த ராஜாவும் லட்சணக் குறைவாக இருந்திருக்க மாட்டான்...அந்த மாதிரி முகத்தை உன்னால் கற்பனை பண்ணிக்கொள்ள முடியவில்லையென்றால் உன் தம்பி முகத்தையாவது கொஞ்சம் நினைத்துக்கொள். கிட்டத்தட்ட அவன்மாதிரி இருப்பான். ஆனால் கதர் கட்டிக்கொண்டு. கோபுரம் என்று சொன்னேனே, அதற்குப் பொருத்தமாக உயரமாக இருப்பான்...”

அம்மாவின் குரல் கொஞ்சம் உடைந்து வந்ததைக் கேட்டு நிமிர்ந்தாள் அவள். “அந்தக் கடன்காரனை இச் சமயத்தில்தானா ஞாபகம் ஊட்ட வேண்டும்? மூணு வருஷங்களை முழுங்கிவிட்டு இருக்கிறோமே. சரி; நீங்கள் புதிர் போடுவது எதற்காக? இப்படி அழகான மாப்பிள்ளை வந்தால் உங்களுக்கு என்ன குறையாம்?”

“எனக்குக் குறையே இல்லை; கேட்டுக் கொள். ஒரேயடியாக நிறையாக இருப்பதும் நமக்குக் கட்டி வராதே. பையனுக்கு உயர்ந்த வேலையாம்...என்னவோ கம்பெனி பேர் சொன்னார்கள்; மறந்து போய் விட்டேன். முந்நூறு ரூபாய் சம்பளமாம். நமக்கு லாயக்கா? நூற்றுக்கு ஆயிரம் ரூபாய் கணக்குப் போட்டுக்கொள்ள வேண்டியதுதானே இந்த நாளில். மூவாயிரம் ரூபாய்க்கு எங்கே போகிறது இப்போது?”

கம்பீரமான குரலில் உயரத் தூக்கி நிறுத்தியிருந்தார் அவர் தம் கேள்வியை. சம்பாஷணையிடையே விநாடிகள் வீணாகாமல் எதிர்க்குரலும் கேட்டுக் கொண்டிருந்தால், பேச்சின் நிலையை ஒருவாறு இயல்பாக எடுத்துக் கொள்ளலாம். அம்மாவின் மௌனம் அவர் குரலின் மதிப்பையே கீழே இழுத்துவிட்டு விட்டது; மரம் அறுக்கும்போது உயர நிற்கும் ஆளின் கைவாளைக் கீழே நிற்பவன் நிரந்தரமாக இழுத்துவிட்டு விட்டாற்போல.

“என் அழகை நான் கண்ணாடியில் காண வேண்டுமா?” என்றார் அப்பா.

‘பொருள்?’ என்று கேட்கிற பாவனையாக அம்மா அவர் முகத்தை அந்த மௌனத்தின் விளிம்பில் நின்றே ஏறிட்டு நோக்கியது பெண்ணுக்குத் தெரியாது.

“நம் சக்தியைத்தான் சொல்கிறேன்” என்ற அப்பாவின் குரல் சுருதியிழந்தவர் தொடர்ந்து பாடுவதுபோல் பெண்ணின் காதுகளில் கேட்டுக் கொண்டிருந்தது.

அவளால் அதை ரஸிக்க முடியவில்லை. அவர்கள் பேச்சைக் கேட்கவும் சுவாரசியம் ஏற்படவில்லை. பாதிக் கச்சேரியில் எழுந்து நழுவும் உருவம்போல் மெல்ல ஜன்னலை நோக்கி நகர்ந்தாள்.

* * *

நாலு நாட்களும் நகர்ந்தன. அவள் இன்னமும் ஜன்னலை நோக்கிக் கொண்டுதான் இருந்தாள். ஒருமாதிரியான சமயத்தில், மனத்தில் கிளுகிளுப்பை ஊட்டக் கூடியதாயினும் — சிலிர்ப்பை ஏற்படுத்துவதாயினும் — அவளுக்கு அந்த ஜன்னல்தான் புகலிடம். அதன் வழி பார்த்து, தெருக் காட்சிகளில் மனம் ஒன்றி, நினைவை மறக்கவோ பெருக்கவோ வழிசெய்து கொள்வாள்.

இப்போது ஜன்னல் வழி பார்த்தபோது அந்தி மயங்கி இருள் முழுங்கிக் கொண்டு

வந்தது. இலேசான சாம்பல் நிறம் கலந்த இருள்தான். நேர் எதிர்நோக்கில் எதிர் வீட்டின் திறந்த வழியெல்லாம் 'நியான்' விளக்கின் வெளிச்சம் தெருவில் விழுந்து வீட்டின் பகுதிகளைப் படம் போட்டுக் காட்டிக்கொண்டிருந்தது. மேல் நோக்கில் வான வெளி கழற்றி விசிறிப்போட்ட திரைபோல் ஒய்ந்து தெரிந்தது. வளர்பிறைச் சந்திரன் நான்கு நாட்களுக்குப் பிறகு இப்போது கொஞ்சமேனும் உருவமும் ஒளியும் பெற்ற தோற்றத்துடன் விளங்கினான்.

இவ்வளவும் அவன் பார்வையில் வெறுமெனப் படிந்தவை; ஆனால் மனத்தில் ஒன்றவில்லை; மனத்தைக் கிளறவும் இல்லை. ஆனால் புதிதாய்ப் பிறந்து வந்த காற்று ஒன்றுதான் எப்போதும் அவளிடம் உரிமை கொண்டாடக் கூடியது. அவளைத் தொட்டுத் தடவி, சுவாசம் என்ற பெயரில் அவளுள்ளும் புகுந்து குடியேறி, அவள் மனத்தைத் துழாவக்கூடிய சக்தி பெற்றது.

இப்போது மென்காற்றின் ஸ்பரிசம் அவளை உவகை கொள்ளச் செய்தது. அவளிடம் சிறிது நேரம் மௌனமாய் விளையாடியது. திடீரென்று சமயம் வாய்த்தபோது அவளிடம் தலைப்பட்டது. "பாகி! என்னவோ நான்கு நாட்களாக நீ வெயில் காலத்து இறுக்கம் போல் புழுங்கிக் கொண்டிருக்கிறாயே? ஏன்? உன்னுடைய நல்ல கண்கள் நாலு நாட்களாகத் திருட்டுக் கண்களாகத் தெரிகின்றன. என்ன தான் அது, சொல்லேன்."

பாகியின் முகம் இருளிடை ஏற்றிய விளக்குப் போல் சோபை பெற்று மின்னியது.

"உன்னிடம் சொல்லலாமா...?"

"நன்றாகச் சொல்லலாம். நான் உருவம் அற்ற காற்று. நீ மௌன பாஷையில் பேசினாலே நான் புரிந்து கொள்வேன். ஆகவே, யாருக்கும் எதுவும் தெரியப் போவதில்லை. நீ பேசு."

பாகி பேசினாள்: "என் மனம் நான்கு நாட்களாகப் பூத்திருக்கிறது. அந்த உணர்வைத் தாங்கவும் துடித்துக் கொண்டு, தாங்கவும் முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன். என் பதினைந்தாவது வயது முதல் என் தகப்பனார் ஏழு வருஷ காலமாக அலுப்புச் சலிப்பில்லாமல் கல்யாணத்துக்காக முயற்சி பண்ணிக் கொண்டிருக்கிறார். கல்யாணத்துக்கு அடிப்படையாக இரண்டு விஷயங்கள் இருக்கின்றன அல்லவா? பணமும் மாப்பிள்ளையும்! அந்த இரண்டும் இத்தனை நாட்களாக இந்த வீட்டு வாசற்படிக்கு இந்தண்டை வந்ததே கிடையாது.

"நாலு நாட்களுக்கு முன் அப்பா ஒரு வரனைப் பற்றிச் சொல்லிக் கொண்டு வந்தார். வரனைப்பற்றி அவர் ஒரே வார்த்தையில் வர்ணித்தார். பையனை ராஜகோபுரம் என்ற சொல்லால் சிறப்பித்துச் சொன்னார். அந்தக் கணம் என்





மாயூரம் நகராட்சியில் மானேஜராகப் பணியாற்றி வந்த ஸ்ரீ ஜெகந்நாத பிள்ளை அவர்களது சஷ்டியப்தபூர்த்தி சமீபத்தில் வெகு சிறப்பாக நடந்தேறியது.

---

மனத்தில் எங்கோ அரும்பி யிருந்த ஓர் அரும்பு சிறிது சலனமுற்று ஆடி, என் உள்ளத்தில் உரசியது. ஆனால் பையனைப் பற்றி என்ன ஏது என்று மேலே திட்டவட்டமாக ஒன்றும் அவர் சொல்லவில்லை.

''எத்தனையோ பையன்களைப் பற்றி அப்பாவும் அம்மாவும் எப்படி வெல்லாமோ புகழ்ந்து வர்ணித்தபோதெல்லாம் என் மனம் இந்தப் பாடுபட்டதில்லை. அந்த 'ராஜகோபுர'த்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று எனக்கு ஓர் உந்தல் ஏற்பட்டுவிட்டது. அன்றைக்குச் சாயங்காலம் யாருக்கும் தெரியாமல் சுவரில் ஆணியில் மாட்டியிருந்த எழுதும் அட்டையைக் கையில் எடுத்தேன். அதனுடன் 'கிளிப்' செய்திருந்த ஜாதகத்தை எடுத்துப் பார்த்தேன். அருகிலேயே இருக்கிற ஆசாமிதான். பஸ் டெர்மினலுக்குச் சற்றுத் தள்ளியிருந்த ஒரு தெருவில் இருக்கிறார். 'வஸந்தன், (லேட்) வாகீசுவரனின் குமாரர்' என்று விலாசம் இருந்தது.

''பெயரைத் தெரிந்து கொண்டு விட்டதில் பெரிய ஆஸ்தியைப் பெற்றுவிட்ட மாதிரி மனம் நிறைவு பெற்றுவிட்டது. அப்பா விவரித்துச் சொன்னபோதே மனத்தில் ஒரு பம்பரத்தைச் சுழற்றிவிட்ட மாதிரி கிறு கிறு வென்று ஏதோ சுற்றிக் கொண்டிருந்தது. இப்போது இந்தப் பெயரின் உச்சரிப்பு நான்கு முறைகள் சொட்டுச் சொட்டென்று கேட்கவே, என் மனமே ஒரு பம்பரமாய் மாறிச் சுற்றத் தொடங்கி விட்டது போலிருந்தது.

''அன்றைக்குப் பஸ் ஸ்டாண்டில் நின்று கொண்டிருந்தேன். நாலைந்து ஸ்டாப்பிங்குகளுக்குத் தள்ளி 'டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட்'டுக்கு நான் இறங்க வேண்டும். கல்யாணம் கானல் நீராகப் போய்க் கொண்டிருந்ததைக் கண்டு அப்பா என் எதிர்காலத்துக்கு ஒரு வரைபடம் வரைந்து, அதில் உத்தியோகம் என்ற எழுத்துக்களைப் பொறித்திருந்தார். படிப்புக்குக் கரைத்திருந்த பணத்தைக் கையில் வைத்திருந்தாலும் பணத்தைப் பொறுத்தவரை கல்யாணம் துணிச்சலாக எங்களை நோக்கிக் கடைக்கண் பார்த்திருக்கும் என்று நான் நினைத்துக் கொள்வது வழக்கம். ஆனால் இதை வெளியில் சொல்லலாமா?

''காரியாலயத்துக்கு எல்லாரும் செல்கிற ஒரு நெருக்கடியான நேரம் இருக்கிறதே; அதுவே ஒரு வேடிக்கை. குறிப்பிட்ட நேரத்துக்குள் பஸ்ஸைப் பிடிப்பதற்காக அத்தனை பழக்கமான முகங்களும் அங்கே ஒன்றுகூடி விடும். பள்ளியிலும் காரியாலயத்திலும் பரிச்சயமாயுள்ள 'அட்டெண்டென்ஸ்' இந்த இடைநிலைத் தலமான பஸ் ஸ்டாண்டிலும் விதிவிலக்கு அல்ல! நாமாக நினைக்காதபோதிலும் உள்மனம் தன் பொழுதுபோக்கு நிமித்தமாக எல்லாரையும் 'ஆஜர்' பார்க்கும். அன்று பார்த்துக் கொண்டே வந்தபோது, ஒருவர் முகத்தில் என் தாயாரின் தம்பியின் முகச் சாயலைக் கண்டேன். அப்பாவின் குரல் அந்தக் கணத்தில் 'ராஜமுகம்' என்று ஒலித்தது. என் மனத்திலாடிய பம்பரச் சுழற்சி இன்னும் வேகமடைந்தது. ஒரு நிலைக்குமேல் அந்தச் சுழற்சி சலனமற்ற நிலைதானே— நிதானமாக யோசித்தேன். இவர் தினமும் வருகிற 'யாரோ ஒருவர்.' இவரையா? இவரது ஜாதகமா? இவர் பெயர் வஸந்தனா?

''அப்பா ஒப்புவித்த வர்ணனைகள் கூடிய ஒரே வார்த்தைக்குப் பேதம் அற்ற ஒரு சாட்சியாக அவர் நின்றார். அவர் எப்போதும் இப்படித்தான் கதர் உடையில், கம்பீரமாக, நேரத்துக்குச் சரியாக வந்து ஒருபுறமாக ஒதுங்கி நின்று, இடித்துப் பிடித்துப் பஸ்ஸில் ஏறாமல் நிதானமாக ஏறி, ஒரு தனித்துவத்தை படைத்திருக்கிறார். இத்தனை நாட்களும் இந்தக் காரணங்களுக்காக என் மனம் அவருக்கு ஒரு மதிப்புக் கொடுத்திருந்தது. என்றோ எதற்கோ அளித்த மதிப்புக்கு இன்று ஆதாரம் ஏற்படுகிறதா?

''அவர் ஒரு தனியானவர்தான். நட்சத்திரங்களுக்கு மத்தியில் நீலம் கலந்த சிவப்புடன் ஒளிரும் ஒரு தனி நட்சத்திரம் போன்றவர்.....அப்பா சரியாகவே எடை போட்டிருக்கிறார் என்ற தீர்மானம் எழுந்த மறு விநாடிதான் என் உள்ளம் பூத்திருக்க வேண்டும். அதற்குப் பிறகுதான் இந்தத் தவிப்பெல்லாம்......வெகுநேரம் வரையில் மௌனமாகச் சற்றைக்கொரு முறை அவரது அசைவுகளைத் தாழ்ந்த பார்வையால் பார்த்துக்கொண்டிருந்தேன். அவரது கையிலிருந்த ஒரு பொருள் திடீரென்று என்னை நிமிர்ந்து பார்க்கத் தூண்டியது. ஒரு மூக்குக் கண்ணாடி உறையை வைத்துக் கொண்டு அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''மறு விநாடி, 'உங்கள் பெயர்தானே மிஸ்டர் வஸந்தன்?' என்று கேட்டுவிட்டேன். கேட்ட பிறகு, ஏதோ உயரத்திலிருந்து எதிர்பாராமல் கீழே விழுந்தவனின் உடல் படபடக்குமே அது மாதிரி என் உடம்பும் படபடத்தது.

'''ஆமாம். நீங்கள் கேதாரி சர்மாவின் பெண்ணா?.....இந்தக் கண்ணாடி.....இதை

எங்கள் வீட்டுக்கு வந்தபோது வைத்துவிட்டு மறந்து போய்விட்டார் அவர். நாலு நாட்களாக இதைத் தினம் எடுத்துக் கொண்டு போய்த் திரும்பக் கொண்டு வந்தபடி இருக்கிறேன். கண்ணில் பட்டால் கொடுக்கலாமென்று....'

" அதைக் கையில் வாங்கிக் கொண்டேன். அப்பா இந்த மறதியான காரியத்தைப் பற்றிச் சொல்லியிரா விட்டால் அவரிடம் இப்படிப் பேசத் தைரியம் வருமா ? நாலு நாட்களாகக் கண்ணாடி இல்லாமல் அப்பா தவிக்கிற தவிப்பு அவரை இப்படித் தடாலென்று விளிக்கிற தைரியத்தைக் கொடுத்துவிட்டது.

" மறு விநாடி பஸ் வந்தது. எங்கெங்கோ கவனமான இருந்த எல்லாரும் ஒரே கவனமாகப் பஸ்ஸில் தங்களைத் திணித்துக் கொள்வதில் திரும்பினார்கள். வஸந்தனை ஒரு பத்து உடம்புகள் மறைத்திருக்க நான் மட்டும் முதலில் ஏறிக் கொண்டுவிட்டேன். அப்புறம் தினம் பார்க்கிறோம்; தலை குனிகிறோம். வெட்டவெளியை வெறித்துப் பார்க்கிறோம்... இதற்கிடையில் அப்பா முற்றுப்புள்ளியாக ஒரு சொல்லை அன்றே சொன்னதை நினைத்துக் கொண்டு நான் மாய்ந்து போகிறேன். அவருக்கு முந்நூறு ரூபாய் சம்பளமானதால் அப்பாவைப் பொறுத்தவரை 'இது ஒரு இசைகயா வரன்' என்று அவர் முடிவு கட்டி விட்டாரே. இதை நினைத்துக் கொண்டால் ஒரே வேதனையாயும், அந்தச் சந்திப்பை நினைத்துக் கொண்டால் ஒரே மகிழ்ச்சியாயும் இருக்கிறது. இதுதான் நாலு நாட்களாய் இந்த ஜன்னலண்டையில் நான் வந்து படும் அநுபவம் ...!"

இத்தனை நேரம் சலனமற்றிருந்த மரம் ஒன்று இலேசாய் ஆடியது; சுகாநுபவமான சங்கீதத்தைக் கண் மூடி ரசிப்பவரின் தலை ஆடுவது போன்றிருந்தது. அதன் பிறகு தான் காற்றும் சற்று வீசத் தொடங்கியது. இத்தனை நேரமும் காற்றுத்தான் பாகியிடம் கட்டுண்டிருந்ததே!

வஸந்தன் நினைவு இல்லாமல் பாகியினால் ஒன்றும் செய்ய முடிவதில்லை. அந்த நினைவைக் கழற்றிப் போட்டு விட்டுச் சாப்பிட முடியாது: தூங்க முடியாது: இன்ஸ்டிடியூட்டுக்குச் செல்ல முடியாது.

சுவரில் தொங்கிய அட்டையில் 'கிளிப்'பில் பிடிபட்டபடி அவன் ஜாதகம் காற்றில் ஆடிக் கொண்டு கிடந்தது. யாரையோ அழைக்கிறாற் போலவோ, ஏதோ கேட்கிறாற் போலவோ பொருள் கொண்டு பாகி அடிக்கடி அதனிடம் சென்று, அதன் நான்கு மூலைகளிலும் ஒளிர்ந்த மஞ்சள் பொட்டுக்களைக் கண்டு மனம் குளிர்ந்து, காற்றில் அது ஆடினால் அதை விரலால் பிடித்து நிறுத்திக் கொண்டு நிற்பாள். 'வஸந்தன்...வஸந்தன்....வஸந்தன் — அவன் அவளுள்ளே மௌனமாகத்தான் இருந்தான். மூக்குக் கண்ணாடி உறையை அவன் கையில் கொடுத்தபின் மௌனமான நிலை இன்னும் தொடர்ந்தது.

அன்று வெகுநேரம் வரை அவர்கள் ஏறிப் போக வேண்டிய பஸ் வரவேயில்லை. எல்லா 'ரூட்'களிலும் பஸ்கள் ஒழுங்காகப் போகும் பள்ளிப் பிள்ளைகளைப் போல் அணிவகுத்துச் சென்றன. இந்த ஸ்டாண்டில் வெறும் பொலிகள் எழுந்தன. கூட்டம் கலையவாரம்பித்தது. வஸந்தன் ஒரு புத்தகத்தில் பதித்த கண்களை எடுக்காமல் நின்றிருந்தான். பாகி கால்நடையாகக் கிளம்பும் முடிவுடன் திரும்பினாள்.

"நானும் வரலாமா?" என்ற குரல் கேட்டுத் திரும்பினாள் பாகி, பின்னால் அவன்தான்— வஸந்தன் நின்று கொண்டிருந்தான்!

"ஓ! எல்லாருமே நடந்து போக வேண்டியதுதான். வேறே வழி?" என்று அவன் கேள்வியைப் பண்பு வகையாக்கிய முறையில் பதிலை அமைத்துச் சென்றாள் பாகி.

இருவரும் நடந்தனர். தன் பக்கலில் வஸந்தன் வந்து கொண்டிருந்தது பாகிக்குப் பெருமையாக இருந்தது; கூடவே பயமாகவும் இருந்தது. எதிரே வந்து தங்களைத் தாண்டிச் சென்றவர்களெல்லாம் தங்கள் இருவரையும் கையும் களவுமாகப் படம் எடுத்துக் கொண்டு சென்றதைப் போலிருந்தது அவளுக்கு.

" உங்கள் தகப்பனார் ஏன் அதற்குப் பிறகு வரவில்லை ?" என்று எதிர்பாராததொரு கேள்வியைக் கேட்டு வைத்தான் வஸந்தன். அவனது தைரிய உணர்வைக் கண்டு அந்த அவசரத்திலும் அவனைத் தன்னுள் பாராட்டவும் செய்தாள் பாகி.

" அவருக்குப் பயம் !" அவளும் துணிந்து பேசினாள், சிறிது ஹாஸ்யமாகவே பேசுவோமே என்ற நினைவில்.

" ஏன், நான் என்ன புலியா, சிங்கமா ?"

" அப்படியிருந்தால் பரவாயில்லையே. அவைகளை விடப் பயம் காட்டக் கூடியவர்கள் நீங்கள் என்று பயப்படுகிறார்."

" புரியும்படி...."

"உங்களுக்குப் பெரிய வேலையாம்; நிறையச் சம்பளமாமே."

" அதனால் என்ன, நல்லதுதானே ! அவருடைய நோக்கத்துக்கு அதை நல்லதாக எடுத்துக் கொள்ளலாமே."

" எடுத்துக் கொள்ளலாம் ; எங்கள் அப்பாவும் ஒரு ரிடையர்ட் ஜட்ஜாகவோ கலெக்டராகவோ இருந்தால். அவர் ஓர் ஓய்வு பெற்று ஓய்ந்த உபாத்தியாயர். இன்றைக்கு மாப்பிள்ளையை நிச்சயம் பண்ணிக் கொண்டு, பாவம், நாளைக்குப் பணத்துக்குப் படையெடுக்கிற நிலைமை !.....ஐயாயிரம் ரூபாயாவது கையில் கேட்கமாட்டீர்களா ?..."

" சேசே ! அப்பா பெண் இரண்டு பேரும் ஒரு மாதிரிதான் போலிருக்கிறதே....அவரை வரச் சொல்லுங்கள். மற்றதெல்லாம்..."

பாகியின் நெஞ்சம் பௌர்ணமி நிலவு கண்டதாய் நிறைந்தது: அன்றைய கடலாகப் பொங்கியது. நடையின் தடம் புரியவில்லை ; உடலின் கனம் தெரியவில்லை. ஊதிவிட்ட திசையில் பறக்கும் நெட்டிப் பொம்மைபோல் அவள் ஊர்ந்தாள்.

பிரியும் இடம் வந்தது. ' வருகிறேன் ' என்று கூறிவிட்டு இன்ஸ்டிடியூட் வாசல் படியில் காலை வைத்தாள் பாகி.

" சரி ; ஒரு நிமிஷம். இதைக் கேட்டு விட்டுப் போங்கள். நம்முடைய சந்திப்பைப்



பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் சென்ற 15-4-61 முதல் ஆறு தினங்கள் நடந்த நாடக விழாவில் எம்.ஜி.ஆர். நாடக மன்றத்தினர் பங்கு கொண்டனர். நாடக விழா நிறைவு தினத்தன்று தலைமை தாங்கிய திரு பிருதிவிராஜ் கபூர் பம்பாய்த் தமிழ்ச் சங்க சார்பில், திரு எம்.ஜி. ராமச்சந்திரனுக்கு வெள்ளிப் பேழையொன்றை வழங்கினர்.



பற்றி உங்களுக்குத் தெளிவாக்க விரும்புகிறேன். 'திருமணம் மேல் உலகில் நிச்சயிக்கப்படுகிறது' என்பது நீங்கள் அறிந்த பழமொழியாயிருக்கலாம். பழமொழி ரீதியாக அதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டுமென்றாலும், நடைமுறையில் நம் பெரியவர்களும் பார்த்து நிச்சயிக்கிறார்கள் என்பது நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு ஒப்புக்கொள்ள வேண்டியதாகும். உங்கள் தகப்பனார் முயற்சியின் முதல் கோட்டிலேயே உள்ளுக்கு இழுத்துக் கொள்கிறார். அதனால் நீங்களும் நானும்தான் பொறுப்பாக நடந்து கொள்ள வேண்டியவர்களாகிறோம். இந்தச் சந்திப்பின் அடிப்படையில் உணர்ச்சிகளை வளர விட்டு, அதை 'அந்த' எல்லைவரையில் கொண்டுபோய் விடாதீர்கள். உங்களுக்குச் சொல்லக் கடமைப்பட்டவன் என்ற எண்ணத்துடன் தான் சொல்கிறேன்....''

பாலி தலையை யாட்டிவிட்டு வேகமாக உள்ளே போய் விட்டாள்.

அவள் வீட்டுக்கு வந்தபோது பன்னிரண்டு மணி இருக்கும். வெயில் வேட்டையாடிக்கொண்டிருந்தது. நேரே கிணற்றடிக்குப் போய் முகத்தில் நிறைய நீரை வாரி இறைத்துக் கொண்டு உள்ளே போனாள். முகம் மேலுக்குக் குளிர்ந்தது. மனம் ஏதோ நினைவுகளால் சூடேறியிருந்தது. 'அவர் எதற்காக அப்படிப் பேசினார்?' என்ற கேள்வி பல் சக்கரம் பற்றிப் பற்றிக் கொண்டு சுழல்வதுபோல் அவள் மனதைக் கவ்விக் கொண்டிருந்தது.

உள்ளே பேச்சுக் குரல் கேட்டது.

''....ஜாதகம் வாங்கிக் கொண்டு வந்தீர்களே, அந்தப் பையன்தானோ என்று பார்த்தேன்....'' யார் குரல் என்பது தெரிந்தது பாலிக்கு. தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாமல் மறைவாகவே நின்றாள்.

''சேசே....பையன் என்று சொல்ல முடியுமா இவரை?....இவருக்கு இருக்காதா, நாற்பது நாற்பத்திரண்டு....''

''ராஜமுகம் என்றெல்லாம் அன்றைக்குச் சொன்னீர்களே; அதை வைத்துக் கொண்டு யூகித்தேன்...''

அம்மாவின் குரலுடன் புது டிகாக்ஷன் இறங்கும் வாசனையும் கலந்து வந்தது. யாரோ வந்திருக்கிறார்கள் என்று, தாய்க்குமேல் பெண் யூகத்தில் முந்தி, முகத்தை மட்டும் நீட்டிக் கூடத்தில் பார்த்தாள்.

ஒரு புதிய மனிதர்! 'பெரிய மனிதர்' என்ற தோற்றம் எச்சரிக்கையாக முதலில்வந்து பதித்தது. நாற்காலி நிறைய உட்கார்ந்து கொண்டிருந்தார். களையான முகம். அகிதமாக, உயரமும் பருமனுமாகவும் ஒரே கம்பீரமாகவும், பார்த்த பார்வையைக் கீழே சுழற்றி அடித்து விடுகிற ராஜ தோற்றம். மேலெல்லாம் ஒரே பாலாய் வழிந்தாற்போல் நிறை சிவப்பாய்—சிவப்புகூட இல்லை — சிவப்பை மறைத்த வெள்ளையாய்த் தெரிந்தார். வேஷ்டியும் சட்டையுமே கண்ணைப் பறிக்கும் வெள்ளை; பாலேவிட்டுக் கொண்டு ஸ்நானம் செய்துவிட்டு வந்து உட்கார்ந்திருக்கிறமாதிரியிருந்தது. தலையிலும் பால் துளிகள்; நரை இல்லை அது: நாரையின் நிறத்தைச் சொல்லிக் கொண்டிருந்த சிகை வாகு.

அவர் கூடத்தைச் சுற்றிப் பார்த்துக்கொண்டிருந்தார். அவர்கள் வீட்டுக்கூடத்தில் பார்க்க என்ன இருக்கிறது? பூஜைப் படங்கள் ஒரு மூலையில்; போன வருஷத்துக் காலண்டர் ஒன்று: நடுச்சுவரில் எழுதும் அட்டையில் 'கிளிப்'பில் சிக்கிய வஸந்தனின் ஜாதகம் இவ்வளவுதான்...

அம்மா—அப்பாவின் பேச்சு செய்திப் படத்தில் இஷ்டம்போல் மெதுவாயும் தாக்கலாயும் ஒலிக்கும் அறிவிப்பாளர் குரல்போல் தொடர்ந்து கொண்டிருந்தது.

''இவரை மறந்து விட்டேன் என்கிறாயே... இருபது வருஷங்களுக்கு முன்னாலே நம் எதிர் வீட்டில் அம்மாவும் பையனுமாய் மட்டும் ஒரு குடும்பம்...'' என்றார் அப்பா.

''ஆமாம்; ஆமாம். நினைவு வருகிறது. அந்தப் பிள்ளையாண்டானா இவன்? அம்மாவைப் படாதபாடு படுத்துகிற செல்லப் பிள்ளையன்றோ இவன்...இருபது வயசிலே செல்லம்!...''

''ஞாபகம் வந்துவிட்டவுடனே அவன் இவனாக வாயில் வருமாக்கும்! நான் எதற்கு இவரை மெனக்கெட்டுப் பேசி அழைத்துக் கொண்டு

வந்திருக்கிறேன், தெரியுமா? நம்ம பாகியைப் பார்த்து வைக்கட்டுமே என்று...திடீரென்று சந்தித்தோம். அவரே அடையாளம் கண்டு கொண்டு என்னைக் கூப்பிட்டுப் பேசினார். ஒரு ஹோட்டலிலேயே உட்கார்ந்து கொண்டு ஒரு மணி நேரம் பேசினோம்...நம்ம குடும்பத்துக் கதையைச் சொன்னேன்; அவர் கதையைச் சுருக்கமாகச் சொன்னார். செல்லம் கொடுத்த அம்மாவுக்காக அவள் கண் மூடு முன் ஓர் அழகான பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொண்டாராம். இரண்டு பேரும் கண்ணை மூடிவிட்டதை இந்த வயசில் கண்டு விட்டார்...''

''அட ராமா!''

''பணம் கொழிக்கிறார். சொந்தத்திலே பெரிய கம்பெனி ஒன்று நடத்துகிறார்...''

''சூடு ஆறிப் போவதற்குள் காப்பியைக் கொண்டு போங்களேன்....''

பாகியின் நெஞ்சில் கஞ்சி கொதித்தது. அவள் மனத்தில் பூத்திருந்த மலர் அனலில் ஆடியது. மெல்லக் கூடத்தில் எட்டிப் பார்த்தாள். அவர் மணக்கும் காப்பியைத் தோரணையுடன் குடித்துக் கொண்டிருந்தார். அப்பாவின் நிலையைக் கண்டு அவளுக்கு ஒரே ஆத்திரமாக வந்தது. 'ஏன் இந்த அப்பா இப்படிச் சேவகனாய் மாறிக் கிடக்கிறார்'

கேதாரி சர்மா நாற்காலியின் நடுவில் இரு புறமும் இடிபடாமல், முதுகும் சாய்வைத் தொடாமல், முன் விளிம்பில் ஒட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். நாய்போல் நாக்குத் தொங்காததுதான் குறை.

''குழந்தை வீட்டில் இல்லை. இன்ஸ்டிடியூட்டில் இருந்து வந்திருப்பாள் என்று நினைத்து உங்களை அழைத்து வந்தேன்....''

''அதனால் என்ன! பரவாயில்லை. நீங்கள் அவ்வளவு சொல்லியிருக்கும்போது நான் வேறே பார்க்க வேண்டுமா?''

அவர் எழுந்து விடைபெற்றுக் கொண்டு சென்றார். வெள்ளை வெளேரென்று ஒரு 'விந்திப்பக' எழுந்து சென்றாற் போலிருந்தது.

மறுநாளே வீட்டில் கல்யாணப் பேச்சு தொடங்கி விட்டது. பாகியின் மனத்தில் தைத்திருந்த முள்ளை எடுக்க யாரும் வரவில்லை. யாருக்குத் தெரியும், அவள் உள்ளத்தில் முள்ளும் மலரும் பயிரானதெல்லாம்? ஒரு மாதிரி, பக்குவமாகக் கல்யாணம் குதிர்ந்திருப்பதை மட்டும் அம்மா அவளிடம் சொல்லி விட்டாள். வெள்ளிக்கிழமை பெண் பார்க்க வருகிறாராம்!

மேலுக்குப் பூசுகிற பூச்சைக் கண்டு பாகிக்கு எரிச்சல் குமைந்து வந்தது. 'அப்பாவும் அம்மாவும் என்னுடன் இன்னொரு பொம்மையைச் சேர்த்து விளையாட முனைகிறார்களா?...விளையாட்டு என்றும் சொல்ல முடியாது. கடமையைக் கழித்துவிட்டு நல்ல பெயர் வாங்கிக் கொள்ளத் துடித்து ஓர் அவல நாடகம் போடுகிறார்கள்...'.

பூத்திருந்த பாகியின் உள்ளம் பூஞ்சைக் காளான் பிடித்து வாடியது.

பாகியின் உள்ளத்துக்குச் சவாலாக வெளி உலகில் மரங்கள் பூத்துக் குலுங்கின. அவள் வீட்டு ஜன்னலிலிருந்து பார்த்தால் எதிர் வீட்டு மாடிக்குப் பின்னால் 'ஹோ' வென்று தலைவிரித்த ஓர் அரசமரம் தெரியும். அதன் கிளைகளையும் குச்சிகளையும் எண்ணி விடுகிறாற் போல் இலையுதிர்ந்து கிடந்தது இத்தனை நாட்களாய். இப்போது அது கொழுந்து பிடித்திருந்தது. அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள் பாகி.

''என்ன சுவாரசியமாகப் பார்த்துக்கொண்டிருக்கிறாய், பாகி?''

அவள் திரும்பிப் பார்த்தாள். அவளது முகம் தாழ்ந்தது. சிவக்காமலும் இல்லை...

''எப்போது வந்தீர்கள்? கார்...?''

''நான் காரில்தான் வர வேண்டுமா? காரில் வந்தால் உடனே திரும்பிப் போக வேண்டும். காரைக் கம்பெனி அலுவல்களுக்கு விட்டு வந்திருந்தால் அரை நாளாவது தங்கிவிட்டுப் போகலாம். நான் எப்படி வந்தால் தேவலை, சொல்...?''

''காரை நிரந்தரமாகக் கம்பெனிக்கு விட்டு விட்டு வந்து விடுங்கள்...''

''கல்யாணத்தின்போது உனக்கு ஜுரம் என்றார் அப்பா...இப்போது உனக்கு எப்படியிருக்கிறது?''

''இப்போது நன்றாகத் தேவலை...''

''ஒரு நாள் பார்க்கச் சொல்லியிருக்கிறேன், உன் தகப்பனாரை. இந்த வாரக் கடைசியில் உன்னை அழைத்துக்கொண்டு போகலாமென்றிருக்கிறேன்...''

பாகியின் கண்களில் ஒளி கூடியது. நிமிர்ந்து அவரைக் கழுத்துவரை பார்த்தாள். பாலில் குளித்துவிட்டு வந்த உடலா இது?...

''நீ ஏதோ இன்ஸ்டிடியூட்டில் படிக்கிறாய் என்றார் உன் தகப்பனார். அதெல்லாம் இனிமேல் வேண்டுமா?''

''உங்கள் இஷ்டம்...''

''என் இஷ்டம்...,என் இஷ்டப்படி நான் செய்த ஒரு காரியத்தைச் சொல்லட்டுமா?... உன்னை ரொம்ப நாட்களாக நான் பார்த்துக் கொண்டு வந்திருக்கிறேன். உன்னையே கல்யாணத்தின் மூலம் அடைகிற நிலை ஏற்பட்டதும்தான் அப்படிச் செய்கிற ஓர் அவசியம் ஏற்பட்டது. என் கம்பெனியில் வேலைசெய்த வஸந்தன் என்ற பையனை வேலையை விட்டு நீக்கினேன். அவன் உன்னோடு பேசிக்கொண்டு இரண்டொரு தரம் சென்றதே எனக்குப் பிடிக்கவில்லை. அத்துடன் அவன் ஜாதகத்தையும் உன் தகப்பனார் வாங்கிப் பார்த்திருக்கிறார் என்றும் கேள்விப்பட்டேன்...அவனை வேலையில்லாதவனாகச் செய்து உன்னை அடைய வேண்டும் என்பதும் என் முடிவாக ஏற்பட்டது...நான் செய்தது உனக்கு நல்லது தானே?...''

பாகி பதில் பேசவில்லை. ஒரு புன்னகையில் அந்தப் பேச்சையே வெட்ட நினைத்தாள். அதற்கு ஏற்றதான புன்னகையாக அமைந்தது அது!

புதுமை பெறுக! இதம் பெறுக!
நளினமாய் இருங்கள்! நாள் முழுதும்!

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்தபின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது... உன்னத மனோரம்மிய மணம் கொண்டது.



# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய
மணத்துடன் கூடிய
டால்கம் பௌடர்!

## 18 சிறந்த மூலிகைகள் கலந்து முதல்முதலாக தயாரிக்கப்பட்ட



# ஆயுர்வேதிக்

## பேஸ்ட்டும், பௌடரும்

உலகத்தில் எல்லா டூத்பேஸ்ட்டும், பௌடரும் பற்களை சுத்தம் செய்கிறது. ஆனால், ஈறுகளை பலப்படுத்த என்னென்ன கலவைகள் அதில் சேர்க்கப்பட்டுள்ளன என்று யோசித்துப் பாருங்கள். முதல் முதலாக ஆயுர்வேதிக் 'விக்கோ வஜ்ர டன்தி' (பேஸ்ட்டும், பௌடரும்) 18 சிறந்த மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்பட்டது. ஈறுகளை நன்றாக இறுகச்செய்து பற்களை மிகவும் பலப்படுத்துகின்றன. ஒரு முறை உபயோகித்து திருப்தியடையுங்கள்.

# விக்கோ வஜ்ரடன்தி

## பேஸ்ட்டும், பௌடரும்







**VICCO LABORATORIES** DADAR T.T., BOMBAY 14.

ஏஜெண்டுகள் :

மெஸர்ஸ் ஆர். எல். கௌடர் அண்டு கம்பெனி, சென்னை-1

மெஸர்ஸ் கே. எஸ். கௌடர் அண்டு கம்பெனி, பெங்களூர்-9

மெஸர்ஸ் என். தேசாய் கவுண்டர் அண்டு கம்பெனி, கோயமுத்தூர்-1




## 25. சிதைந்த கோவில்!

இப்பொழுது மே மாதத்தின் மூன்றாவது வாரம் நடந்து கொண்டிருக்கிறது. இதே மே மாதம் மூன்றாவது வாரத்திலேதான் ஒரு புனிதமான முயற்சி தொடங்கியது, 'யார்க்ஷைர்' வட்டாரத்திலே! எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு மே மாதத்தின் பத்தொன்பதாந் தேதி தொடங்கியது அந்தத் திருப்பணி!

'ஹென்ரி' என்ற ஒரு பிரபுவுக்குக் கடுமையான நோய் கண்டது. எத்தனையோ பல வைத்தியர்கள் மருந்து கொடுத்தும் நோய் தணியவில்லை. நிலைமை மிகவும் கவலை தந்தது. அப்பொழுது அந்தப் பிரபு ஒரு "நேர்த்திக் கடன்" செய்து கொண்டார். "என்னுடைய வியாதி குணமாகி நான் எழுந்தால், கன்னியம்மனுக்குக் காணிக்கையாக ஒரு பெரிய மடாலயம் கட்டுகிறேன்" என்று பிரார்த்தனை செய்து கொண்டார் அவர்!

ஹென்ரி என்ற பிரபுவுக்கு ஏற்பட்டிருந்த நோய் படிப்படியாக வாசியாகி அவர் எழுந்து விட்டார்! உடனே தம் பிரார்த்தனையை நிறைவேற்றத் தொடங்கினார். 1147ம் ஆண்டு மே மாதம் 19ந் தேதியன்று அலெக்ஸாண்டர் என்ற துறவியையும் அவரோடு பன்னிரண்டு துறவிகளையும், பத்து அடியார்களையும் அழைத்து நிலமும் பணமும் வழங்கி ஒரு பெரிய மடாலயம் கட்டுவதற்கு ஏற்பாடு செய்தார்.

துறவி அலெக்ஸாண்டரும் அவருடைய சீடர்களும் மடம் கட்டிக் குடியிருக்கத் தொடங்கிய பிறகு பல தொல்லைகள் நேர்ந்தன. மழையினால் பலத்த சேதம் ஏற்பட்டது. மடத்தைச் சுற்றிப் பயிர் செய்திருந்த நிலங்களுக்கெல்லாம் அழிவு நேர்ந்தது. எனவே துறவி வேறு நல்ல இடம் ஒன்று தேர்ந்தெடுக்க முனைந்தார். இந்த நோக்கத்தோடு அவர் 'லீட்ஸ்' எல்லையிலே பல இடங்களையும் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தபோது, நதியின் கரையிலே சில அடியார்கள் ஒரு சிறு குடியிருப்பு அமைத்துக் கொண்டு கிறிஸ்து பெருமானின் புனித மார்க்கத்திலே தங்கள் வாழ்வை நடத்தி வருவதைக் கண்டார். அவர்களிடம் சென்று விசாரித்ததில் அவர்களுடைய தலைவர் சொன்னார்: "எங்களுடைய கனவிலே இறைவன் எங்களுக்கு இந்த இடத்தைக் காட்டினான். நாங்கள் இங்கே வந்து குடியேறினோம்!"

இந்த வார்த்தைகளைக் கேட்டதும், அலெக்ஸாண்டர் அந்த அடியார்களோடு ஒத்துப் பேசி ஓர் உடன்படிக்கை ஏற்படுத்திக் கொண்டு, வள்ளலான பிரபுவிடம் வந்து செய்தியைத் தெரிவித்தார். அதன் பேரில் அந்த நதிக்கரையிலே ஒரு புதிய மடம் கட்ட ஆரம்பித்தார்கள். 1152ம் ஆண்டு மே மாதம் 19ந் தேதி திருப்பணி தொடங்கியது. மிகப் பெரிய மடாலயம் எழுந்தது. இந்த மடாலயத்தின் சிதைந்த பாழ்வெளிகளையே இன்று நாம் பார்க்கிறோம், லீட்ஸ் நகரத்தின் எல்லை வெளியிலே!

கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்த துறவிகள் உலக வாழ்க்கையிலிருந்தும், நகரச் சூழ்நிலையிலிருந்தும் விலகி வனாந்தரங்களிலே சென்று மடங்கள் அமைத்துக் கொண்டு குடியிருந்ததைப் பற்றிப் பல வரலாறுகள் உண்டு. நம்முடைய நாட்டிலுள்ள மடங்களைப் பற்றிய வரலாறுகள் போலவே, அந்த வரலாறுகளிலும் பல உருக்கமான செய்திகள் காணப்படுகின்றன. முக்கியமாக ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு 'பெனிடிக்ட்' என்ற துறவி ஐரோப்பாவில் பல இடங்களில் மடங்கள் நிறுவித் துறவு மார்க்கத்தைப் பரப்பியது குறித்து விரிவான வரலாறுகள் எழுதியிருக்கிறார்கள். இந்தத் துறவிகளின் சீடர்களே பிற்காலத்தில் இங்கிலாந்துக்கு வந்து அங்கே பல கிளை மடங்களை நிறுவித் தெய்வ வழிபாடு



பாழடைந்த மடாலயம்

நடத்தி வந்தார்கள். லீட்ஸ் நகரத்தில் 'கர்க்ஸ்டால் ஆபி' என்ற இந்த மடாலயத்தை நிறுவியவர்களும் இத்தகைய துறவிகளின் மரபைச் சேர்ந்தவர்கள்தான்!

'கிர்க்ஸ்டால்' மடாலயத்துக்கு நான் சென்றபோது மாலை வெயில் நன்றாகக் காய்ந்து கொண்டிருந்தது. இடிந்த மதிற் சுவர்களும் பெரிய பெரிய வாசல்களுமாகச் சிதைந்த நினைவுகளோடு அஸ்தமன சூரியனின் வெயிலிலே நின்றது அந்த மாபெரும் கட்டடம்! நானூறு ஆண்டுக் காலம் புனிதத் துறவிகள் வாழ்ந்து வழிபாடுகள் நிகழ்த்திய அந்தப் பெரிய மடத்தின் பாழடைந்த சுவர்களைப் பார்த்தபோது மனம் துணுக்குற்றது. தெய்விகமான இலட்சியங்களோடு தொடங்கப்பட்ட தர்மச் செயல் இப்படி முடிந்ததே என்று எண்ணும்போது சோகம் விம்மியது! செல்வந்தர்களின் நன்கொடையிலே வளர்ந்து ஆயிரக்கணக்கான அடியார்களின் ஒத்துழைப்பிலே விரிவடைந்து, கோவிலும், மடமும், அறச்சாலையும், இயானக் கூடமுமாக வானோங்கி நின்ற அந்தப் பெரிய மடம் அந்தக் காலத்தில் 40 ஏக்கர் பரப்பளவு கொண்டதாக, அறச் செங்கோல் செலுத்தி வந்ததாம்! நாளாக நாளாக மடத்துக்குரிய நிலங்களின் நிர்வாகம் சீர்குலைந்ததாம். கம்பளி ரோமத்துக்காக ஆடுகளை வளர்த்து 'உலன்' வியாபாரத்தை விரிந்த அளவிலே பெருக்கி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வந்ததில் பல சிக்கல்கள் ஏற்பட்டனவாம். இவற்றோடு அரசியல் மாறுதல்களும், பிற நிகழ்ச்சிகளுமாகச் சேர்ந்து இந்த மாபெரும் மடத்தின் வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்தன என்பதை அறிந்தபோது அந்தப் பாழ்வெளியின் சோகக் கதை மனத்தை வேதனைப்படுத்தியது.

ஆங்கிலேயர்களிலே சரித்திர ஆராய்ச்சியில் தேர்ந்த சிலர் இப்பொழுது அந்தப் பாழ் நிலத்தைத் தோண்டிப் புதைபொருள்களை எடுத்துப் பல ஆராய்ச்சிகள் நடத்தி வருகிறார்கள். அந்த எல்லை முழுதும் லீட்ஸ் நகராண்மைக் கழகத்தின் பொறுப்பிலே இப்பொழுது இருந்து வருகிறது. பாழடைந்த மதிற்சுவர்களுக்கு மத்தியிலே பூஜை அறை, உணவுச் சாலை, துறவிகளின் குளியறை, அவர்கள் தொழுகை நடத்தி வந்த இயானக் கூடம், பண்டகச் சாலை என்று பகுதி பகுதியாகக் குறிப்புக்கள் எழுதி வைத்திருக்கிறார்கள். விசாலமான புல்வெளியும், ஓடையும், பிரயாணிகள் வந்து பார்ப்பதற்கான வசதிகளும், ஒரு சிறு உணவு விடுதியும் இப்பொழுது அங்கே நிற்கின்றன! எதிரே சாலையின் மறுபுறம் காட்சி நிலையம் ஒன்று இருக்கிறது. இந்தக் காட்சி நிலையத்தில் புதைபொருள்கள் சிலவற்றையும் வேறு பல சரித்திரப் பொருள்களையும் வைத்திருக்கிறார்கள். அழகான பல்லக்கு ஒன்று காட்சி தருகிறது. ஒரு பெரிய ஒழுக்கறைப் பெட்டியும் அங்கே இருக்கிறது! இன்னொரு பகுதியில் சிறுவர்களுக்கான விளையாட்டுப் பொருள்கள், குழந்தைப் புத்தகங்கள், சிறு சிறு பொம்மைகள் முதலியன இந்தக் காட்சி நிலையத்தில் சரித்திரக் குறிப்புக்களோடு வைக்கப்பட்டிருக்கின்றன. இவை தவிர, துவாரங்கள் கொண்ட அட்டைகளிலே வர்ண நூல் கொடுத்துப் பின்னிய பல சித்திரங்களும் பார்த்தேன். இந்தப் படங்களிலே ஒன்று தமிழர்களை மிகவும் கவரக்கூடியது! ஒரு பாறையிலே வயதான ஒரு மனிதன் உட்கார்ந்திருக்கிறான். அவனுடைய கையிலுள்ள பாத்திரத்திலிருந்து ஒரு பெரிய கழுகு உணவு சாப்பிடுகிறது. பாறையிலே உட்கார்ந்திருக்கிற மனிதன் ஒரு கம்பளிப் போர்வையைப் போர்த்திக் கொண்டிருக்கிறான். கழுகு அவனுக்கு அருகிலே வந்து கைப்பாத்திரத்திலிருந்து உணவு சாப்பிடுவதைப் பார்த்ததும் எனக்குத் திருக்கழுக்குன்றத்தின் நினைவுதான் வந்தது. இந்தப் படத்துக்குக் கீழே வேறு ஏதாவது குறிப்பு இருக்கிறதா என்று பார்த்தேன். 1841ல் செய்யப்பட்டது என்பதைத் தவிர வேறு எவ்விதமான செய்தியும் அதில் காணப்படவில்லை.

மடத்தில் துறவிகள் குடியிருந்து ஞானச் செங்கோல் செலுத்தியபோது, அந்த வட்டாரம் எப்படியிருந்தது என்பதற்குப் பல புத்தகங்கள் அங்கே விற்கிறார்கள். விடியற்காலையில் இரண்டு மணிக்கே பழைய துறவிகள் எழுந்து விடுவார்கள் என்றும், பெரும்பாலும் மௌனவிரதமே அவர்கள் கடைப்பிடித்தார்கள் என்றும், ஆடம்பரம் ஏதும் இல்லாமல், மிக எளிய வாழ்க்கை நடத்தினார்கள் என்றும், நடையிலும் பழக்க வழக்கங்களிலும் வறுமை என்பதையே ஆபரணமாக அணிந்திருந்தார்கள் என்றும் உருக்கமாக வர்ணித்திருந்தார்கள் அந்தப் புத்தகங்களிலே! நாளடைவில் வியாபார நோக்கமும், நகர ஆடம்பரமும், வேறு பல மாறுதல்களும் புகுந்து மடாலயங்களின் புனித வாழ்வுக்கு உலை வைத்தன என்பதை ஆதாரங்களோடு எழுதியிருக்கிறார்கள்.

இதையெல்லாம் பார்த்துவிட்டு, மறுநாள் இன்னொரு சரித்திரப் புகழ் பெற்ற இடமாகிய 'டெம்பிள் நியூசம் ஹவுஸ்' என்ற மாபெரும் மாளிகையைக் காண்பதற்குச் சென்றேன். புல்வெளியும், பெரிய பெரிய மரங்களுமாக அடர்ந்துள்ள சோலை வெளியிலே நிற்கிறது இந்தப் பெரிய அரண்மனை! ஓக், செஸ்ட்நட்,

சிகமூர், எல்ம், பீச் என்று பெரிய பெரிய மரங்கள்! கண்ணுக்கு எட்டிய மட்டும் பச்சைப் பசும் புல்வெளி! இந்த அழகான சூழலிலே நிற்கிற மாளிகை 1922ம் ஆண்டில் ஹாலிபாக்ஸ் பிரபுவினால் 'லீட்ஸ் நகராண்மைக் கழக'த்துக்கு விற்பனை செய்யப்பட்டதாம்!

ஹாலிபாக்ஸ் பிரபு என்றதும் நமக்கு எத்தனை நினைவுகள் எழுகின்றன! ஆம், நம்முடைய இந்திய நாட்டின் வைஸ்ராயாக இருந்த இர்வின் பிரபுவின் முன்னோர்களுடைய மாளிகைதான் இது. இன்று இது பல சரித்திரப் பொருள்களோடு, வெளிநாட்டு யாத்திரிகர்களுக்கு ஒரு விநோதக் காட்சிச் சாலையாகத் திகழ்கிறது! இந்தியாவிலிருந்து சென்ற பல பொருள்களை இங்கே பார்த்தேன் என்று சொல்லத் தேவையில்லை. நமது நாட்டுப் பட்டு வேலைப்பாடுகள் அமைந்த சித்திரத் துணி ஒன்றில், மஞ்சளும் வெள்ளையும் நீலமும் கொண்ட பின்னணியிலே ஒரு செவ்வந்தி மலரின் சித்திரம் அற்புதமான எழிலோடு மூன்றாவது மாடியிலே காட்சி தருகிறது. மூன்று பக்கம் கண்ணாடி பதித்த ஒரு ப்ரெஞ்சுப் பல்லக்கும் இந்த மாளிகையிலே பார்த்தேன். அறைகளிலே வைத்துள்ள பளபளப்பான சித்திர விசித்திர மேஜைகளும், நாற்காலிகளும், சாய்மானங்களும், இருக்கைகளும், பாத்திரங்களும் செல்வச் சீமான்களின் வாழ்க்கைநிலையை எடுத்துக் காட்டுகின்றன! அங்கேயுள்ள சுவர்களிலே தொங்கும் வர்ணச் சித்திரங்களில் "ஆதாமும் ஏவாளும்" என்ற ஒரு படம் பார்க்கப் பார்க்க நெஞ்சை அள்ளக்கூடிய நேர்த்தியான தொரு காவியம்! இது தவிர புகழ்பெற்ற மேனாட்டு ஓவியர்கள் பலர் வரைந்துள்ள அழகழகான உருவப் படங்களும் இந்தச் சுவர்களை அலங்கரிக்கின்றன!



'ந்யூசம்' மாளிகையின் நீண்ட அறைகளில் ஒன்று.

இந்த ஓவியங்களையெல்லாம் பார்த்து அனுபவித்து விட்டு லீட்ஸ் நகரத்தின் மத்தியிலேயுள்ள கலைக்கூடத்துக்குச் சென்றேன்!

லீட்ஸ் கலைக் கூடத்திலே விலைமதிப்பற்ற ஓவியங்கள் பல இருக்கின்றன. உலகின் பல பகுதிகளிலும் சென்று சேகரிக்கப்பட்ட சித்திரங்கள் அவை! கலைப் பொக்கிஷங்கள் என்று பாராட்ட வேண்டிய ஏராளமான ஓவியங்களுக்கு மத்தியிலே தமிழ் நாட்டுக் காட்சிகள் இரண்டைப் பார்த்து அப்படியே பிரமித்துப் போய் விட்டேன். ஒன்று 'இந்தியக் கோவில்' என்ற தலைப்பில் 'வில்லியம் வெல்டால்' என்ற ஓவியர் வரைந்துள்ள ஒரு வனதேவதையின் கோவில்! நம்முடைய நாட்டில் மரமடர்ந்த காட்டுக்கு மத்தியிலே ஒரு கிராமக் கோவிலைப் பார்த்து விட்டு அதே போல் வரைந்திருக்கிறார் இந்த ஓவியர். இன்னொன்று தமிழ்ப் பெண் ஒருத்தி குடத்தில் தண்ணீர் எடுத்துச் செல்லும் காட்சி. இது ஹார்லல் என்ற ஓவியர் வரைந்தது.

இந்த இரண்டு படங்களின் கலைத்தரம் ஒரு புறமிருக்க, நம்முடைய நாட்டுக் காட்சிகள் என்ற சிறப்பே நம்மை மகிழ்ச்சியில் ஆழ்த்தி விடுகிறது!

லீட்ஸ் நகரத்தின் முக்கியமான பெருமை நெசவாலைத் தொழில்தான்! லீட்ஸ் பல்கலைக் கழகத்தின் தொழில் நுட்பப் பகுதியை மிகவும் விரிவு செய்து வெளிநாட்டிலிருந்து வரும் மாணவர்களுக்குச் சிறப்புப் பயிற்சி வழங்கி வருகிறார்கள்; முக்கியமாக நெசவாலைத் தொழிலுக்கு வேண்டிய ஆராய்ச்சி நிபுணர்களுக்கு இந்தப் பல்கலைக் கழகம் சிறப்புப் பயிற்சி யளித்து வருகிறது.

பெரிய நகரம்; தொழில் வளமும், செல்வச் செழிப்பும், மகத்தான கட்டடங்களும், பெரிய பெரிய அங்காடிகளுமாக நவீன நாகரிகப் படபடப்புக்கள் நிரம்பியுள்ள ஒரு பட்டணந்தான் லீட்ஸ்! என்றாலும் அந்த நகரைப் பற்றி இன்று எண்ணிப் பார்க்கும்போது கடைவீதிகளும், பல்கலைக் கழகமும், கலைக் கூடங்களும், அடுக்கு மாடிகளும் மட்டுந்தானா நினைவுக்கு வருகின்றன? இவையெல்லாவற்றுக்கும் மத்தியிலே லீட்ஸ் நகரத்தின் எல்லை வெளியில் பாழடைந்து கிடக்கும் சுவர்களும், மதில்களும், புனிதத் திருப்பணியின் சோக முடிவாகச் சிதைந்து போய்க் காணுகிற மடாலயத்தின் துயரக் காட்சியுமே முனைப்பாக வந்து கண் முன்னே நிற்கிறது! மடாலயத்தின் இந்த நினைவு அலைகளோடு லீட்ஸிலிருந்து 'யார்க்' நகரம் சென்றேன்; அங்கே மீண்டும் மடாலயங்களை நினைவு படுத்தக்கூடிய விதத்தில் சில முக்கியமான காட்சிப் பொருள்களைப் பார்த்தேன். அங்குள்ள 'ம்யூஸிய'த்தில் அழகழகான பல நவரத்தின அணிகலன்களுக்கு மத்தியிலே நம்முடைய சைவ மரபோடு ஒட்டிய ருத்திராக்ஷ மாலையைக் கண்டேன்! (தொடரும்)



பிரபல வைர வியாபாரி ஸ்ரீ டி. ஆர். அய்யங்கார் அவர்களின் பேத்தி சௌ. நிர்மலா, திரு சந்தானம் அவர்களை மணம் புரிந்துகொண்டார்.



கொடுமுடி மிராசுதார் திரு ராமஸ்வாமி அய்யர் அவர்களின் புதல்வர் திரு ஹாலாஸ்யத்துக்கும் சௌ. திலகத்துக்கும் திருமணம் நடந்தது.



திரு பவநாராயணனுக்கும், மாஸ்தி ஸ்ரீ வெங்கடேசய்யங்கார் பேத்தி சௌ. ஸ்ரீஜயந்திக்கும் பங்களூரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.



சொக்கநாதபுரம் கல்கி ஏஜெண்ட் திரு எஸ். ராஜேந்திரனுக்கும் சௌபாக்கியவதி மீனுவுக்கும் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

# வாழ்க மணமக்கள்



தென்னிந்திய ரயில்வே உதவி பிரதம என்ஜினியர் திரு எஸ். ராஜகோபால் அவர்களின் புதல்வி சௌ. பிரேமா திரு சீதாராமனை மணந்து கொண்டார்.



காவேரி ஷுகர் அண்டு கெமிக்கல்ஸ் கம்பெனியைச் சேர்ந்த திரு பி. ஆர். ராமச்சந்திரனுக்கும், சௌ. சாரதாவுக்கும் விவாகம் சிறப்பாக நடைபெற்றது.

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




**ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.**

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிசோதனைகள் நிரூபித்தன்ன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீசவும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

DCG.52QT-TAM.

# அன்பே ஆரமுதே

தி. ஜானகிராமன்

## அத்தியாயம் ஏழு

நுங்கம்பாக்கம் முதலியார் தம் வேலைக்காரன் ஏழுமலையைப் பற்றிச் சொல்வது அனந்தசாமிக்கு நினைவு வந்தது. "நம்ம ஏழுமலையை என்னான்னு நினைக்கிறீங்க? உங்களுக்குச் சன்யாசம் தொழில். வைத்தியம் பொழுதுபோக்கு. எனக்குக் கட்டட கண்டிராக்ட் தொழில். பிரசங்கம் கேட்கிறது பொழுதுபோக்கு. நம்ம வீட்டிலே ஏழுமலைக்கு வேலை. கலியாணம் பண்ணிக்கிறது பொழுது போக்கு. ஆமாங்க-என்ன சிரிக்கிறீங்க? நான் சொன்னா நம்ப மாட்டீங்க. அவனையே வேணுக் கேட்டுப் பாருங்க, திடீர்னு நெனச்சுக்கிட்டு ஒரு கலியாணத்தைப் பண்ணிக்கிட்டு வந்திடுவான். வில்லிவாக்கத்திலே யிருந்து புடிச்சா அடையாறு வரைக்கும் அவனுக்கு ஒன்பது பொஞ்சாதி இருக்கு. கடற்கரை ஓரமாகக் குப்பத்திலே வேறு ஒரு கலியாணம் பண்ணிக்கிட் டிருக்கான். ஆனால் எல்லாம் கட்டின பகவாட்டம் இருக்கும். ஒரு தம்பிடிக் காசு கேட்காது. அதது. ரோட் வேலை, வீட்டு வேலை, கொல்லத்து வேலைன்னு சாப்பிட்டுப் பொளைச்சிட்டிருக்கு. ஐயா இப்படிப் போவாரு...பஜ்ஜி என்ன, 'பன்' என்ன, டீ என்ன-அப்படி உபசாரம் அவருக்கு நடக்கும். தலைப்பிலே ரண்டு மூணு இருந்தா அதையும் வாங்கி முடிஞ்சுக்கிட்டு வருவாரு, அப்படித்தானேயா!" என்பார். பெரிய மீசை சரிந்து தொங்க நாணத்துடன் சிரிப்பான் ஏழுமலை. "ஏன்யா, நான் சொல்றது சுசரிதானேய்யா?" என்று ஏழுமலையை அதட்டுவார் முதலியார்.

"ஆமாங்க. தம்மாத்துண்டுன்னு, ஐயா இம்மாம் பெரிசாத்தான் சொல்லுவாங்க...."

"ஏய், உனக்கு ஒன்பது பொஞ்சாதி இருக்கா இல்லியாடா?"

"இருக்கு."

"யாருக்காவது ஒரு மிட்டாயி வாங்கிக் கொடுத்திருப்பியா? அல்லது நீ ஒரு இட்டிலித் துண்டு....?"

"வாங்கிக் கொடுக்காம? சும்மாவா?... ஐயாவுக்கு என்னைச் சதாச்சுக்கினே இருக்கணும்" என்று சிரித்து மழுப்பிக் கொண்டே போய்விடுவான் அவன்.

"பார்த்தீங்களா? நிக்கிறானு பார்த்தீங்களா? ஒரு பொஞ்சாதியைக் கட்டிக்கிட்டு ஒம்பதாயிரம் கவலையைத் தாங்கிட்டுக் குந்தியிருக்கிறோம். அவனுக்குக் கலியாணம் பொழுதுபோக்காயிடிச்சு" என்று கூறி முதலியார் சிரிக்கிற வழக்கம்.

இவ்வளவு வேடிக்கை நிறைந்த உலகத்தைத் துறந்து, காட்டிலும் மடத்திலும் உட்கார்ந்து எதைப் பார்க்கப் போகிறோம் என்று நினைத்துக் கொண்டார் அனந்தசாமி. சந்து முக்குத் திரும்பியதும் தமிழ்ப் பண்டிதர் மகாதேவன்



வீடு வந்துவிட்டது. மகாதேவன் குழந்தைக்கு அன்று இரண்டாவது ஆண்டு நிறைவாம். சாப்பிடச் சொல்லியிருந்தார். நடுவில் பிழைக்காமல் கிடந்த குழந்தை. அவர் மருந்தைச் சாப்பிட்டுப் பிழைத்து மூன்றாவது ஆண்டில் அடி எடுத்து வைத்த சந்தோஷம். சாப்பாட்டுக்கு அழைத்து விட்டார் மகாதேவன். அதற்காகத்தான் வழக்கத்துக்கு மாறாக, காலையில் குளித்தவுடனேயே வீட்டை விட்டுப் புறப்பட்டுச் சிந்தாதிரிப் பேட்டை, மீர்சாகிப்பேட்டை சத்தார் சாயபு வீடு, இரண்டையும் முடித்துக் கொண்டு வந்தார் அனந்தசாமி.

சாப்பாட்டில்கூட அவர் மனசு முழுவதும் செல்லவில்லை. இலையில் உட்காரும்பொழுதே மணி பதினொன்று. பதினொன்றரை மணிக்குப் பழைய மாம்பலம் சுப்பராம பாகவதர் வீட்டுக்குப் போயாக வேண்டும். வேறு யாருக்கோ வைத்தியம் செய்ய வேண்டுமாம். பெரிய மனிதனாம். 'யார்? என்ன?' என்று ஒன்றும் சொல்லாமல் பூடகமாகச் சொல்லியிருந்தார் அவர். "நாளைக்குப் பதினொன்றரை மணிக்கு வந்துவிடுங்களேன். கார் அனுப்புகிறேன் என்று சொல்லி



யிருக்கிறான். அந்தச் சமயந்தான் கொஞ்சம் ஓய்வு கிடைச்சிருக்காம். அவனுக்கு மூச்சுவிடவே பொழுது கிடையாது. அப்படி வேலை வேலை என்று அவன் பறக்கிறானே" என்று சற்று அதிகப்படியாகவே வற்புறுத்தி வரச் சொல்லியிருக்கிறார்.

ஆண்டு நிறைவுச் சாப்பாடு, மகாதேவனின் உபசாரம், இரண்டையும் தாண்டிக் கரையேற வேண்டிய கவலை அவரை அரிக்கத் தொடங்கிவிட்டது. இந்த ஏறுபடிச் சாப்பாடுகளைத் துறந்து வருஷக் கணக்கில் ஆகிவிட்டது. சென்னையையே காலால் அளக்கும் நடராஜ வைத்தியத்துக்கும் அதற்கும் ஒத்து வருவதில்லை என்றுதான் அவர் கைப் பொங்கலையே புகலாகக் கொண்டிருந்தார். அதற்கு இந்த மாதிரி சோதனைகள் வரும்பொழுதெல்லாம் 'ஹோ'வென்று அழ வேண்டும்போலிருக்கும். நிஷ்டூரமான வார்த்தைகள், வஞ்சனை, அடி, அவமானம் எதையும் பொறுத்துக்கொள்ள முடியும். உபசாரத்தைத்தான் சகித்துக்கொள்ள முடிவதில்லை அவரால்.

கவலை கவலையாகத்தான் மிஞ்சிற்று.

அவர் விடைபெறும்போது பதினொன்றரை அடித்தது. பஸ்ஸைப் பிடித்து, மாம்பலத்தில் இறங்கி, ரயிலடி மேம்பாலத்தைக் கடந்து பாகவதர் வீட்டை அடையும்பொழுது மணி பன்னிரண்டே கால். என்ன செய்வது?

"விரோதிகளோடு பழக முடியும். விருந்து போடுகிறவர்களோடு பழக முடியாது" என்று சொல்லிக் கொண்டே காம்பவுண்டைக் கடந்தார் அவர்.

"வரணும், வரணும்" என்று ஹாலில் சாய்வு நாற்காலியைப் போட்டு, வாசலைப் பார்க்க அமர்ந்திருந்த பாகவதர் அவரை வரவேற்றார்.

"ரொம்ப நேரம் தவறி வந்திருக்கிறேன்" என்றார் அனந்தசாமி.

"மன்னிப்புக் கிடக்கட்டும். முதலில் உட்காருங்கள். நீங்களும் இந்த வெயில் வீணாகாமல் அலையோ அலை என்று அலைகிறீர்கள். உங்களை நினைத்தாவது ஒரு மணி நேரம் பகவான் இந்த உலகத்தை வியாதியில்லாமல் வைத்திருக்கலாம். உட்காருங்கள்' என்று நாற்காலியைக் காட்டினார் பாகவதர். "பெரிய மனுஷன் இன்னும் கார் அனுப்பவில்லை. பேசாமல் உட்காருங்கள்..... யாரங்கே?..... சுவாமிக்கு ஜில்லுனு ஏதாவது கொண்டாயேன் குடிக்க" என்று உள்ளே திரும்பிப் பலமாகக் கத்தினார்.



"பரவாயில்லை" என்று அனந்தசாமி சொல்லவில்லை. அவருக்கு நாக்கு உலர்ந்து ஒட்டிக் கிடந்தது.

"இப்பொழுது பூனைக்குக் காலம் வந்துவிட்டது" என்றார் பாகவதர்.

அனந்தசாமி புன்சிரிப்புடன் பார்த்தார். பாகவதர் என்ன அவிழ்க்கப் போகிறார் என்ற ஆவலில்.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார் பாகவதர்.

"நீங்களே எதுவும் சொல்ல ஆரம்பிக்கவில்லையே."

"இப்பொழுது பூனையின் காலம். ஆனையின் காலம் ஆகிவிட்டது."

"......"

"இது எங்கள் காலம் என்கிறேன், சுவாமி" என்றார் பாகவதர்.

"மேலே சொல்லுங்கள்."

"இருநூறுவருஷங்களுக்கு முன்னால் இந்தச் சுப்பராம பாகவதனை வீட்டுக்குள் அனுமதிக்கக் கூட யோசனை பண்ணியிருப்பார்கள், நம்ம தேசத்தில்....."

"ஏன்?"

"நடன், விடன், காயகன் என்று நட புருஷர்களோடு பாடகனையும் சேர்த்திருந்தார்கள். கலையை அப்பியசிக்கிறவர்களை உள்ளே விட்டால், கவலையையும் கொண்டு வந்து விடுவார்கள் என்று பயம். ஆகவே அவன் ஆடிப் பாடுகிற இடத்துக்கே போய்த் தூர நின்று பார்த்து சந்தோஷப்பட்டுவிட்டுத் திரும்பி விடுவார்கள். இப்பொழுது இந்தச் சுப்பராம பாகவதனுக்கு ஜல தோஷம் வந்து விட்டால் ஹைகோர்ட் நீதிபதி வந்து விசாரித்து விட்டுப் போகிறார். சர்க்கார்

இலாகா காரியதரிசி வந்து பார்த்து, முகரும் மருந்து வாங்கிக் கொடுத்து விட்டுப் போகிறார். சங்கீதத்துக்கே ஜல தோஷம் பிடித்துவிட்டாற்போல் என்ன கவலை, என்ன கரிசனம்,என்ன ஆதரவு!''

"இந்த மாறுதல் நல்லதுதானே. ஏன் இப்படிப் பரிகாசமாகப் பேசுகிறீர்கள்?''

"நான் பரிகாசம் பண்ணவில்லையே. என்னையே நான் பரிகாசம் பண்ணிக் கொள்வேனா? நீங்கள் சன்யாசியாக இல்லாமல், சம்சாரியாக இருந்து, உங்களுக்கு ஒரு பிள்ளையிருந்தால் என்ஜினியரிங் கல்லூரியில் ஓர் இடம் வாங்கிக் கொடுத்து விடுவேன் ஸ்வாமி!''

"கலைஞர்களுக்கு இந்தக் கௌரவமான ஸ்தானம், செல்வாக்கு இருக்க வேண்டியதுதானே. இத்தனை காலமாக மறந்து போன மரியாதையைத் தேசம் மறுபடியும் ஞாபகப்படுத்திக் கொண்டு விட்டது. கொடுக்கிறது.''

"ஆமாம்! ஆமாம்! ஆமாம்! அதற்காக இந்தத் தேசத்துக்கு நான் ரொம்பக் கடமைப்பட்டிருக்கேன். இந்த மாதிரி எங்களைச் செய்த தியாகப்பிரும்மத்துக்கு அனந்தகோடி நமஸ்காரம். அன்னம் பட்டி காசிலிங்கத்துக்கும் அனந்தகோடி நமஸ்காரம்'' என்று கிழக்கே பார்த்துக் கையெடுத்துக் கும்பிட்டார் பாகவதர். அனந்தசாமிக்குச் சிரிப்பு வந்து விட்டது.

"தியாகப்பிரும்மம் சரி, காசிலிங்கம் என்றீர்களே, யாரது?''

"அன்னம்பட்டி காசிலிங்கம்.''

"அதுதான் யார் என்கிறேன்?''

"அவன்தான் ஸ்வாமி, முதல் பேர் வழி....''

"எதிலே?''

"வரிசையிலே, நான் மூன்றாவது—அவன் முதல்—நடவிட காயகனில் நான் காயகன், அவன் நடன், நடிகன்.''

"யார் காசிலிங்கம்?''

"அருண் குமார்.''

"அருண்குமாரா? சினிமாவிலே பெரிய 'நடிகர்' என்று சொல்கிறார்களே அவரா....?''

"'என்று சொல்கிறார்களே'யா? நீங்கள் அவன் படத்தையே பார்த்ததில்லையோ?''

"சினிமாவுக்குப் போக எங்கே பொழுது இருக்கு எனக்கு?''

"பொழுது இருக்கோ இல்லையோ, அவன் நடிக்கிற படங்களையாவது பார்த்துவிட்டு வந்து விடுங்கள், சுவாமி. இல்லாவிட்டால் நாகரிகம் இல்லாதவன் என்று உலகம் உங்களைப் பழிக்கும். செயற்கைச் சந்திரன் சுற்ற ஆரம்பித்து விட்ட நாளில், அருண்குமார் படம்கூடப்

பார்த்ததில்லை என்றால், நாகரிகத்தோடு முன்னேறாமல் பின் தங்கிவிட்ட காட்டு மிராண்டி என்பார்கள் சுவாமி. அவன் அவதார புருஷன். ஆதர்ச புருஷன். நரித்தொம்பச்சி குழந்தைகள் முதல் பெரிய நுணுக்கப் படிப்புப் படிக்கிற மாணவர்கள் வரையில் எல்லாரும் இப்பொழுது அவன் மாதிரிதான் பேசுகிறார்கள், பார்க்கிறார்கள், சிரிக்கிறார்கள்.''

''பெரிய பெரிய மகாராணிகளெல்லாம் அந்தஸ்தை மறந்து விட்டு நடிகர்களைக் கண்டு மனசைப் பறி கொடுத்திருக்கிறார்கள். புத்தர் காலத்திலிருந்து இது நடந்து வருகிறது. இதிலே என்ன ஆச்சரியம்? நடிக்கிறது, பாடுகிறது - இரண்டும் எப்பேர்ப்பட்ட மனசையும் இழுத்து விடும். அதனால்தானே கடவுளை வழிபடுகிறதையும் அதையும் பிணைத்து வைத்திருக்கிறார்கள்? ஜனங்களை நல் வழிப் படுத்தத்தானே இந்தப் பாட்டு கூத்து எல்லாம்.....''

''அப்படியானால் இந்த சினிமாவெல்லாம் இந்த உத்தமமான புண்ணியத்தைத் தவிர வேறு ஒன்றையும் செய்யவில்லை என்று சொல்லுங்கள்'' என்றார் சுப்பராம பாகவதர்.

''அது என்னமோ நம்ம தேசத்தில் ஆதிகாலத்திலிருந்து அந்த நோக்கத்தோடுதான் இவற்றைப் படைத்து வந்திருக்கிறார்கள்.''

''ஸ்வாமி, நீங்கள் சன்யாசி, சாது வேறே. எல்லாம் நல்லது என்று நினைக்கப் பழகிக் கொண்டு விட்டீர்கள். இந்த சினிமா பார்க்கிறவர்கள் இந்த அன்னம் பட்டி காசிலிங்கம் எப்படி கிராப்பு வாரிக் கொள்கிறான், எப்படிப் பார்க்கிறான், நடக்கிறான், எந்தச் சட்டையை எந்தமாதிரி போட்டுக் கொள்கிறான், அவனுக்கு ஜோடியாக நடிக்கிறவள் எப்படித் தலையைக் கட்டிக் கொள்கிறாள், எந்தப் புடவை கட்டுகிறாள்—இவற்றை மாத்திரம்தான் ஞாபகம் வைத்துக் கொண்டு வருகிறார்கள் என்று தோன்றுகிறது எனக்கு.''

''எனக்கு அப்படித் தோன்றவில்லை.''

''நீங்கள் எதைப் பார்க்கிறீர்கள்? உலகத்தைவிட்டு எப்பொழுதோ ஒதுங்கி விட்டீர்கள். நல்லது பொல்லாதது என்று வகுக்கிற சக்தியே அற்றுப் போய் விட்டது உங்களுக்கு. எந்தக் கண்ணறாவி நடந்தாலும் குழந்தைகளின் விஷமத்தைப் பார்க்கிறாற்போல, ஏதோ தெரியாத்தனமாகச் செய்து விட்டது என்று போய் விடுகிறீர்கள்.''

அனந்தசாமி சிரித்துக் கொண்டார். ''என்ன இன்றைக்குப் பாகவதர்வாளுக்கு

அன்னம்பட்டி காசிலிங்கத்தின் மேலே அவ்வளவு கோபம்?''

''அவன்மேலில்லே சுவாமி! ஜனங்கள் மேலே. கலையைப் பார்க்கிறேன், கதையைப் பார்க்கிறேன் என்று நினைத்துக் கொண்டு ஆளைப் பார்த்துவிட்டு வருகிறதுகளே அந்த ஜனங்கள் மேலேதான் எனக்குக் கோபம்.''

''அதிருக்கட்டும், ஒரு சமயம் அருண் குமார் என்கிறீர்கள், ஒரு சமயம் காசிலிங்கம் என்கிறீர்கள். இரண்டும் ஒரே ஆள்தானே?''

''அதுவா? இல்லறத்தில் இருப்பவர்களுக்கும் பூர்வாசிரமம் உண்டு ஸ்வாமி. அப்பா அம்மா அவனுக்கு வைத்த பெயர் காசிலிங்கம், அதைத்தான் நாகரிகமாக அருண்குமார் என்று மாற்றிக் கொண்டுவிட்டான். ஏன் என்று நானே ஒரு தடவை கேட்டேன். 'அதென்னங்க, அந்தப் பேரு பண்டாரப் பேர் மாதிரி இருக்கு. அந்தப் பேரைச் சொல்லி யாராவது கூப்பிட்டால், எனக்குத் தலையெல்லாம் மொட்டையானுப் போலியும், நெத்தி மூக்கிலெல்லாம் துன்னூறு அடிச்சாப்பலியும், கழுத்து கையெல்லாம் கொட்டை கட்டிவிட்டாப்பலியும் ஆயிடுது. அதனுலேதான் மாத்தி கெஜட்டுலேகூடப் போடச் சொல்லிப்பிட்டேன்' என்று பதில் சொன்னுன் அவன். இப்ப எதுக்கு அந்தப் பேச்சு வந்தது? ...அ... அம்... ஆமாம்... அவன்தான் ஸ்வாமி இப்ப நம் தேசத்திலேயே பெரிய மனுஷனுக விளங்குகிருன்...''

''அதனுல் என்ன இப்ப?''

''என்னவா? அவன் கேட்டானுனல் என்ன சொல்வீர்கள்? 'என் படமே பார்த்ததில்லையா?' என்று ஓர் ஆச்சரியக் குறியிலேயே உங்களைக் கூனிக் குறுகி, எண்சாண் உடம்பையும் உள்ளே போகும்படியாகச் செய்து விடுவானே. இப்பொழுது அவன் வீட்டுக்குத்தான் சுவாமி போகப் போகிருேம். அவன்தான் கார் அனுப்புகிறேன் என்று சொல்லியிருக்கிருன்.''

''அப்படியா? அவனுக்குத்தான் வைத்தியமா?'' என்று கேட்டார் அனந்தசாமி.

''இல்லே. அவன் பெண்டாட்டி, அவன் குழந்தை இரண்டு பேருக்கும்.''

''என்ன உடம்பு?''

''அங்கு வந்து பாருங்களேன்?''

அனந்தசாமி மேலே ஒன்றும் கேட்கவில்லே. எந்தச் செய்தியையும் பிடித்துப் பிடித்துத்தான் விடுவார் சுப்பராம பாகவதர். இண்டிக் கேட்டால் அவர் பதிலே பேச மாட்டார்.

''உங்களுக்கு வெகு நாட்களாகப் பழக்கமோ அவன்?''

''பழக்கமா! என் சிஷ்யப் பிள்ளை சுவாமி அவன். சினிமாவிலே அவன் பெத்தப் பேர்வழியாக ஆனபிறகு எங்கேயோ தலைமை வகிக்கக் கூப்பிட்டார்களாம் பாட்டுக் கச்சேரிக்கு. கடைசியில் அந்த ராகம், இந்த ராகம் என்று யார் யாரோ பேசிப் பாடகியைப் புகழ்ந்தார்களாம். இவனுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற் போலிருந்ததாம். உடனே யார் யாரையோ விசாரித்து, என்னிடம் வந்தான். நான் ஒரு மூன்று வருஷம் பாடிவிட்டு வந்தேன்.''

''பாடினீர்கள் என்ருல்?''

''ஆமாம். நான் பாடுவேன். என்ன பாடுகிறேன், என்ன பாடினேன், பாடப் போகிறேன் என்றெல்லாம் சொல்லுவேன். அவன் கேட்டுக் கொண்டிருப்பான். எப்பொழுதாவது நான் பாடுகிறேன் என்பான். கட்டைத் தொண்டை. ஒரு டன் சிமிண்ட் மூட்டையை ஒரு கையால் புரட்டலாம். அவன் சாரீரத்தைப் புரட்ட முடியாது. 'பரவாயில்லே. பரவாயில்லே. கொஞ்சம் சாதகம் பண்ணினல் வந்துவிடும்' என்பேன். ஐந்து நிமிஷம் முக்கிவிட்டு, 'நீங்க பாடுங்க, நான் கேட்கிறேன்' என்று ஒப்புவிடுவான். பாட முடியவில்லையே தவிர, எத்தனையோ தெரிந்து கொண்டு விட்டான். நான் பாடிவிட்டு அதைப் பற்றிப் பேசி மறுபடியும் விளக்கிக் காட்டுவேன். அதைக் கேட்டாலே போதும். அப்படியே கேட்டால் வரிசை மாருமல், வார்த்தை மாருமல் திருப்பிச் சொல்லுவான். நானே என்னைக் கேட்கிறாற்போல் இருக்கும். நாளுகவே ஆகிச் சொல்லுகிறாற்போல் சொல்லுவான்.''

''ஏதோ அப்படி ஒரு சக்தி இல்லாவிட்டால் இப்படி முன்னுக்கு வர முடியாது'' என்ருர் அனந்தசாமி.

''ரொம்ப சரி...நீங்கள்தான் பார்க்கப் போகிறீர்களே. நான் என்னத்துக்கு மேலே சொல்லணும்!'' என்று ஒய்ந்து விட்டார் பாகவதர். ஏதோ ஞாபகம் வந்து ''யாரங்கே, ஸ்வாமிக்கு ஜில்லுனு ஏதாவது குடிக்கக் கொண்டான்னு சொன்னேனே. காதிலே விழலியா....? என்னது? தூங்கிப் போயிட்டாளா, என்ன...?'' என்று எழுந்தார்.

''பரவாயில்லே.''

''பரவாயில்லேயா? இருங்கள் ஸ்வாமி. தூங்கித்தான் போய்விட்டாள்'' என்று உள்ளே எட்டிப் பார்த்துச் சொல்லி விட்டு, ''நான் ஆரஞ்சு பிழிஞ்சிண்டு வரேன்'' என்று கூறி உள்ளே போனுர் சுப்பராம பாகவதர். (தொடரும்)

எந்நாளிலும் பீச்சஸ் பாலைவனத்தில் சாப்பிடலாம் அது வீணான யோசனையல்ல மிட்லண்ட் இருக்கும்போது எங்கும், எச்சமயத்திலும் அற்புதமானது. தனிமையாகச் சாப்பிட்டால் சுவைமிகுந்தது பாலாடையோடு உண்டாலோ கேட்கவே வேண்டாம். ஐஸ் க்ரீமுடன் சாப்பிட்டால் ஆஹா! திவ்யமாக இருக்கும்.

# Midland

மிட்லண்ட் - சுவை மிகுந்த 28 வகைகள் பழங்களாகவும், மரக்கறிகளாகவும், ஜாம்களாகவும், ஜெல்லிகளாகவும், மற்றும் கெச்சப்களாகவும் கிடைக்கின்றன.




தயாரிப்பாளர்கள்: மிட்லண்ட் ப்ரூட் அன்டு வெஜிடபிள் ப்ராடக்ட்ஸ் (இந்தியா) மதுரை.
ஏகபோக விநியோகஸ்தர்கள்: கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்., பம்பாய்
இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்: பாரி அன்டு கம்பெனி லிமிடெட்.

# ராமேச்சுரத்து ராமலிங்கர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

சிவன் கோயில்களில் கருவறையில், கோயிலுக்கே நடு நாயகமாய் இருப்பது சிவலிங்கம். சிவலிங்க வழிபாடு மிகமிகப் பழமையானது. திருமூலர் தமது திருமந்திரத்தில் அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவ லிங்கம், சிவலிங்கம், ஆத்மலிங்கம், ஞானலிங்கம் முதலியவைகளைப் பற்றி விரிவாகப் பேசுகிறார்.

இலிங்கமதாவது யாரும் அறியார்
இலிங்கமதாவது எண்திசை எல்லாம்
இலிங்கமதாவது எண்ணெண் கலையும்
இலிங்கமதாவது எடுத்தது உலகே

என்பது திருமந்திர வாக்கு. பாதாளம் முதல் ஆகாச பர்யந்தம் எல்லையில்லாத அனந்த சொருபமாகப் பிரகாசிப்பது லிங்கம். இதனையே 'ஆபாதால' என்ற தியான சுலோகம் கூறுகிறது. இந்தத் தியான சுலோகம் கூறியே ருத்ராபிஷேகத்தைத் தொடங்க வேண்டும் என்பது விதி. அண்டமெல்லாம் நிறைந்து நிற்கும் இறைவனை அணுவிலே காட்ட முயன்றவன் கலைஞன். அருவமான கடவுளை உருவத்திலும் அரு உருவத்தில் காட்டுவதில் வெற்றி பெற்றவன் அவன். அந்த அருஉருவத் திருமேனியே சிவலிங்க வடிவம். அதாவது வடிவம் போலவும் இருக்கும்; அதே சமயத்தில் வடிவம் ஒன்று இல்லாமலும் இருக்கும் நிலை. இந்த லிங்க வடிவினை அரசர்கள், முனிவர்கள் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அசுரர்களும் கூடப் பிரதிஷ்டை செய்திருக்கின்றனர். முசுகுந்தன் பிரதிஷ்டை காளத்தியில். தொண்டைமான் சக்கரவர்த்தியின் பிரதிஷ்டை வடதிருமுல்லை வாயிலில். இடும்பன் பிரதிஷ்டை இடும்பா வனத்தில். திரிசிரன் பிரதிஷ்டை திருச்சிராப்பள்ளியில். அகஸ்தியர் பிரதிஷ்டை அகஸ்தியன் பள்ளியில். மூன்று கோடி முனிவர்கள் சேர்ந்து பிரதிஷ்டை செய்தது கோடிகாவில். ஆனால் எல்லாவற்றையும் தூக்கி அடிக்கும் வகையில் மூவர்க்கும் மேலான ராமனே பிரதிஷ்டை செய்து வணங்கிய லிங்கம்தான் ராமலிங்கம்.

மூலமும் நடுவும் ஈறும்
இல்லதோர் மும்மைத்தாய
காலமும் கணக்கும் நீத்த
காரணன் கைவில்லேந்தி
சூலமும் திகிரி சங்கும்
கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப்
பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்

ராமன் என்பான் கம்பன். அந்த ராமனே பிரதிஷ்டை பண்ணிய லிங்கம்தான் ராமலிங்கம். அந்த ராமலிங்கம் இருப்பது ராமேச்சரம். அந்த ராமலிங்கத்தைத் தரிசிக்கவே செல்கிறோம் நாம் இன்று.

ராமேச்சரம் என்னும் ராமேசுவரம், வங்காளக் குடாக் கடலில், ராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு சிறிய தீவு. சென்னை தனுஷ்கோடி ரயில் பாதையில் மண்டபம் கடந்து பாம்பன் வந்து வண்டி மாறி ராமேசுவரம் செல்ல வேணும். இந்தத் தீவு மகாவிஷ்ணு தாங்கியிருக்கும் வலம்புரிச் சங்கின் வடிவில் இருக்கிறதென்பர். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து அரை மைல் தூரத்தில் கோயில் இருக்கிறது. கோயில் பிரம்மாண்டமான பிராகாரங்களுடன் கூடியது. கோயில் கிழமேல் 865 அடி நீளமும், தென் வடல் 675 அடி அகலமும் உள்ளது. கிழக்கு வாயிலை 126 அடி உயரமுள்ள கோபுரம் அழகு செய்கிறது. மேல் வாயிலில் 78 அடி உயரமுள்ள கோபுரம் இருக்கிறது. இதுவே பழைய கோபுரம். தெற்கேயும் வடக்கேயும் கோபுரங்கள் கட்டப்படவில்லை. கிழக்கு வாயில் வரவேண்டுமானால் கொஞ்சம் சுற்றிக் கொண்டு வரவேணும். ஆதலால் எல்லாரும் மேலைக் கோபுர வாயில் வழியாகவே கோயிலுள் நுழைவர். நாமும் அப்படியே செல்லலாம். மேல் பிராகாரத்தில் வடமேற்கு மூலையில் ஓர் இடம் திரைச்சீலைகளால் மறைக்கப்பட்டிருக்கும். அங்குள்ள காவலனிடம் ஓர் அணாவை நீட்டினால் திறந்து காட்டுவான். அங்கிருக்கும் காட்சிதான் ராமலிங்கர் பிரதிஷ்டை. இந்த ராமலிங்கர் பிரதிஷ்டை ஒரு சுவையான கதையாயிற்றே. இலங்கையில் இராவண வதம் நிகழ்த்திய ராமனைப் பிரம்மஹத்தி தோஷம் பிடித்துக் கொள்கிறது. அதன் நிவர்த்திக்கு இறைவனைப் பிரதிஷ்டை செய்து பூஜிப்பதுதான் வழி என்பதை அறிகிறான் ராமன். ராமனது ஏவல் கூவல் பணி செய்யவோ அனுமன் உடன் இருக்கிறானே அவனை அனுப்பி நர்மதை நதிக் கரையிலிருந்தே லிங்கம் அமைக்கக் கல் கொண்டு வரச் சொல்கிறான்; சென்ற அனுமன் திரும்பக் காணோம்; அதற்குள் பிரதிஷ்டைக்குக் குறித்த நேரம் வந்து விடுகிறது. ராமனுடன் வந்த சீதாப் பிராட்டி அங்கு கடற்கரையிலிருந்த மணலையே சிவலிங்கமாக்கிக் கொடுக்கிறாள். ராமனும் பூஜையை முடித்துக் கொள்கிறான். பூஜை முடிந்தபின் அனுமன் லிங்கத்துடன் வந்து சேருகிறான். அவனுக்கு ஒரே கோபம், தன் முயற்சி எல்லாம் வீணாய்ப் போய்விட்டதே என்று. சீதை அமைத்த மணல் லிங்கத்தைத் தன் வாலால் கட்டி இழுத்துப் பிடுங்கி எறிந்துவிட முனைகிறான். நடக்கிற காரியமா அது. ஆதி லிங்கம் நிலைக்கிறார். அனுமனைச் சமாதானம் செய்ய விரும்பிய ராமன் அவன் கொண்டு வந்த லிங்கத்தையும் பக்கத்திலேயே பிரதிஷ்டை செய்து வைத்து அதனை அனுமத் லிங்கம் என்று அழைக்கிறார். இத்தனை நாடகமும் கதை வடிவில் அங்கு வண்ண உருவில் காட்டப்பட்டிருக்கும். கருவறையில் இருப்பவர் ராமலிங்கர். அவர் பக்கத்தில் இடப் பக்கத்தில் இருப்பவர் அனுமன்



ராமேசுவரம் - கோயில்

கொண்டு வந்த பிரதிஷ்டை செய்யப்பட்ட விசுவநாதர். இருவரையும் கருவறையில் சென்று கண்டு வணங்கலாம். இந்த ராமலிங்கரே உலகில் உள்ள பன்னிரண்டு ஜோதி லிங்கங்களில் ஒன்றாக விளங்குகிறார். இவர் மேனியிலே அனுமனது வால் தழும்பு இன்னும் இருக்கிறது. ராமலிங்கர் நல்ல அபிஷேகப் பிரியர். அதிலும் கங்கா ஸ்நானத்தை விரும்புகிறவர். ஆதலால் வடநாட்டிலிருந்துவரும்யாத்திரிகர்கள் எல்லாம் கங்கா ஜலம் கொண்டு வந்து அபிஷேகம் செய்கிறார்கள். இந்தக் கங்காபிஷேகத்துக்கு நிபந்தனைகள் அதிகம். அதற்கெல்லாம் உட்பட்டே அபிஷேகத்துக்கு சேவார்த்திகள் ஏற்பாடு செய்ய வேணும். இந்த ராமலிங்கர் சந்நிதி காலை ஆறு மணி முதல் இரவு பத்து மணி வரை எப்போதும் திறந்தே இருக்கும். இந்த நல்ல வசதி எல்லாக் கோயில்களிலும் கிடைப்பதில்லை யாத்திரிகர்களுக்கு. கருவறை செல்லுமுன் பிராகாரங்களை ஒரு சுற்றுச் சுற்றலாம். ராமேசுவர பிராகாரங்கள் (Corridors) பிரபலமானவை ஆயிற்றே. இந்தப் பிராகாரங்கள் ஒவ்வொன்றும் சுமார் நாநூறு அடி நீளமும், இருபதிலிருந்து முப்பதடி அகலமும், அறுபது அடி உயரமும் உடையன. பிரும்மாண்டமான தூண்கள் தாங்கி நிற்கின்றன. இவ்வளவு பெரிய பிராகாரங்களை வேறு இடங்களில் காண முடியாது. கல் கிடையாத ஒரு சிறு தீவுக்கு, இவ்வளவு பெரிய கற்களை எப்படிக் கொண்டு வந்தனர், எப்படி இந்தப் பிராகாரங்களை அமைத்தனர் என்பது பலருக்கும் வியப்பானதொன்றே.

இக்கோயிலில் மூன்று பிராகாரங்கள். மூன்றும் பிராகாரமான வெளிப் பிராகாரத்திலே தான் பெரிய நடராஜரது வடிவம் ஒன்றும் இருக்கிறது. உள் பிராகாரத்தில்தான் ராமலிங்கர் கோயில் கொண்டிருக்கிறார். அங்குள்ள நவசக்தி மண்டபம் நல்ல வேலைப்பாடுடையது. அந்தப் பிராகாரத்திலேதான் பர்வதவர்த்தினி அம்பிகையின் சந்நிதி. இவளையே தாயுமானவர் மலைவளர் காதலிப் பெண் உமை என்று அழகொழுக அழைக்கிறார்.

ஆரணி சடைக் கடவுளர்
அணியெனப் புகழ் அகிலாண்ட
கோடியீன்ற
அன்னையே! பின்னையும் கன்னியென
மறை பேசும் ஆனந்த
ரூப மயிலே!

வார் அணியும் கொங்கை மாதர்
மகிழ் கங்கைபுகழ் வளமருவு
தேவ அரசே
வரை ராஜனுக்கு இரு கண்மணி
யாய் உதித்த மலை வளர்
காதலிப் பெண் உமையே!

என்று பாடிப் பாடிப் பரவசம் அடையவா மல்லவா?

இங்குள்ள நந்தி கதையால் உருவானவர் தான். நல்ல பெரிய நந்தி. நீளம் பன்னிரண்டு அடி, உயரம் ஒன்பது அடி. கீழ்க் கோபுர வாயிலில் பெரிய அனுமார் இருக்கிறார். பிரதம ராமலிங்கரைப் பிரதிஷ்டை செய்யும் பாக்கியத்தை இழந்தவர் அவர் என்று அவர் பார்வையிலுள்ள ஏக்கத்திலிருந்தே தெரியும்.

ராமேசுவரத்தில் சுவாமி தரிசனத்தைவிட தீர்த்தம்தான் விசேஷமானது. இக்கோயில், கோயில் பிராகாரங்களைச் சுற்றியே இருபத்திரண்டு புண்ணிய தீர்த்தங்கள் இருக்கின்றன. இந்தத் தீர்த்தங்களில் எல்லாம் ரசாயன சத்துக்கள் இருப்பதால் புண்ணியத்தோடு தேக ஆரோக்கியமும் உண்டாகும். எல்லாத் தீர்த்தங்களும் புராண மகத்துவம் பெற்றவை. கோயிலுக்கு நேர் கிழக்கேயுள்ள கடல் துறை தான் முக்கியமானது. அதுவே அக்னி தீர்த்தம். இங்கேதான் தீர்த்தாடனம் தொடங்க வேண்டும். கடைசியில் கோயிலுள் உள்ள கோடி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். கோடி தீர்த்தத்தில் தீர்த்தம் ஆடிய பிறகு ஊரிலே தங்கக் கூடாது என்பது ஐதிகம். கட்டிய புண்ணியம் எல்லாம் நம் வீடு வரையாவது நம்முடன் கொண்டு செல்ல வேண்டுமே.

ராமேசுவரத்தை விட்டுக் கிளம்புமுன் பார்க்க வேண்டியவை கந்தமாதன பர்வதம், ஏகாந்த ராமர் கோயில், நம்பி நாயகி அம்மன் கோயில் முதலியன. கந்தமாதன பர்வதம் கோயிலுக்கு வட மேற்கே ஒன்றரை மைல் தூரத்தில் இருக்கிறது. இங்கிருந்துதான் இலங்கைக்கு அனுமார் தாவினார் என்று கூறப்படுகிறது. ஏகாந்த ராமர் கோயில் ராமேசுவரத்துக்கு மேற்கே மூன்று மைல் தூரத்தில் தங்கச்சி மடம் ஸ்டேஷன் பக்கத்தில் இருக்கிறது. இங்கு ராமர் சீதையுடன் பேசிக் கொண்டிருக்கும் பாவனையில் சிலைகளை அமைத்திருக்கிறார்கள். ராமர் இங்குதான் தமது மந்திராலோசனையை நடத்தினார் என்பர். ராமேசுவரத்துக்குத் தெற்கே இரண்டு மைல் தூரத்திலுள்ள நம்பிநாயகி அம்பாள் நம்பிக்கையுடன் ஆராதிப்பவர்களுக்கெல்லாம் அருளுபவள் என்பது நம்பிக்கை. இன்னும் சீதா குண்டம், வில்லூரணி தீர்த்தம், கோதண்டராம சுவாமி கோயில் எல்லாம் சென்று வணங்கித் திரும்பலாம்.

இந்தத் தலத்துக்கு ஞானசம்பந்தரும், அப்பரும் வந்திருக்கிறார்கள்; பதிகங்கள் பாடியிருக்கிறார்கள்.

தேவியை வவ்விய தென்னிலங்கைத்
தசமாமுகன்
பூவியலும் முடி பொன்றுவித்த
பழிபோயற

ஏவியலும் சிலையண்ணல் செய்த
இராமேச்சுரம்
மேவிய சிந்தையினார்கள் தம்
மேல்வினை வீடுமே

என்று சம்பந்தர் பாடினால்,

கடலிடை மலைகள் தம்மால்
அடைத்து மால் கருமம் முற்றி
திடலிடைச் செய்த கோயில்
திரு இராமேச்சுரம்


ராமேசுவரம் பிராகாரம்

என்று அப்பர் பாடுவார். இத் திருப்பதிகங்களை யெல்லாம் பாடி ராமேச்சுரம் மேய இறைவனை வணங்கிவிட்டு, தனுஷ்கோடிக்குச் சேது ஸ்நானத்துக்குச் செல்லலாம். ராமேச்சுரத்திலிருந்து 24 மைல் தூரத்தில் தனுஷ்கோடி இருக்கிறது. இங்குதான் வங்காளக் குடாக்கடல், இந்துமகா சமுத்திரம், அராபிக் கடல் எல்லாம் கூடுகின்றன. மகோததி, ரத்னாகரம் என்னும் கடல்கள் கலப்பதாகப் புராணங்கள் கூறும். ராமேசுவரத்திலிருந்து கடற்கரை வழியாகத் தோணியில் ஏறிக் கொண்டும் சேதுக்கரை செல்லலாம். இது எல்லாம் காற்று வசதியாக அடிக்கும்போது தான் சௌகரியமாக இருக்கும். இல்லாவிட்டால் பேசாமல் ரயில் ஏறிப் பாம்பன் வந்து அங்கு ரயில் மாறித் தனுஷ்கோடி செல்லுதலே சரியானது. தனுஷ்கோடி ஸ்டேஷனிலிருந்து மேற்கே நாலு பர்லாங்கு நடந்து தான் சேது ஸ்நான கட்டத்துக்கு வரவேணும். தனுஷ்கோடி என்றால், ஒரு கோடி வில் என்று அர்த்தம். இங்கு தீர்த்தம் ஆடினால் ஒரு கோடி புண்ணிய தீர்த்தங்களில் நீராடிய பலன் கிடைக்கும். இங்கிருந்துதான் இலங்கை செல்ல ராமன் அணை கட்டியிருக்கிறான். அதனாலேயே சேது என்று அழைக்கப்படுகிறது. இங்கு மொத்தம் 36 ஸ்நானம் செய்யவேண்டுமென்பது விதி. அதற்கு ஒரு மாதம் தங்க வேண்டும். அது எல்லாம் நம்மால் முடிகிற காரியமா என்ன? ஆதலால் ஒரே நாளிலேயே முப்பத்தாறு முழுக்குகள் போட்டு மேல் சொல்லிய ஸ்நான பலன்களை யெல்லாம் ஒரேயடியாகப் பெற்றுவிட வேண்டியதுதான். தனுஷ்கோடியிலே தீர்த்தமாடிய பின்னரே ராமலிங்கரைத் தரிசிக்க வேண்டும் என்றும் கூறுவர். எது வசதியோ அப்படிச் செய்து கொள்ளலாம். நாம் இருந்த இருப்புக்கெல்லாம் இசைபவ ராயிற்றே இறைவன். ராமலிங்கர் அகில இந்தியப் பிரசித்தி யுடையவர். இமசேது பரியந்தம் அவர் புகழ் பரவிக் கிடக்கிறது. இங்கு வரும் வடநாட்டு யாத்திரிகர்களின் எண்ணிக்கை சொல்லில் அடங்காது. வடக்கையும் தெற்கையும் இணைப்பதில் வெற்றி கண்டவர் இந்த ராமலிங்கர். அதுவே அவருக்குப் பெரிய புகழைத் தேடித் தந்திருக்கிறது.

தனுஷ்கோடி ராமேசுவரத்திலும் ஸ்நானம் பிரார்த்தனை எல்லாம் முடித்துக் கொண்டே இராமநாதபுரம் போய் அங்கிருந்து தர்ப்பசயனம் (திருப்புல்லாணி) சென்று தரிசனம் செய்ய வேண்டும் என்பர். புண்ணிய சேதுவை நினைக்கும்போதெல்லாம் சேது காவலர்களான சேதுபதிகளும் நம் நினைவுக்கு வருவார்கள். அவர்கள் குகனுடைய பரம்பரை என்று ஒரு வழக்கு. முதல் சேதுபதியாகிய குகனுக்கு ராமர் பட்டம் கட்டியதைக் குறிப்பிடும் கல் ஒன்று இராமநாதபுரம் அரண்மனையில் இராமலிங்க விலாஸ் என்ற இடத்தில் இருக்கிறது. சேது காவலர்கள் ராமேச்சுவரம் கோயிலில் செய்த திருப்பணிகள் அனந்தம். சடைக்கத் தேவர் உடையார் சேதுபதி முதல் பரம்பரையாக வந்த சேதுபதிகள் எல்லாம் பல நிபந்தங்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். சென்ற நூற்றாண்டின் கடைசியில் இருந்த பாஸ்கர சேதுபதியின் தான தருமம் உலகப் பிரசித்தம்.




இந்த நாடகம் கொலையில் ஆரம்பமாகிக் கொலையில் முடிகிறது. கொலையுண்டவள் ஓர் இளம் பெண். கொலை செய்தவன் சோமநாதன். கொலை நடந்த இடம் "விமலா விலாசம்" என்னும் சோமநாதனின் பங்களா. கொலைக் குற்றத்துக்காகத் தண்டிக்கப்பட்டவன் கொலையுண்டவளின் காதலன் கோபிநாத். சட்டம் செய்யத் தவறிய காரியத்தை ஒரு தனி மனிதன் — கோபிநாத்தின் தந்தை மூர்த்தி — மேற்கொள்ளுகிறான். பழிக்குப் பழி வாங்க முயல்கிறான். இதுதான் "சதுரங்கம்" நாடகக் கதை.

நாடகம் முதல் காட்சியிலிருந்து கடைசிவரையில் ஒரே வீட்டுக் கூடத்தில் நிகழுகிறது. உண்மைக் கொலையாளியைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் கோபிநாத்தின் தந்தைக்கு யார் உதவியாயிருக்கிறார்கள் தெரியுமா? சோமநாதனின் வளர்ப்பு மகன் பிரசாத்! சோமநாதன் செய்த கொலையை மறைக்க உதவியாயிருப்பவள் அவன் மனைவி இலகவதி. பிரசாத் சட்டக் கல்லூரி மாணவன். மூர்த்தி ஒரு வக்கீல். பிரசாதுக்கு 'ட்யூஷன்' உபாத்தியாயராக வருகிறான். பிரசாதும் மூர்த்தியும் மேற்படி கொலை வழக்கைப் பற்றிப் பேசும்போது ஓரளவு கதையையே சொல்லி விடுகிறார்கள்.

சோமநாதனாக வரும் கே. நடராஜ் கொலை செய்வதற்கும், செய்த கொலையை மறைப்பதற்கும் வேண்டிய துணிச்சல் உள்ளவராகவே மாறி விடுகிறார்.

மூர்த்திதான் நாடகத்தின் நாயகன். வி. எஸ். ராகவன் அந்தப் பாத்திரத்தை ஏற்று வியப்புறும் வண்ணம் நடித்திருக்கிறார். பழிக்குப் பழி வாங்கும் நோக்கத்தில் தன் துயரத்தை மறந்து விடவில்லை. சோமநாதனைத் தீர்த்துக் கட்டும் நேரம் நெருங்க நெருங்க மூர்த்தியின் முகத்தில் ஒரு பதற்றம்; உடம்பில் ஒரு நடுக்கம்; ஆனால் உள்ளத்தில் மட்டும் உறுதி. இதை ராகவன் அநாயாசமாக நாடகமேடையில் காட்டுகிறார். கடைசிக் காட்சியில் சோமநாதனைப் பழிக்குப் பழி வாங்க மூர்த்தி தன்னையே பணயமாக வைக்கும் காட்சி சற்றும் எதிர்பாராதது. அதையும் ராகவன் திறமையாகச் செய்திருக்கிறார்.

பிரசாதாக வருபவர் மாலி. இதுவரையில் ஹாஸ்ய பாகமே ஏற்று நடித்து வந்த இவர் "சதுரங்க"த்தில் 'சீரியஸ்'ஸாக நடித்துப் பிரமாதப்படுத்தி விட்டார்.

ஹாஸ்ய ரஸத்துக்கு வாதிராஜ் இருக்கிறார். அவரது சினிமாப் பித்தும், வீட்டுக்கு வருகிறவர்களை விசாரிக்கிற அழகும் மிகவும் ரஸமாக இருக்கின்றன.

"பெண் இல்லாத நாடகம் மண்" என்று எங்கோ படித்ததாக ஞாபகம். அந்தக் குறையைத் தீர்க்கச் 'சதுரங்க'த்தில் இலகவதி இருக்கிறாள். எம். ஆர். விஜயலக்ஷ்மி அந்தப் பாத்திரத்துக்கு மிக மிகப் பொருத்தமானவர். நடிப்பு இயல்பாயிருக்கிறது.

தமிழ் நாடகம்தான் என்றாலும் ஆங்கில வாடை அதிகமாக வீசுவதனால் எம்லின் வில்லியம்ஸின் ஆங்கில நாடகத்தைத் தழுவியது என்பதை அந்த வாடையே காட்டிக் கொடுத்து விடுகிறது. ஆனால் புது முயற்சி; ஒரே காட்சியில் நாடகம் முழுதும் நடந்தும் அலுப்புத் தட்டாமல் இருப்பது அதிசயந்தான். "சதுரங்கம்" நாடகத்தை எழுதியவர் கே. பாலசந்தர்.

காதல் காட்சிகள், கட்டாயக் கல்யாணம், அதைக் கெடுக்க வில்லனின் சதித் திட்டங்கள், கணவன்-மனைவி சந்தேகம், வீட்டை விட்டு வெளியேறும் அபலைப் பெண், குடும்பச் சிக்கல்கள், பூசல்கள் இவைகளைப் பற்றியே நாடகங்கள் பல வந்து விட்டன. சினிமாப் படங்கள் நிறைய வெளி வந்து கொண்டிருக்கும் இந்த நாளில் நாடகங்களில் புதுமையைப் புகுத்த வில்லையென்றால் நாடகக் கலை வளராது. இதையெல்லாம் நன்கு சிந்தித்துச் "சதுரங்கம்" நாடகம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இதை ஒரு சோதனையாக நினைத்துத் தான் அரங்கேற்றியிருக்கின்றனர். ஆனால் நாடகம் சுவையாகவே அமைந்து விட்டது.

காதலேயில்லாத, சம்பவங்களே இல்லாத, பாட்டும் இல்லாத இந்தப் புதுவிதமான நாடகத்தில் இந்தியன் நேஷனல் ஆர்ட்டிஸ்ட்ஸ் நாடகக் குழுவினர் அருமையாக நடித்திருக்கின்றனர்.



# குமார ராஜா

காந்தன்



ஜமீன்தார்களையும், மகாராஜாக்களையும் ஒழித்துவிட்டதாகக் காங்கிரஸ் சர்க்கார் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஆனால் உண்மையில் அவர்கள் எங்கும் ஓடிப்போய் விடவில்லை. தமிழ் சினிமாப் படங்களில் குடியேறி விட்டார்கள். வெளியாகின்ற மூன்று படங்களில் ஒன்று ஜமீன்தார்க் கதை; மற்ற இரண்டும் ராஜா, ராணிக் கதை! மகாராஜாக்களை ஒழித்துக் கட்டிய மகா பாவத்தை மேற்படி மகாராஜாக்கள் மன்னிக்கத் தயாராயில்லை. தியேட்டருக்குத் தியேட்டர் தோன்றி மக்களைப் பழி வாங்கத் தொடங்கியிருக்கின்றனர்.

ரயிலில் ஜன நெருக்கடி அதிகமாயிருந்தாலும் பிரயாணம் செய்ய யோசனையாயிருக்கிறது! அதே மாதிரி ஒரு பிரயாணி கூட இல்லாமல் காலியாயிருந்தாலும் பிரயாணம் செய்யத் தயக்கம் ஏற்படுகிறது.

கூட்டமேயில்லாத ''குமார ராஜா'' படத்துக்குப் போனபோதும் எனக்கு இந்த மாதிரி பயம்தான் ஏற்பட்டது. கீழ் வகுப்பிலிருந்து மேல் வகுப்பு வரையில் ஏராளமான பேர்கள் தாராளமாய்ப் பார்க்க இடம் இருந்தது.

குபேரபுரி ராஜாவின் மகன்தான் குமார ராஜா. அவன் சிறு வயது முதல் பெண்களைப் பார்க்காமல் ரிஷ்யசிருங்கர் மாதிரி வளர்கிறான். (அதுதான் படம் முடிகிறவரையில் வரும் அசட்டுத்தனங்களுக்கெல்லாம் ஆதாரமாயிருக்கிறது!)

தயாரிப்பாளர்களே திரைக்கதையைப் பற்றிக் கவலைப்படாத போது நாம் மட்டும் கவலைப்படுவானேன்?

சந்திர பாபுவின் நடிப்புத் திறமை முழுவதும் இந்தப் படத்தில் வெளியாகியிருக்கிறது. 'பலீன் சடுகுடு' விளையாட்டில் ஆரம்பித்து, பெண் பார்க்கப் போனது, நால் நிலையத்தில் பெண்களைச் சந்தித்தது, நாட்டியக்காரி வீட்டில் அவளைக் கண்டு மயங்கியது, முடிவில் அவனது இழிவான நிலையை அறிந்து உதறிவிட்டு வீட்டுக்கு ஓடிவந்து தந்தையைக் காணாமல் கதறி அழுதது — ஆகிய கட்டங்களிலெல்லாம் சந்திர பாபு பிரமாதமாக நடித்திருக்கிறார். சொந்தக் குரலில் இரண்டு பாட்டுக்களும் பாடுகிறார்; நாட்டியமும் ஆடுகிறார். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அற்புதமாக மாறும் அவர் முக பாவங்களைப் பாராட்டாமல் இருக்க முடியாது. இத்தனை நடிப்புத் திறமையை இவர் யாரிடமிருந்து கற்றுக் கொண்டார் என்று வியப்பு உண்டாகிறது. ஆனால் சர்க்கஸ் வித்தைகள், ஹாஸ்யத் துணுக்குகள் இவைகளை ரஸிக்கிற மாதிரி, அவர் நடிப்பைத் தனித்தனியாகக் கண்டுதான் அனுபவிக்க முடிகிறது. கதையோடு சேர்ந்து கருத்தோடு வெளிப்பட்டாலல்லவா இவை மனத்தில் பதியும்?

அசட்டு மகாராஜா டி. எஸ். பாலையா. ஆனால் சமர்த்தாக நடிக்கிறார்.

எம். என். ராஜம் சந்திராவாக வந்து மிகவும் நன்றாக நடித்திருக்கிறார். 'தந்தையின் உயிரைக் காப்பாற்ற நீங்கள் கொஞ்ச நேரம் என் காதலியாக நடிக்க வேண்டும்' என்று குமார ராஜா கேட்டுக் கொண்டதும் சந்திரா சம்மதித்து அவனுடன் புறப்பட்டு விடுவது விந்தையாயிருக்கிறது! வயது வந்த பெண்ணொருத்தி முன்பின் தெரியாத ஒரு வாலிபனுடைய காதலியாக நடிக்கச் சம்மதித்தது மல்லாமல் அவனுக்கு உண்மைக் காதலி ஒருத்தி இருக்கிறாள் என்பதையறிந்த பின்பும் அவனை வெறுக்காமல் உடன் செல்லுவது விந்தையிலும் விந்தைதான்!

திரையில் சூர்யகலாவைப் பார்க்கும்போதே பயமாக இருக்கிறது. போதாக்குறைக்கு நாட்டியமும் ஆடுகிறார்!

''நான் வந்து சேர்ந்த இடம் நல்ல இடம் தான்'' என்ற பாட்டும், ''மூடினாலும் திறந்தாலும்'' என்ற பாட்டும் கேட்க இனிமையாயிருக்கின்றன.

''........... பெருமையுடன் அளிக்கும் குமார ராஜா'' என்று காட்டினார்கள். படத்தில் பெருமைப்படும்படி அப்படி என்ன இருக்கிறதோ!

இதே மாதிரி குப்பைக் கதை காரணமாகப் பல படங்கள் பப்படமாகப் போனதைக் கண்கூடாகக் கண்டும் கண்ணை மூடிக்கொண்டிருக்கும் நம் படாதிபதிகளின் நிலையைக் கண்டு இரக்கப்படுவதா, பெருமைப்படுவதா?

குமாரராஜா — 'ஜா ஜா ஜா!'

# நரிவேட்டை

கதை: ஜெயந்தி சித்திரம்: வினு

6

கிழவன் டெஸிமோ குமாரைச் சந்தித்து, சில ரகசியத் தகவல்களைத் தெரிவிக்க முற்பட, அவன் முதுகில் பாய்கிறது ஒரு கூரிய கத்தி. காரிலிருந்தவாறு கத்தியை வீசியவர்கள் கணப்பொழுதில் மறைந்து விடுகிறார்கள். குமார் மீதே சாய்கிறான் கிழவன்.....













...நம் நாட்டின் பாதுகாப்பு பற்றிய விவரங்களைச் சீனாவுக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறது ஒரு கும்பல். அவர்களை வளைத்துப் பிடிக்கவே காலிம் பாங் வந்தேன். டெஸிமோ அவர்களுள் ஒருவன். கருங்காலியாக மாறி அவர்களை எனக்குக் காட்டிக் கொடுக்க நினைத்தான். அதனால் அவன் உயிரையே பறித்து விட்டார்கள்.


அப்படியானால் உங்களைப் பற்றி டில்லிக்கு எழுதிக் கேட்கிறேன். திருப்திகரமான பதில் கிடைக்கும் வரை லாக்-அப்பில் இரும்!


ஒரே ஒரு கோரிக்கை. டெஸ்மோனாவின் பெண்ணை நான் சந்திக்க விரும்புகிறேன்.
ஆகட்டும், பார்க்கலாம்!


அரை மணி நேரத்துக்குப் பிறகு...
வின்யிக்கு ஆள் அனுப்பினேன். அவள் உன் முகத்திலேயே விழிக்க விரும்பவில்லையாம்!


டெஸ்மோனாவைக் கொன்றவன் நான் என்று அவளும் கருதினால் எப்படி வருவாள் என்னைக் காண?


அன்று இரவு
அப்பா! என்னை அனாதையாக்கி விட்டுப் போய் விட்டீர்களே!


துணுக்குற்றுத் துள்ளி எழுகிறாள் வின்யி...
அது என்ன சத்தம்?


அட! நீதானா? பயந்தே போய் விட்டேன்!


எனக்கு இனி நீதான் துணை.


பக்கத்து அறையி லிருந்து மீண்டும் ஏதோ ஓசை எழுகிறது....
அப்பாவின் அறை யிலிருந்தல்லவா சத்தம் கேட்கிறது!


மெல்லக் கதவைத் திறந்து கொண்டு டெஸிமோவின் அறைக்குச் செல்கிறாள் வின்யி.


இருளில் ஒரு கரம் நீளுகிறது....




பாவிகள்! அப்பாவின் உடைமை களைத் திருடிக் கொண்டு போகிறார்களே!
குட்நைட்! போய் வருகிறோம்!

**டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.**

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

**எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!**

**உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது**




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மிதமிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்

# மணிபல்லவம்

## 36 - இன்ப விழிகள் இரண்டு



நா. பார்த்தசாரதி

ஊழிக் காலமே நெருங்கி வந்து விட்டதோ என அஞ்சினான் இளங்குமரன். கீழே அலை அலையாக நீர்க் கடல், மேலே அலை அலையாக மேகக் கடல். நெடுந் தொலைவுக்கு அப்பால் இருப்பது போல் தெரிந்து இல்லாததாய் முடியும் தொடுவானமும் இப்போது தெரியவில்லை. தன்னையும், தன்னால் காப்பாற்றப்பட்டவளையும், இருவருடைய உயிர்களையும் பற்றிய நம்பிக்கையையும், அதன் விளைவுகளையும் தெய்வத்தினிடம் ஒப்படைத்து விட்டுப் படகினுள் சோர்ந்து ஒடுங்கிப் போய் வீற்றிருந்தான் இளங்குமரன். காலையா, நண்பகலா, மாலையா என்று பொழுதைப் பற்றியே தெரிந்து கொள்ள இயலாதபடி மழை மூட்டத்தில் சூழ்ந்த பொய்யிருள் ஏமாற்றிக் கொண்டிருந்தது. பொழுதும் அந்தப் பொய்யிருளில் மறைந்திருந்தது.

இளங்குமரன் இருந்த படகு சங்கமுகத்தைக் கடந்து பல நாழிகைத் தொலைவு கடலுக்குள் அலைந்து திரிந்தாகி விட்டது. காவிரியின் சங்கமுகத்துக்குக் கீழே தொலைவில் நடுக் கடலுள் 'கப்பல்கரப்பு' என்ற ஒரு திடல் இருந்தது. மண் திடலாகச் சிறிய மலை போன்று உயர்ந்து தோன்றும் மேட்டு நிலத் தீவு அது. தென்னை மரங்கள் நெருக்கமாகச் செழித்து வளர்ந்து தோன்றும் அந்தத் தீவுக் குன்றம் நீலக் கடலின் இடையே

மரகதப் பச்சை மலை போல் அழகாய்த் தெரியும். சங்க முகத்திலோ, அருகிலுள்ள கரைப் பகுதிகளிலோ நின்று கடலுள் பார்த்தால் நன்றாகத் தெரியக் கூடிய அந்தத் தீவும் மழை மூட்டத்தினால் இன்று தெரியவில்லை. காவிரியிலும் கடற் பரப்பினுள்ளும் இவ்வாறு அமைந்திருந்த நிலத் திடல்களுக்குத் 'துருத்தி' என்று பெயரிட்டிருந்தார்கள். இத்தகைய தண் மணல் துருத்திகளும், தாழ்பூந் துறைகளும், நீர்ப் பரப்பைச் சூழ்ந்த பெரிய பெரிய சோலைகளுக்கு நடுவே அமைக்கப்பட்ட 'படப்பை' என்னும் வேனிற் காலத்து வீடுகளும் காவிரிப்பூம்பட்டினத்தைச் சுற்றிலும் மிகுதியாயிருந்தன. அவற்றில் ஏதாவது ஒன்றின் அருகேயாவது தன் படகு ஒதுங்காதா என்று எண்ணித் தவித்தான் இளங்குமரன். படகு நடுக் கடலுக்குள் சென்ற பின் இப்படி எண்ணித் தவிப்பதற்கும் வழியில்லாமற் போயிற்று.

'இனி மேலும் நாம் தப்பி உயிர் பிழைக்க வழியிருக்கிறது' என்று அவன் இறுதியாக நம்பிக் கொண்டிருந்த ஒரே இடம் 'கப்பல் கரப்பு' என்னும் தீவுத் திடல்தான். கடற்கரையோரங்களில் வசிக்கும் பரதவர்களும், துறைமுகத்துக்கு வந்து போகும் கப்பல்களின் மீகாமர்களும் ஒரு காரணத்துக்காக அந்தத் தீவைக் 'கப்பல் கரப்பு' என்று அழைத்தார்கள். காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து புறப்பட்டுச் செல்கிற கப்பல்களைக் கரையிலிருந்து பார்க்க முடிந்த கடைசி எல்லை அந்தத் தீவுதான். அதற்குப் பின் தீவின் தோற்றமே கப்பல்களைக் கண் பார்வைக்குத் தென்படாமல் மறைத்து விடும். அதே போல் வெளிநாடுகளிலிருந்து காவிரிப்பூம்பட்டினத்துக்குள் நுழையும் கப்பல்களும் கப்பல் கரப்புத் தீவுக்கு இப்பால் புகுந்ததும் அந்தப் பக்கத்திலிருந்து காண்பவர்களுக்குத் தோற்றம் மறைந்து விடும். அப்படிக் கப்பல்கள் கண் பார்வைக்கு மறையக் காரணமாயிருந்த தீவு ஆகையினால்தான் கப்பல் கரப்பு என்று அழைக்கப்பட்டு வந்தது அந்தத் தீவு.

நடுக்கடலில் தன் போக்காக விழுந்து மிதக்கும் மரகத மணியாரம் போன்ற அந்தத் தீவின் ஓரமாக ஏதாவதொரு பகுதியில் படகு ஒதுங்க வேண்டும் என்பதுதான் இளங்குமரனின் சித்தத்தில் அப்போதிருந்த ஒரே ஆசை. மழையும் புயலுமாயிருந்த அந்தச் சமயத்தில் கப்பல் கரப்பினருகே ஒதுங்கினால் மற்றொரு பயனும் கிடைக்கும். துறைமுகத்துக்கு வரும் கப்பல்களும், துறைமுகத்திலிருந்து போகும் கப்பல்களும், கப்பல் கரப்பை ஒட்டியே செல்வதனால் தீவிலிருந்து மீண்டு நகர் திரும்ப எந்தக் கப்பலிலாவது சொல்லி உதவியை நாடலாம் என்று நினைத்திருந்தான் இளங்குமரன்.

அருட்செல்வ முனிவரின் மறைவு பற்றிய வேதனையையும், படைக்கலச் சாலையின் தனிமையையும் மறந்து காவிரித் துறை நீராட்டு விழாவின் ஆரவாரத்தில் கலந்து திரியலாம் என்றுதான் கதக்கண்ணனோடு வந்திருந்தான் அவன். ஆனால் நினைத்தபடி நடக்கவில்லை. நினையாதவையெல்லாம் நடந்து விட்டன. 'எந்தப் பெண் தண்ணீரில் மூழ்கினால் எனக்கென்ன வந்தது? அது அவளுடைய தலையெழுத்து' என்று கதக்கண்ணன் நினைத்ததைப் போலவே தானும் நினைக்க முடிந்திருந்தால் இளங்குமரனுக்கு இந்தத் துன்பங்களெல்லாம் ஏற்பட்டிருக்கப் போவதில்லை. என் செய்வது? மனிதர்களை நினைத்தால் அவனுக்கு இரக்கமாயிருக்கிறது. அவர்களுடைய குணங்களைப் புரிந்து கொண்டால் கோபம் வருகிறது. முதன் முதலாக ஓவியன் மணிமார்பனுக்கு உதவ நேர்ந்ததை நினைத்துக் கொண்டான் அவன். பிறருக்காகத் துன்பப்படுகிறவர்கள் தங்களுக்காகவும் சேர்த்துத் துன்பப்பட வேண்டியிருக்கிறதென்பதை இளங்குமரன் பல அனுபவங்களால் விளங்கிக் கொண்டிருந்தாலும் பிறருக்கு உதவப் போனதன் காரணமாகத் தனக்கு வம்பிழுத்து விட்டுக் கொள்ளும் சம்பவங்களே தொடர்ந்து ஏற்படுவதனால் அவன் மனம் சற்றே இறுகியிருந்தது. எனினும் அது அடிக்கடி நெகிழும் சம்பவங்களும் நேர்ந்தன

அன்று காவிரிக் கரையில் நின்று கொண்டிருந்த போது அந்தப் பெண் நீரில் மூழ்கியதைக் கண்டு அவனுடைய இறுகிய மனமும் இளகியது. வரும்போது உலக அறவியையும், இலஞ்சி மன்றத்தையும் சுற்றிப் பார்த்து விட்டு வந்திருந்ததனால் காவிரித் துறையில் நிற்கும் போது உலகத்து இன்ப துன்பங்களை எண்ணி வியந்து சிந்தனையிலாழ்ந்த மனத்தினனாக இருந்தான் அவன். காவிரியில் ஒரு பெண் மூழ்கியதைக் கண்டபோது அவன் தன் மனத்தில் "என்னுடைய தாயும் ஒரு காலத்தில் இப்படி இளம் பெண்ணாக இருந்திருப்பாள். இது போன்ற நீராட்டு விழா நாளில் அவள் அடக்கிக் கொண்டு காவிரியில் நீந்தியிருப்பாள்" என்று எண்ணிக் கொண்டிருந்தான். 'எவ்வளவுதான் திறமையாக நீந்தத் தெரிந்தவர்களாக இருந்தாலும் அவள் விக்கியாவது மூச்



"உன் பணத்தை நீ என்ன செய்கிறாய்?"

"என் மனைவியிடம் கொடுக்கிறேன்."

"நீ ஏன் வைத்துக் கொள்ளக் கூடாது?"

"முடியாது, ஸார்!"

"ஏன்?"

"அதற்கு ஒரு 'லா' இருந்து தடுக்கிறது."

"அது என்ன 'லா'?"

"என் மதர்-இன்-லா!"

சடக்க முடியாமல் தவறிக் குடித்த நீருடன் புரையேறியாவது, நீந்த முடியாமல் தளர்ந்து விடுவது இயல்பு தானே?' என்று நிலைமையைப் புரிந்து கொண்டு தான் உதவ முன்வந்திருந்தான் அவன். அது இவ்வளவு பெரிய உதவியாக நீண்டு விடும் என்று அப்போது அவன் எதிர்பார்க்கவில்லை.

இங்கே தான் நடுக் கடலில் தத்தளித்துக் கொண்டிருக்கும் இதே நேரத்தில் கழார்த் துறையில் கதக்கண்ணன், முல்லை, வளநாடுடையார் மூவரும் தன்னைப் பற்றி என்ன நினைத்து எப்படி உரையாடிக் கொண்டிருப்பார்கள் என்று கற்பனை செய்ய முயன்றது அவன் சிந்தனை. மழையினுலும், காற்றினுலும் நீராட்டு விழாவே சீர்குலைந்து மக்களெல்லாம் தாறுமாருகச் சிதறி நகரத்துக்குள் திரும்பியிருப்பார்களோ என்றும் அவன் ஐயமுற்றான்.

'இதோ படகில் துவண்டு கிடக்கும் இந்தப் பெண்ணுக்கு உதவ நேரும் என்பதற்காகவே இன்று நான் நீராட்டு விழாவுக்கு வர நேர்ந்திருக்க வேண்டும். என்னுடைய ஒவ்வொரு நாளும், நிகழ்ச்சிகளும் திட்டமும் தொடர்புமில்லாமல் கழிவதாக நான் நினைப்பதுதான்பிரமை. தொடர்பில்லாமல் தோன்றும் ஏதோ ஒரு தொடர்பு திட்டமிட்டுத்தான் எல்லாம் செய்கிறது போலும்' என்று நினைத்து மனத்தைத் தேற்றிக் கொண்டு கப்பல் கரப்புத் திடலின் கரை தென்படுகிறதா என்பதை ஆவலோடு கவனிக்கலானன் இளங்குமரன். கரை தெரியவில்லை. ஆனல் கரையை நெருங்கும் அறிகுறிகள் தெரிந்தன. கடல் அலைகளில் அழுகின தென்னை மட்டைகளும், சிறு குரும்பைகளும் வேறு பல இலை தழைகளும் அங்கங்கே மிதந்து வந்தன. அவன் முகம் சிறிது மலர்ந்தது. கப்பல் கரப்பில் இறங்கி அந்தப் பெண்ணின் மயக்கத்தைத் தெளியச் செய்து அவளையும் அழைத்துக் கொண்டு அவ்வழியாகத் துறைமுகத்துக்குச் செல்லும் கப்பல் ஒன்றில் இடம் பிடித்து நகருக்குள் சென்று விடலாம் என்று அவன் தீர்மானம் செய்து கொண்டான். நகருக்குள் சென்று அந்தப் பெண்ணை அவன் இல்லத்திற் கொண்டு போய்ச் சேர்த்த பின் நேரே புறவீதியை அடைந்து கதக்கண்ணனையும், முல்லையையும், அவர்கள் தந்தையையும் சந்திக்கலாமென எண்ணிக் கொண்டிருந்தான் அவன். நீராட்டு விழாவிலிருந்து மழையினுல் கலைந்து போய்க் கதக்கண்ணன் முதலியவர்கள் வீடு திரும்பியிருப்பார்களென்று அவன் அனுமானம் செய்து கொண்டிருந்ததனுல் அவர்களைப் புறவீதியிலேயே சந்திக்கலாமென்பது அவன் தீர்மானமாயிருந்தது.

சிறிதுதொலைவு சென்ற பின் 'கப்பல் கரப்புத்தீவு' மங்கலாகத் தெரிந்தது. காற்றில் அங்குள்ள தென்னை மரங்கள் பேயாட்டம் ஆடிக் கொண்டிருந்தன. அந்தத் தீவின் கரையைக் கண்டதும் தான் சம்பாபதித் தெய்வம் தன்னைக் காப்பாற்றி விட்டதென்ற நம்பிக்கை இளங்குமரனுக்கு ஏற்பட்டது.

கப்பல் கரப்புத் தீவின் ஈரமான செம்மண் தரையில் அந்தப் பெண்ணைத் தூக்கிக் கொண்டு நடந்தபோது இளங்குமரனின் மனம் கருணைமயமாக நெகிழ்ந்திருந்தது. பிறருக்கு உதவி செய்வதில் இருக்கிற மகிழ்ச்சி, பிறரிடமிருந்து உதவியைப் பெறுவதில் இருக்க முடியாதென்று எப்போதுமே அவனுக்கு ஒரு கருத்து உண்டு. அதையே மீண்டும் நினைத்துக் கொண்டு மகிழ்ந்தான் அவன்.

அந்தச் சமயத்தில் கப்பல் ஒன்று அவ்வழியே பூம்புகாரின் துறைமுகத்தை நோக்கி வருவதை அவன் கண்டான். உடனே தான் சுமந்து கொண்டிருந்த பெண்ணின் உடலை ஒரு மரத்தடியில் கிடத்தி விட்டு, கப்பலை அழைப்பதற்கு விரைந்தான். மழையும், காற்றுமான அந்த நேரத்தில் தான் உதவி கோருவது கப்பலிலிருப்பவர்களுக்குத் தெரிய வேண்டுமென்பதற்காகத் தீவிலேயே மிகவும் மேடான ஓர் இடத்தில் போய் நின்று கூவினுன் அவன். கூவியும், கைகளை ஆட்டியும் வெகு நேரம் முயன்றும் அந்தக் கப்பலில் இருந்தவர்கள் கவனம் அவன் பக்கம் திரும்பவில்லை. அவனுடைய கூக்குரலைக் காற்று அடித்துக் கொண்டு போய்விட்டது. தோற்றத்தைத் தொலைவும் மழையும்



மிக நல்ல விசிறிகள் மிக நல்ல பொறி இயல் நிபுணத்துவ மூலம் உருவாக்கப்படுகின்றன.

# அதுவே ஓரியண்டின் திறமை!



## ஓரியண்ட்
விசிறிகள்

உருவ அமைப்பிலும் உயர்தர உழைப்பிலும் பல வருடங்கள் முன்னதாகத் திகழ்கின்றன

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்,
, கல்கத்தா-11

தெரியவிடாமற் செய்துவிட்டன. 'இன்னும் ஏதாவது கப்பல் வருகிறதா' என்று கவனித்துக்கொண்டு அங்கேயே நின்றான் இளங்குமரன். கப்பல்கள் வந்தன. போயின. ஆனால் ஆதரவு தேடிக் கூக்குரலிட்ட அவனைத்தான் அவை கவனிக்கவில்லை. வெகு நேரத்துக்குப் பின்பு, 'இனியும் கப்பல்களை நம்பிக் காத்திருப்பதில் பயனில்லை' என்ற முடிவுடன் அந்தப் பெண்ணை விட்டுவந்த இடத்துக்குத் திரும்பினான் இளங்குமரன். மழை மூட்டப் போய் யிருளோடு மெய்யிருளாகிய இரவின் கருமையும் கலந்த தீவினுள் ஒளி மங்கி அந்தகாரம் கவிந்து கொள்ள முற்பட்டிருந்தது. 'இன்னும் சிறிது நேரத்தில் நன்றாக இருட்டிவிடுமே' என்ற கவலையோடு திரும்பி வந்த இளங்குமரன் அங்கே அந்தப் பெண் தானாகவே மயக்கம் தெளிந்து எழுந்து நின்று கொண்டிருப்பதைப்பார்த்து வியந்தான். அவளுடைய நிலை அவன் கவலையை ஓரளவு குறைத்தது. அவன் அருகில் வந்த போதும் அவள் அவனைக் கவனிக்கவில்லை. எதிர்ப் பக்கமாகக் கடலைப் பார்த்தவாறு கூந்தலை அள்ளி முடிந்து கொண்டிருந்தாள் அவள். வெண் தாமரைப் பூப்போன்ற அவளுடைய சிறிய பாதங்களில் செம்பஞ்சுக் குழம்பு தீட்டினாற்போல் தீவின் ஈரச் செம்மண் நிறம் பூசி அலங்காரம் செய்திருந்தது. தெப்பமாக நனைந்த நிலையில் குளிரில் உதறும் மணிப்புறுவைப்போல் அவள் பொன்னுடல் நடுங்கிக் கொண்டிருந்தது. வெண் சங்கு போல் நளினமாகத் தோன்றிய அவள் கழுத்துப் பின்புறம் பிடரியில் முத்து முத்தாக நீர்த்துளிகள் உருண்டு ஒட்டியும் ஒட்டாமலும் சிதறின; முத்தாரம் போல் தோன்றின. இளங்குமரன் மெல்லிய குரலில் அவளிடம் கூறினான் :



"ஏண்டாப்பா கேசரி கேட்டு ஒரு நாழியாகிறது: இப்பத்தான் மென்ன நீ நாட்டியம் ஆடிண்டு வரயே!"

"நான் நாட்டியகேசரி'ன்னு பட்டம் வாங்கியவனாச்சே!"

"பெண்ணே! உன்னைக் காப்பாற்றியதற்காகப் பெருமைப்பட்டுக் கொண்டிருப்பவனை நீ சிறிது திரும்பிப் பார்க்கலாமோ....?"

தோகை பொலியத் தோற்றமளிக்கும் பெண் மயில் போல் அவள் கரும்பினாள். அவள் முகத்தில் நகை மலர்ந்தது.

அந்த முகத்தைப் பார்த்து இளங்குமரன் அதிர்ந்துபோய் நின்றான். அவன் முகத்தில் வெறுப்பும் கடுமையும் பரவின.

"நீயா?....உன்னையா நான் இவ்வளவு சிரமப்பட்டுக் காப்பாற்றினேன்?"

"ஏன்? நான் காப்பாற்றுவதற்குத் தகுதியுடையவளில்லையா?" என்று கேட்டாள் சுரமஞ்சரி. அவள் முகத்திலும், கண்களிலும், இதழ்களிலும் குறும்புச் சிரிப்புக் குலவித் தெரிந்தது. அவளுடைய இன்ப விழிகள் இரண்டும் அவனை விழுங்கிவிடுவதுபோல்பார்த்தன.

## 37. கருணை பிறந்தது.

கப்பல் கரப்புத் தீவு இருளில் மூழ்கிவிட்டது. மழையும் காற்றும், முன்பிருந்த கடுமை குறைந்திருந்தன. பகைவர்களைப் போல் ஒன்றும் பேசிக்கொள்ளாமல் இருளில் எதிரெதிரே உட்கார்ந்து கொண்டிருந்தார்கள் சுரமஞ்சரியும், இளங்குமரனும். கடல் இருந்த இடம் தெரியாவிட்டாலும் கப்பல்கள் போவதும், வருவதுமாக இருந்ததனால் தொலைவில் ஒளிப் புள்ளிகள் தெரிந்தன.

நடுக்கும் குளிர். இருவர் உடலிலும் ஈர உடைகள். இருவர் வயிற்றிலும் பசி. இருவர் மனத்திலும் எண்ணங்கள். இருவர் எண்ணங்களிலும் துயரங்கள். அமைதியில்லை; உள்ளும் இல்லை - புறத்திலும் இல்லை. நீண்ட நேர மௌனத்துக்குப் பின் சுரமஞ்சரியின் கேள்வி இளங்குமரனை நோக்கி ஒலித்தது.

"என்னைக் காப்பாற்றியதை நீங்கள் விரும்பவில்லைதானே?"

"..............."

இளங்குமரனிடமிருந்து பதில் இல்லை.

"நான் கடலோடு சேர்ந்து இறந்து போயிருந்தால் உங்களுக்குத் திருப்தியாகியிருக்கும் இல்லையா?"

"..............."



"என் கேள்வியை மதித்து எனக்குப் பதில் சொல்வது கூட உங்களுக்குக் கேவலம் போலிருக்கிறது?"

"..............."

கரமஞ்சரி எழுந்து நின்றாள். மெல்லிய விசும்பல் ஒலி அவள் நின்று கொண்டிருந்த இடத்திலிருந்து ஒலித்தது. இளங்குமரன் அதைக் கேட்டும் அசையாமல் கற்சிலை போல் அமர்ந்திருந்தான்.

எழுந்து நின்ற அவள் கடலை நோக்கி வேகமாக நடக்கலானாள். நடையில் பாய்ந்தோடும் வெறி. நெஞ்சில் தவிப்புக்கள். அதைக் கண்டு இளங்குமரனின் கல் நெஞ்சில் எங்கோ சிறிது கருணை நெகிழ்ந்தது. எழுந்து நின்று அவளைக் கேட்டான்:

"நில்! எங்கே போகிறாய் நீ?"

"எங்கேயாவது போகிறேன்? எங்கே போனால் உங்களுக்கென்ன? உங்கள் மனத்தில்தான் எனக்கு இடம் கிடைக்காது! கடலில் நிறைய இடமிருக்கிறது."

"இருக்கலாம்! ஆனால் நான் உன்னைச் சாக விடமாட்டேன். நீ என்னால் காப்பாற்றப்பட்டவள். தெரிந்தோ, தெரியாமலோ, விரும்பியோ, விரும்பாமலோ உன்னைக் காப்பாற்றி விட்டேன். என்னுடைய அன்பை நீ அடைய முடியாது; ஆனால் கருணையை அடைய முடியும்."

கரமஞ்சரி நின்றாள். அவனுக்குக் கேட்கும்படி இரைந்து சிரித்தாள்.

"அன்பில்லாமல் கருணையில்லை. எல்லையை உடையது அன்பு. எல்லையற்றது கருணை. அன்பு முதிர்ந்துதான் கருணையாக மலர வேண்டும். அன்பேயில்லாத உங்கள் கருணையை நான் அங்கீகரிப்பதற்கில்லை."

"உன்னிடம் தர்க்கம் புரிய நான் விரும்பவில்லை. உன் சிரிப்புக்கும், பார்வைக்கும், நான் தோற்று நிற்பதுதான் அன்பு என்று நீ நினைப்பதாயிருந்தால் அதை ஒருபோதும் என்னிடமிருந்து நீ அடைய முடியாது. எனக்குப் பொதுவான இரக்கம் உண்டு. பொதுவான கருணை உண்டு. அது உன்மேலும் உண்டு. ஈ, எறும்பு முதல் எல்லா உயிர்கள் மேலும் உண்டு."

"அப்படிக் கருணையையும், இரக்கத்தையும் பொதுவாகச் செலுத்தக் கடவுள் இருக்கிறார். நீங்கள் தேவையில்லை. மனிதர்கள், மனிதர்களிடமிருந்து, மனித நிலையில் எதிர்பார்க்கும் ஈரமும், பாசமும் இணைந்து குழைந்த உலகத்து அன்புதான் உங்களிடமிருந்து எனக்கு வேண்டும்."

"அந்த அன்பை நான் உனக்குத் தருவதற்கில்லை."

"வேறு யாருக்குத் தருவதாக உத்தேசமோ?"

"யாருக்குமே தருவதற்கில்லை. அந்த அன்பை என் தாயின் கால்களில் விழுந்து கதறுவதற்காகச் சேர்த்துக் கொண்டு வருகிறேன் நான். உலகத்திலேயே நான் அன்பு செலுத்துவதற்கு ஒருத்திதான் பிறந்திருக்கிறாள். அவள்



என்னைப் பிறப்பித்திருக்கிறாள். அவள் யாரென்று எனக்கே தெரியவில்லை. அவளுக்காகத்தான் என் இதயத்தில் அன்பு தேங்கியிருக்கிறது. அவளுக்கு முன்னால் தான் நான் கண்ணில் நீர் நெகிழ 'அம்மா' என்று கூவிக் குழைய முடியும். துரதிர்ஷ்டவசமாக அவள் யாரென்று எனக்குத் தெரியவில்லை. அவளைப் பார்க்கிறவரை நான் பார்த்துக் கொண்டிருக்கிற பெண்களெல்லாம் என் கண்களுக்கு அவளாகவே தெரிகிறார்கள்.''

'' எனக்குத் தாய் இருக்கிறாள். ஆகவே அந்த வகையிற் கருணைக்குக் குறைவில்லை. ஆனால் தாயும், தந்தையும் செலுத்துகிற அன்பு மட்டும் இப்போது என் மனத்தை நிறைவு செய்யவில்லையே. உங்களைப் போல் ஒருவருடைய மனத்திலிருந்து என்னைப் போல் ஒருத்தியின் மனம் எதையோ வெற்றி கொள்வதற்குத் தவிக்கிறதே ?''

அவள் இப்படிச் சிரித்துக் கொண்டே கேட்டபோது மறுபடியும் இளங்குமரனின் குரல் சீறி ஒலித்தது !

'' அந்த வெற்றி உனக்குக் கிடைக்குமென்று நீ கனவிலும் நினைக்காதே. பெண்ணே ! உன் தந்தையார் சேர்த்துக் குவித்திருக்கிற செல்வத்துக்கு ஆசைப்பட்டுச் சோழ நாட்டு இளவரசனே உன்னை மணந்துகொள்ள முன் வந்தாலும் வரலாம். ஆனால் இளங்குமரன் வரமாட்டான். உன் தந்தையார் பொன்னையும், மணியையும்தான் செல்வமாகச் சேர்த்திருக்கிறார். ஆனால் இளங்குமரன் தன்மானத்தையும், செருக்கையுமே செல்வமாகச் சேர்த்திருக்கிறான் என்பதைத் தெரிந்து கொள்.''

எதிரே தள்ளி நின்றிருந்த சுரமஞ்சரி இளங்குமரனுக்கு மிக அருகில் வந்தாள். அழுகையும், சிரிப்புமின்றி உறுதியான எண்ணம் மட்டுமே வெளிப்படும் குரலில் ஏதோ சபதம் போடுவதுபோல் அவனிடம் கூறலானாள் :

''ஐயா! இந்த இருளும், மழையும், காற்றும், கடலும் சாட்சியாக உங்களுக்குச் சொல்லுகிறேன். தன்மானத்தையும், செருக்கையும், உங்களைவிடக் குறைவாக நான் சேர்க்கவில்லை. உங்களினும் பல மடங்கு அதிகமாகச் சேர்த்திருந்தேன். அதை அழித்து என் மனத்தைப் பலமில்லாமல் நெகிழ்ந்து போகச் செய்தது யார் தெரியுமா ?''

'' யார்... ?''

'' கேள்வியைப் பார் ! சொல்லித்தான் தெரிந்து கொள்ள வேண்டுமோ? நீங்கள்தான்!.... நீங்களேதான்.''

'' நான் என்னுடைய தன்மானத்தையும், செருக்கையும் வளர்ப்பதற்கு முயல்வது உண்டே தவிரப் பிறருடைய தன்மானமும் செருக்கும் அழிவதற்கு முயன்றதாக எனக்கு நினைவில்லையே?''

'' எப்படி நினைவிருக்கும்? உங்கள் செருக்கு வளரும்போதே என் செருக்கு அழிந்து உங்களுக்கு உரமாகிக் கொண்டிருக்கிறதே ? பூ அழிந்துதானே கனி?''

இளங்குமரன் திகைத்துப் போனான். அவளுடைய சாமர்த்தியமான பேச்சில் அவனது உணர்வுகளின் இறுக்கம் சிறிது சிறிதாக உடைந்து கொண்டிருந்தது.

"சோழ இளவரசன் மட்டுமில்லை. அகில உலகிலுமுள்ள எல்லா இளவரசர்களும் வந்தாலும் என் மனத்தைத் தோற்க விடமாட்டேன். என் தந்தையாரின் செல்வம் எனக்குத் தூசியைப் போலத்தான். பதவி, குடிப்பெருமை எல்லாம் அப்படியே! ஆனால் நான் என் மனம் அழிந்து ஏங்கி நிற்கும் நிலை ஒன்று உண்டு. அது இப்போது என் எதிரில் நின்றுகொண்டிருப்பவரின் அழகிய கண்களுக்கு முன் தோன்றும் நிலைதான்."

உணர்வுமயமாகிவிட்ட அவளுக்கு என்ன பதில் சொல்வதென்று தோன்றாமல் தயங்கி நின்றான் இளங்குமரன். கப்பல் கரப்புத் தீவில் எங்கோ புதரில் மலர்ந்துகொண்டிருந்த தாழம்பூ மணம் காற்றில் கலந்து வந்து அவன் நாசியை நிறைத்தது. இந்த மணத்தைத்தான் அன்றொருநாள் கைகளிலிருந்தும் மனத்திலிருந்தும் கழுவித் தீர்த்திருந்தான் அவன். இன்று அதே மணம் மிக அருகில் கமழ்கிறது.

கீழே குனிந்து அவன் பாதங்களைத் தன் பூவிரல்களால் தீண்டி வணங்க முயன்றாள் சுரமஞ்சரி. இளங்குமரன் தன் பாதங்களைப் பின்னுக்கு இழுத்து விலகிக் கொண்டான். அவன் இழுத்துக் கொண்ட வேகத்தையும் முந்திக் கொண்டு வலது பாதத்தில் அவளுடைய கண்ணீர் முத்து ஒன்று சிந்தி விட்டது. அவள் ஏமாற்றத்தோடு எழுந்தாள்.

"நீங்கள் என்னைக் கடுமையாகச் சோதிக்கிறீர்கள்."

"தெய்வம் எனக்கு என் தாயைக் காண்பிக்காமல் இதைவிடக் கடுமையாகச் சோதிக்கிறது, பெண்ணே!" என்று கூறிக்கொண்டே மரத்தடியில் உட்கார்ந்தான் இளங்குமரன். அவள் நின்று கொண்டேயிருந்தாள். இருவருக்குமிடையே அமைதி நிலவியது.

சிறிது நாழிகையில் சோர்வு மிகவே அப்படியே ஈரத்தரையில் சாய்ந்து படுத்துவிட்டான் இளங்குமரன். அவள் மட்டும் முன்போலவே நின்று கொண்டிருந்தாள்.

"ஏன் நின்று கொண்டேயிருக்கிறாய்?"

"நிற்காமல் வேறென்ன செய்வது?"

"விடிவதற்குமுன் ஒன்றும் செய்வதற்கில்லை! விடிந்த பின் ஏதாவது கப்பலில் இடம்பிடித்து ஊர் திரும்பலாம்! அதுவரை இப்படியே நிற்கப் போகிறாயா?"

அவன் தலைப் பக்கத்தில் வந்து அவள் உட்கார்ந்து கொண்டாள். அந்த உரிமையும், நெருக்கமும் சற்று மிகையாகத் தோன்றின அவனுக்கு. "அதோ, அந்த மரத்தடியில் போய்ப் படுத்துத் தூங்கு" என்று பக்கத்திலிருந்த வேறொரு மரத்தைக் காண்பித்தான் இளங்குமரன்.

"அங்கே போக மாட்டேன். பயமாயிருக்கும் எனக்கு."

"பயப்படுவதற்கு இந்தத் தீவில் ஒன்றுமில்லை."

'நீங்கள் இருக்கிறீர்களே' என்று குறும்புத்தனமாகச் சொல்லிச் சிரிக்க நினைத்தாள் சுரமஞ்சரி. ஆனால் அப்படிச் சொல்லவில்லை. நாவே நாவுக்குத் தடையாகி விட்டது.

"பயப்படுவதற்கு ஒன்றுமில்லையென்பதே எனக்கு ஒரு பயமாகி விடும். ஈரத்தரையில் தலைக்கு ஒன்றும் வைத்துக் கொள்ளாமல் படுத்துத் தூங்கிப் பழக்கமில்லை எனக்கு. நான் இப்படியே நிற்கிறேன்" என்று மறுபடியும் எழுந்திருக்கப் போனவளைக் கைப்பற்றி உட்கார வைத்தான் இளங்குமரன். அந்த விநாடி அவள் நெஞ்சில் பூக்கள் பூத்தன. மணங்கள் மணந்தன. மென்மைகள் புரிந்தன. தண்மைகள் நிறைந்தன.

"இதோ இப்படி இதன் மேல் தலை வைத்து உறங்கு" - என்று தன் வலது தோளைக் காட்டினான் இளங்குமரன். சுரமஞ்சரி முதல் முதலாக அவனுக்கு முன் நாணித் தலைகவிழ்ந்தாள்.

"ஏன் பேசாமல் இருக்கிறாய்? உனக்குத் தலையணை இன்றி உறக்கம் வராதென்றாய். என் கையை அணையாகத் தருகிறேன். இது பொதுவாக உன்மேல் எனக்கு ஏற்படும் கருணையைக் கொண்டு செய்யும் உதவி. விரும்பினால் ஏற்றுக் கொள். இல்லாவிட்டால் நின்று கொண்டே இரு" என்றான் கடுமையாக.

செம்பொன் நிறத்துச் செங்கமலப் பூவணை போன்ற அவன் வலது தோளில் தலைசாய்த்தாள் சுரமஞ்சரி. அவள் மனத்தில் நினைவுகள் மிக மெல்லிய அரும்புகளாக அரும்பிக் கொண்டிருந்தன.

அப்போது, "பெண்ணே! இப்படி இன்றிரவு என் தாயோடு இந்தத் தீவில் தங்க நேர்ந்து அவளுக்குத் தலையணை இல்லாமல் உறங்க முடியாது போயிருந்தாலும் இதே வலது தோளைக் கருணையோடு அவளுக்கு அளித்திருப்பேன் நான். பிறருக்கு உதவுவதே பெருமை. அதுவும்; இயலாதவர்களுக்கு உதவுவது இன்னும் பெருமை" என்று நிர்மலமான குரலில் கூறினான் இளங்குமரன்.

"நான் ஒன்றும் இயலாதவளில்லை. எனக்கு அன்பு வேண்டும். கருணை வேண்டியதில்லை" என்று சீற்றத்தோடு அந்தத் தோளைத் தள்ளிவிட்டுத் துள்ளி எழுந்தாள் சுரமஞ்சரி. அவள் இதயத்து ஆசை அரும்புகள் வாடி உதிர்ந்தன. **(தொடரும்)**

---

மணிபல்லவம் கதையில் பின்னால் வரும் ஒரு சம்பவத்தை இந்த இதழ் அட்டைச் சித்திரமாக வழங்கி யிருக்கிறார் ஓவியர் வினு.

# நீங்களும் இவ்வணங்கின் அழகிய கேசத்தைப் பெற விரும்புவீர்கள்!

ஓர் திருப்பம், ஓர் பார்வை—அவளுடைய அழகிய கேசம் உங்கள் மனதில் அழியாத இடம் பெறுகிறது. பிறகு, "இவ்வழகிய கேசம் எனக்கிருந்தால்", என்று நினைக்கிறீர்கள். மிகச் சிறந்த மூலதரப் பொருட்களால் தயாரிக்கப்பட்ட 'கேஷ' அபரிமிதமான அழகிய கேசத்தை உங்களுக்கு அளிப்பதுடன், உங்கள் கேசத்திற்கு முற்றிலும் புதிய அழகிய வனப்பை அளிக்கிறது—நீங்கள் விரும்பும் அழகு உங்களை நாடுகிறது. கேஷாவின் மென்மையான நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

உங்கள் கேச
பாதுகாப்பு
திட்டத்திற்கு

## கேஷா

லோமா தயாரிப்பாளரின்
இன்னும் ஒரு
சிறந்த தயாரிப்பு






பூரண ஏஜெண்டுகள்:
**எம். எம். கம்பாத்வாலா**
அஹமதாபாத்—1

ஏஜெண்டுகள்:
**ஸி. நரோத்தம் & கோ.,**
பம்பாய்—2

TAM

# பரிசுப் பாத்திரம்!

அன்னம்

சிக்கில் சிங்காரவேலருடைய வாசஸ்தலத்துக்கு அருகில் உள்ள குறுகிய தெருவின் மூன்றாவது வீட்டின் புறக்கடை என்ன புண்ணியம் செய்ததோ? இல்லாமலா முத்துக் குமாரசாமி என்ற நீண்ட அழகிய பெயரைக் கொண்ட குமரு அங்கே பிறந்தான்? அது மட்டுமா? குமரு கவிழ்ந்தான். தவழ்ந்தான். அமர்ந்தான். நின்றான். ஓடினான்! சிக்கில் ஆரம்பப் பாடசாலையில் மூன்றாவது படிவம் வரை சிக்காமல் வருடந்தோறும் விடுபட்டு வந்த குமருக்குக் கீவளூர் உயர்நிலைப்பள்ளியின் காற்று சரியாகப் பிடிபடவில்லை. அடுத்த மூன்று வருடப் படிப்பைப் பலமாக அவசரப் படாமல் ஆறு வருடங்களில் அழகாக முடித்த பின்னர் வேலைக்கு மனுச் செய்யும் கைங்கரியத்தை அவன் தொடங்கினான். சிக்கில் அஞ்சல் நிலையத்து அதிகாரிகள் மாறினார்கள். ஆனால் தன்னுடைய பெயருக்கு ஏதேனும் தபால் உண்டா என்று கேட்டு விட்டு, இல்லை என்ற பதிலை இன்பத்துடன் ஏற்றுச் செல்லக் குமரு வரும் நேரம் மாற வில்லை.



1961ம் வருஷம் ஜனவரி மாதம் 16உ ஓர் அதிசயம் நடந்தது. சிக்கில் தபாலாபீஸில் குவிந்து கிடந்த எண்ணற்ற பொங்கல் வாழ்த்துக்களினூடே குமருவுக்கும் ஒரு கடிதம் வந்தது. சென்னையம்பதி வண்ணாரப்பேட்டை வட்டாரத்தில் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட ஒரு வர்த்தகக் கம்பெனியின் கிளை ஸ்தாபனத்தின் கிளைக் கிடங்கில் குமாஸ்தா வேலை அவனுக்குக் கொடுக்கப்பட்டது. பலத்த சிபார்சின்பேரில் அந்த உத்தரவு பல ஜில்லாக்களைத் தாண்டிச் சிக்கலில் இருந்த இவனைத் தேர்ந்தெடுத்தது. சம்பளம் என்னவோ அறுபது ரூபாய்தான் — இருந்து விட்டுப் போகட்டுமே! எடுத்த எடுப்பில் ஆயிரம் ரூபாய் கிடைத்து விடுமா?... பிறந்த உடனேயே எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்து விடவில்லையே....

குமரு தன் தாயிடம் அனுமதி...தவறு... அவன் பிறந்ததிலிருந்து யாரையும் அனுமதி கேட்டதில்லை. அவன் சொன்ன சொல்லைக் கேட்டுப் படித்து வந்த தாய் கையிருப்புத் தொகையையும் சேர்த்துக் கொடுத்துப் புத்திமதிகள் பலவற்றை இனாமாக வழங்கி ஒரு நல்ல சுபதினத்தில் மாலை 4-45 மணிக்குத் தன் மகனைச் சென்னைக்கு ரயிலேற்றி அனுப்பி வைத்தாள்.

குமரு வேலையில் சேர்ந்தான். சேர்த்துக் கொள்ளப்பட்டான். திரைப் படங்களில் அலங்காரமான அலுவலகங்கள் காண்பிக்கப் பட்டு அவன் பார்த்து ரஸித்திருக்கிறான். அவன் வேலை செய்யப் புகுந்த இடம் அப்படி இல்லை. இரண்டு நிமிடங்களுக்கு ஒரு தரம் கூரையிலிருந்து காரை பெயர்ந்து கொட்டும் மாளிகை. எட்டு நாட்கள் தாக படியப்பெற்ற ஒரு மேஜை. அது எங்கே ஒடிந்து விழப் போகிறதோ என்ற அச்சத்தில் அதற்குக் கொடுக்கப்பட்ட முட்டுக்கட்டை. கவரோராமாகப் போடப்பட்ட ஒரு மூன்று கால் நாற்காலி. சுவர்ப் பக்கமிருந்து அதை இழுத்



தால் நாற்காலி நிற்காது. உட்கார்ந்தவன் உட்கார்ந்திருக்கவும் மாட்டான்.

நகரின் வேறு ஏதாவது பேட்டையில் ஜாகை கிடைக்குமா என்று குமரு தேடவில்லை. அப்படியே கிடைத்தாலும் வண்ணாரப்பேட்டை வந்துபோக பஸ்ஸுக்குச் சம்பளத்தைக் கொடுத்து விட்டால் பிறகு வயிற்றுக்கு ஈரத்துணி போட ஏதாவது தையற் கடையில் இரவல்தான் கேட்க வேண்டும்! ஆபீஸ் இருந்த பதினைந்து அடி அகல ராஜபாட்டையின் குறுக்கே ஓடியது ஒரு நான்கடிச் சந்து. அந்தச் சந்தில் ஒரு மெத்தை வீடு. அந்த வீட்டில் ஒரு மெத்தைதான் உண்டு. அது வீட்டின் சொந்தக்காரர் குறட்டை விட்டுத் தூங்கப் பயன்பட்டது. அவர் மிகுந்த அறிவாளி. நாட்டின் ஐந்தாண்டுத் திட்டங்களைக் கெட்டிக்காரத்தனமாக வகுப்பதற்கு நம் சர்க்கார் அவரைக் கூப்பிட மறந்து விட்டது நாட்டுக்கு நஷ்டம். அவர் வீட்டில் ஏதேனும் இரண்டடிக்கு இரண்டடி இடைவெளி உபயோகமில்லாமல் கிடப்பதாகத் தோன்றினாலும் அதில் ஒரு சிறு குடித்தனம் வைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்து விடுவார். குடியிருக்கச் சென்னையில் வீடுகளுக்குப் பஞ்சம் என்றதும் எவ்வளவு தாராள மனப்பான்மையுடன் அத்தனை குடும்பங்களுக்கும் இடமளித்தார், பாருங்கள், அந்தத் தன்னலமற்ற தியாகி! அடுத்த சிறுவீட்டில் ஏற்கெனவே நூறு குடித்தனங்கள் இருந்தன. மாடியில் ஏறித் திரும்பும் இடத்தில் ஆறு அடிக்கு நாலு அடி ஒரு நீண்ட சதுரம் வீணாய்ப் போவது அவர் கண்ணில் பட்டது. நான்கு மூங்கில், இரண்டு ஈச்சம்பாய் ஓரணா ஆணி சகிதம் வேலையை ஆரம்பித்தவர்—மாதம் ஆறுரூபாய் வாடகை பெறக்கூடிய ஓர் அறையையே சிருஷ்டித்து விட்டார்! என்ன அசாதாரணமான திறமை, அவருக்கு. அந்த அறையில் குடியேறினான் குமரு.

அந்த வீட்டிலிருந்து ஒரு பர்லாங்கு தூரத்தில் அமைந்த உடுப்பி சாரதா பவன் என்ற பெயரில் உள்ள 'உடுப்பி' எதற்காக இருக்கிறது என்பது உங்களுக்குத் தெரிய நியாயமில்லை. ஹோட்டலின் நிர்வாகியான குப்புசாமிக்கே உடுப்பி என்பது தெற்கே எங்கேயோ இருக்கும் ஒரு கிராமம் என்ற நினைவுதான். சென்னையில் உள்ள ஹோட்டல்களிலெல்லாம் உடுப்பி என்ற பெயர் இருந்தாக வேண்டும் என்று எழுதப்படாத சட்டத்தின்படி அவரும் உடுப்பி சாரதாபவனை ஆரம்பித்து வைத்திருந்தார். சாரதா அவருடைய சஹதர்மிணியின் பெயர்.

இந்தக் காப்பி, சாப்பாட்டு விடுதியில்தான் குமரு தன் வயிற்றைக் கவனித்து வந்தான். அன்றும் வழக்கம்போல் பல்லைத் துலக்கி விட்டு ஒரு கப் காப்பிக்காகத் தான் வழக்கமாக அமரும் நாற்காலியில் அமர்ந்தபொழுது, பக்கத்திலிருந்த கல்லாவின் கீழிருந்து குப்புசாமியின் குரல் கர்ணகடூரமாக எழுந்தது :

"இந்த டம்ளர் யாருடையது?"

குமரு திடுக்கிட்டு மேலேயும் கொஞ்சம் சிந்திக் கொண்டு பிறகு அசடு வழியக் காப்பி டம்ளரை எடுத்து உறிஞ்சப் போன அதை மேசைமேல் வைத்தான். ஹோட்டல் சொந்தக்காரர் மிரட்டியது நன்மையல்ல என்பது ஒருவாறு புரிந்ததும் மெல்லத் திரும்பினான்.

கல்லாவின் மேல் ஓர் எவர்ஸில்வர் டம்ளர் இருந்தது. அதில் சாரதா பவனின் பிரசித்தி பெற்ற சாம்பார் இருக்க வேண்டும் என்பதை டம்ளரின் விளிம்பில் இருந்த வெங்காயத் துண்டுகள் சந்தேகத்துக் கிடமின்றிப் பறைசாற்றின. குப்புசாமியின் எதிரே ஒரு பெண் நின்றிருந்தாள். அவள் அடிக்கடி வெளியில் வந்து பழக்கமில்லாதவள் போலத் தென்பட்டாள்.

'அடே! சென்னையில்கூட இப்படி ஒரு பெண் இருக்கிறாளே !' என்று வியந்தான் குமரு.

" இந்த டம்ளர் யாருடையது ?" ஓட்டல் நிர்வாகி குப்புசாமி மீண்டும் வினவினார்.

" ஏன், எங்க வீட்டுதுதான் :"...

" ஹஹ்ஹஹா !.... ஒங்க வீட்டுதா ?.....: ஹஹ்ஹஹாஹா !"....

குமருவுக்குப் புரியவில்லை. இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது ?

"என்னய்யா அப்படி சிரிக்கிறே?..." என்று கேட்டுவிட்டாள் அந்தப் பெண். 'நியாயம் தானே!...குரல்கூட நன்றாக இருக்கிறதே அவளுக்கு.' என்று எண்ணினான் குமரு.

"இதைப் பார்த்தாயா அம்மா!...என்ன போட்டிருக்குது..."

சுட்டிக் காட்டப்பட்ட இடத்தில் அந்த எவர்ஸில்வர் சாம்பார்தாங்கியில் எஸ். பி. என்ற ஆங்கில எழுத்துக்கள் பொறிக்கப் பட்டிருந்தன.

"எஸ். பி." என்று போட்டிருக்குது. பாத்தியா...சாரதா பவன்னு அர்த்தம்...டம்ளர் ஹோட்டலுது...தெரியுதா...?"

"இது என்னங்க அநியாயம்? என் வூட்டுலே இருக்கிற ஒரே டம்ளரை நான் கொண்டு வந்தேன் ; உங்களுது என்கிறீங்களே !"

"இப்படி ஒவ்வொரு ஹோட்டலிலிருந்தும் அடிச்சுக்கிட்டே வந்து சேர்த்தா, வீட்டிலே ஒரே டம்ளரா இருக்கும்...கடையேயிச்ல இருக்கும்!..."

" நீ என்னய்யா சொல்றே?..." என்றாள் அவள்...குரலில் ஒரு நடுக்கத்தினூடே துக்கமும் தொனித்தது. இதற்குள் அங்கு ஒரு சிறு கூட்டம் கூடிவிட்டது.

"அண்ணனுக்கு ஆபீஸுக்கு நேரமாயிட்டுது. நான்தா வாங்கிக்கிட்டு வான்னு இன்னிக்கு என்னை அனுப்பிச்சது... மொத மொதல்லே இந்த ஹோட்டலுக்குள்ளே நொழையுறேன்..." என்ற அவள் வாதத்தை நம்ப எவரும் தயாராயில்லை.

"போலீஸுக்குச் சொல்லி அனுப்புங்க..." என்று யாரோ சொன்னதைக் கேட்டு அதிர்ந்து போனான் குமரு! வாலிப ரத்தம் கொதித்தது. வீரத் தமிழனின் நரம்பு புடைத்தது. தொடர் கதைகளிலும் சினிமாக்களிலும் அபலைப் பெண்ணைக் காக்கப் புறப்படும் கதாநாயகனைப் போல் சீறி எழுந்தான்.

"ஏன் ஐயா, பெரிசா மிரட்டறீங்க...விலாசத்தைக் கேட்டுக் குறிச்சிட்டு ஆளை விடுங்க..." என்றான் குமரு.

"நீ யாரு நடுப்பற பேசிக...?"

"உங்க பாட்டன்..." என்றான் முத்துக் குமரு கோபமாக.

குப்புசாமிக்கு இப்போது ஒரு பெரிய கவலை. 'இந்தக்கூட்டம் கூடிவிட்டால் இட்டிலி விற்பது எப்படி? வியாபாரம் படுத்து விடுமே?'

"இந்த டம்ளர் இங்கேயே இருக்கட்டும்..... உன் விலாசத்தைச் சொல்லு..."

"பதினெட்டு, ஞான கிராம முதலி சந்து..."

குமரு திடுக்கிட்டான். 'பதினெட்டு .... ஞானகிராம முதலி சந்து... அவனுடைய மாளிகை அல்லவா அது?'

சிறிது நேரத்தில் அந்தப் பெண் இட்டிலி போல் வீங்கிய முகத்துடனும் சாம்பாராகச் சிவந்த வதனத்துடனும் முன் செல்லப் பின் தொடர்ந்தான் முத்துக்குமரு.

# இக்கரைச் சீமையில்...!



"வீட்டில் சமையல் நன்றாக இல்லை என்று சண்டை போட்டுவிட்டு வருகிறீர்களா? எங்கள் ஹோட்டலுக்கு வாருங்கள்! உங்கள் வீட்டுச் சமையலே பிரமாதம் என்று தோன்றும்படி செய்கிறோம்!"

இந்தப் பெண்ணை அவன் அந்த வீட்டில் இதற்கு முன்பு பார்த்ததில்லையே. குமரு அதைக் குறித்து ஆச்சரியப்படவே யில்லை.

'சென்ஸஸ்' எடுப்பவர் நாலுமுறைகள் அந்த வீட்டுக்குப் படையெடுத்து நாலு விதமாகக் கணக்குப் போட்டுக் கடைசியில் இரண்டு கைகளாலும் தலையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு ஓட்டம் எடுத்தது அவனுக்குத் தெரியாததா?

தன் பின்னால் தொடர்ந்து வந்த வாலிபன் தனக்குச் சிபாரிசு செய்தான் என்ற ஒரே காரணத்துக்காகத் திரும்பிப் பின் புறம் பாராமல் விடுவிடுவென்று நடந்தாள். வீட்டினுள்ளே நேராகப் பின்புறம் சென்று ஒரு தடுக்குக்குள் நுழைந்தாள்.

விம்மலினிடையே நடந்த விவரத்தைச் சொல்லிக் கொண்டிருந்தாள் அவள் யாரிடமோ. அறைக்கு வெளியே தொங்கிய சாக்குத் திரையைப் பிடித்தபடி நின்றான் முத்துக் குமரு.

"நீ கவலைப்படாதே தங்கச்சி! அப்படியா சொன்னான்...நான் பார்த்துக்கறேன்" என்று சொன்னபடியே திரையை அகற்றிய கை குமருவை அலாக்காக ஒரு புறம் தள்ளியது.

ஆஜானுபாகுவான ஓர் உருவம் வெளிப்படுவதைக் கண்டதும் குமருவுக்கும் நெஞ்சில் குளிர் கண்டது.

"அது யாரு அஞ்சுகம்?"

"இவரு ... இவரு ...."

"ஓஹோ! இந்தப் பயல்தான் அந்த ஹோட்டல்காரனா?"

"ஐயையோ... இல்லே இல்லே!..." என்று அலறினான் குமரு — ஓங்கும் கரத்தைக் கண்டு ஒடுங்கியபடியே.

இந்த முரடன் கையாலே ஒரு குத்து வாங்கினால் நம்ம தலை சிக்கில் வரைக்கும் சிதறி விடும்!' என்று முணு முணுத்துக்கொண்டான் குமரு. 'சரியான தடியன்!'

"என்ன சொன்னாய்?" என்று மீசையை முறுக்கிக் கொண்டு கோபமாய் விழித்தான் அஞ்சுகத்தின் அண்ணன்.

"ஒன்றுமில்லே! சிக்கில்லே ஒரு சாண்டோ இருப்பான்... உன்னைப் போல்தான்..." என்று கூறிய போதே குமருவின் உடல் பயத்தில் பதறியது.

"பலே! அப்படிச் சொல்லு!" என்றவாறே ஒரு ஷொட்டுக் கொடுத்தான் அந்தச் சாண்டோ. குமருவுக்குத் தலை வேகமாகச் சுற்றியது.

இதற்குள் அந்தப் பெண் அஞ்சுகம் அண்ணனிடம் குமரு தனக்கு உதவியதை விளக்கினாள்.

அந்தப் பெரிய உருவம் சிரித்தது. இல்லை, கர்ஜித்தது. "உனக்குத் தெரியாது அஞ்சுகம்! சிக்கிலில் நம்ம ஒண்ணு விட்ட மாமா..... அதாம் பங்காரு நாயக்கர்... அவரு வீட்டு டம்ளர் இது... அவுங்க வீட்டுப் பாத்திரம் எல்லாவற்றிலும் 'எஸ். பி.' என்று போட்டிருக்கும்.... போன வருஷம் அம்மா கும்பாபிஷேகத்துக்குப் போயிருந்தபோது கொண்டு வரவில்லே?"

"சிக்கிலில் யார்னு சொன்னீங்க...?" என்றான் குமரு தயங்கியபடியே.

"உனக்குத் தெரியுமா? .... பங்காரு நாயக்கர்..."

"எனக்குத் தெரியும்... அவரு... எங்க... அப்பா..." என்றான் குமரு.

குமருவின் கால்கள் தரையில் நிற்கவில்லை. அஞ்சுகத்தின் அண்ணன் அவனைக் குண்டுக் கட்டாகத் தூக்கிச் சாக்குத் திரைக்குள்ளே உட்கார வைத்துவிட்டான் ஒரு கணத்தில்...

"நம்ம முத்து. அஞ்சுகம்...நம்ம முத்துக் குமரு" என்று அந்தக் கொஞ்சும் விழி அஞ்சுகத்துக்குக் குமருவை அறிமுகம் செய்துவைத்தான் சாண்டோ கோலம்பூண்ட செல்வராஜ்.

சிறிது நேரத்தில் அஞ்சுகத்தின் தாயும் அங்கே வந்து சேர்ந்தாள்.

* * *

சுமார் ஆறு மாதங்கள் சென்றிருக்கும். அவ்வீட்டின் சொந்தக்காரர் வாசல் கதவில் "போர்ஷன் குடக்கூலிக்கு விடப்படும்" என்ற அட்டையை மாட்டி விட்டிருந்தார். குமருவும் அஞ்சுகமும் குடித்தனம் செய்ய அந்த நாலு அடி அறை போதுமா?—கல்யாணத்துக்கு ஜாங்கிரி போடக் குமரு சாரதா பவனில் தான் ஆர்டர் கொடுத்தான். அதை அவன் மறக்க முடியுமா?

தம்பதிக்கு ஓட்டல் அதிபர் அளித்த திருமணப் பரிசு என்னவென்று நினைக்கிறீர்கள்?— ஓர் எவர்ஸில்வர் டம்ளர்தான்!

# முடியாட்சியிலே தழைத்த குடியாட்சி

## கி. ராஜேந்திரன்

"மக்கள் சபை கூடாது. கூட முடியாது. கூடக் கூடாது!" என்று ஆத்திரத்துடன் இரைந்தான் முதலாம் சார்ல்ஸ் மன்னன்.

"கூட்டியே தீருவோம்" என்றார்கள் மக்கள் பிரதிநிதிகள் உறுதியாக.

மன்னனின் கண்கள் அனலாய்ச் சிவந்தன. "அதையும்தான் பார்த்து விடுகிறேனே!" என்று கர்ஜித்தான்.

"தலையைச் சீவி விடுவாரோ?" என்று முணுமுணுத்தார்கள் நாட்டுத் தலைவர்கள்.

தலை உருண்டது இறுதியில். மன்னன் தலை!

அதற்கு முன்னால்...

மக்கள் சபை உறுப்பினர்களிலே குறிப்பாக ஐந்து பேர்களைத் தன் பரம வைரிகளாகக் கருதிய சார்ல்ஸ் சபாநாயகரை அழைத்து, "நீங்கள் என் பிரதிநிதி; சபையின் நடவடிக்கைகளை ஒத்திப் போட ஆவன செய்யுங்கள்" என்று ஆணையிட்டான்.

"நீங்கள் எங்களுடைய சபாநாயகர். கூட்டத்தை நடத்தித் தாருங்கள்" என்று கேட்டுக் கொண்டார்கள் உறுப்பினர்கள்.

அரசனுக்கும் அங்கத்தினர்களுக்கும் இடையில் அகப்பட்டுக் கொண்டு அவதிப்பட்டார் அவைத் தலைவர்.

தமது ஆசனத்தை விட்டு எழுந்து மெல்ல நழுவப் பார்த்தார். மக்கள் பிரதிநிதிகள் ஏமாறுவார்களா? கதவைப் பூட்டிச் சாவியைப் பைக்குள் போட்டுக் கொண்டார் ஒருவர். வேறு பலர் பாய்ந்து சென்று பலவந்தமாகச் சபாநாயகரை இழுத்துக் கொண்டு போய் அவருக்குரிய ஆசனத்தில் உட்காரச்செய்து தப்பி ஓடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்கள்.



கூட்டம்ஒரே களேபரத்துடன் கன ஜோராக நடந்தேறியது.

சார்ல்ஸ் இதன்பின்னர் ஒரு முறை வீரர்கள் சிலருடன் வந்து சேர்ந்தான். தனக்குப் பிடிக்காத ஐந்து பேர்களைச் சுட்டிக் காட்டுமாறு சபாநாயகர் லெண்ட் ஹாலுக்குக் கட்டளையிட்டான்.

"அரசே! இந்தச் சபையில் எனக்கென்று நாவும் கண்களும் இல்லை. இதில் அங்கம் வகிப்போர் சொற்படி யெல்லாம் நடக்க நான் கடமைப் பட்டுள்ளேன்" என்றார் லெண்ட்ஹால் மிகுந்த நடுக்கத்தினூடே.

வேடிக்கையாகத் தோன்றும் இந்தச் சம்பவம் விபரீதத்துக்கு அடிகோலியது.

பாராளுமன்றம் இல்லாமல் அரசன் நாட்டை ஆள்வதா அல்லது மன்னனுடன் சேர்ந்து பாராளுமன்றம் நாட்டை ஆள்வதா? இரண்டிலொன்று என்ற நிலை உண்டாகி விட்டது இங்கிலாந்தில். அதன் விளைவாக சார்ல்ஸ் முன்பு கூறியதுபோல் முடியிழந்தான், உயிரையும் இழந்தான்!

முதலாம் சார்ல்ஸ் மன்னனும் அவனுக்கு முன்னர் அரசாண்ட முதலாம் ஜேம்ஸும் அரச பதவியை ஆண்டவனே தங்களுக்கு அளித்துள்ளதாக மனப்பூர்வமாக நம்பினார்கள். பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நாடாண்ட அவர்கள் பாராளுமன்றம் இயங்குவது தாங்கள் காட்டும் கருணையால்தான் என்று கருதினார்கள்.

பாராளுமன்றத்துக்கான அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பது குறித்து ஜேம்ஸ் மக்களுக்கு வழங்கிய அறிவுரைகளில் குறை ஏதும் காண்பதற்கில்லை நாம். "மூடப் பழக்க வழக்கங்கள், குருட்டு நம்பிக்கைகள் கொண்டவர்கள், தமாஷ் செய்து வாய் கிழியப் பேசும் கையாலாகாதவர்கள் இவர்களையெல்லாம் தவிர்த்து விட்டு, அமைதியாகவும் அடக்கத்துடனும் பணியாற்றக்கூடிய செயல்திறன் மிக்கவர்களையும், (அரசியலையே தொழிலாகக் கொள்ளாமல்) தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ளக்கூடிய அளவுக்கு வசதியும் செல்வமும் படைத்தவர்களையும் தேர்ந்தெடுங்கள்" என்று வேண்டுகோள் விடுத்தார்.

அந்தக் கோரிக்கையிலிருந்த உண்மைகளைப் பற்றி யாருமே சிந்திக்கவில்லை. தேர்தல்களில் அரசன் தலையிடுவதை ஒருவரும் விரும்பவில்லை. ஜேம்ஸுக்குக் கிடைத்தது கெட்ட பெயர்தான்!

முதலாம் சார்ல்ஸைத் தீர்த்துக் கட்டிய பிறகு குடியரசு ஸ்தாபிதமாகியது. இல்லை, குடியரசு என்ற பெயரால் தனி ஒருவனின் (ஆலிவர் கிராம்வெல்) அராஜகம் ஆரம்பமாயிற்று. யதேச்சாதிகாரத்தைப் பொறுக்காத மக்கள் வெகுண்டு எழுந்தார்கள். அடித்தது யோகம் மீண்டும் அரச பரம்பரைக்கு. இரண்டாம் சார்ல்ஸ் முடிசூட்டப் பெற்றான்.

சில ஆண்டுகளுக்குப் பின் இங்கிலாந்தில் முடியாட்சி வேரூன்றியது. ஜனநாயகமும் தழைத்தோங்கி வளர்ந்து விட்டது. இவையெல்லாம் பற்றிய சரித்திரச் சான்றுகள், வரலாற்று ஏடுகள், ஆதாரங்கள் முதலியவற்றை எங்களுக்குச் சுட்டிக் காட்டி விளக்கிக் கொண்டே வந்தார் தொழிற் கட்சிப் பிரமுகர் ஒருவர், பாராளுமன்றக் கட்டிடத்தில்.

இன்றைக்கும் சபாநாயகராகப் பதவி ஏற்பவர் விளையாட்டாகத் தமது பீடத்திலிருந்து நழுவப் பார்ப்பார் என்றும், சுற்றிலுமுள்ளோர் அதற்கு இடம் தராமல் அவரை அமுக்கி வைப்பார்கள் என்றும் அறிந்து வியந்தேன், சிரித்தேன்.



பிரிட்டிஷ் பார்லிமெண்டின் சரித்திரத்தில் இப்படி எத்தனையோ சுவையான நிகழ்ச்சிகள்.

அடுத்து மக்கள் சபையில் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்காக ஏற்பட்டிருந்த 'காலரி'க்குச் சென்றோம். அப்போது கேள்வி நேரம். பிரிட்டனுடைய ஜனநாயக அமைப்பிலே மக்கள் நலனுக்கு மிகச் சிறந்த பாதுகாப்பாக விளங்குவது இந்தக்கேள்வி நேரம்தான் என்று பெருமைப்படுகிறார்கள் அரசியல்வாதிகள். வருஷத்தில் சராசரியாகப் பதினாயிரம் கேள்விகள் கேட்கப் படுகின்றன! இவற்றைத் தவிர, கிடைக்கும் பதிலைத் தொக்கி நிற்கும் உப கேள்விகள் வேறு! மக்கள் சபை அங்கத்தினர்கள் தனிப்பட்ட முறையில் தங்கள் திறமையைக் காட்ட முடிவது கேள்வி நேரத்தின் போதுதான்.

காலரியில் எல்லாருக்கும் முன்னால் போய் உட்கார்ந்து கொண்டேன், ஆர்வத்துடன். எனக்கு நேர் கீழே சபாநாயகர். வலப்புறத்தில் ஆளும் கட்சியாகிய கன்ஸர்வேடிவ் கட்சியினர். அவர்களுக்கு முன்னணியில் பிரதமர் மாக்மில்லன் தமது மீசையை மெல்லத் தடவிவிட்டபடி அமர்ந்திருந்தார். ஏனோ அவர் முகம் சாதாரணமாகப் பார்ப்பதற்கே சோகத்தைப் பிரதிபலிப்பதாகத் தோன்றுகிறது. வளைந்து கீழிறங்கும் புருவங்கள், மேல் உதட்டின் அமைப்பை முற்றிலும் மறைத்துவிடும் மீசை, கண்களுக்குக் கீழேயுள்ள கருக்கல்கள், அகன்ற மூக்கு எல்லாமாகச் சேர்ந்து நமக்குள் காரணமில்லாமல் அவரிடம் அனுதாபம் பிறக்கச் செய்கின்றன!

கேள்விகளை ஏற்கனவே எழுதிக் கொடுத்து அவை அச்சாகியும் விடுவதால் அவற்றை அங்கே மீண்டும் கேட்டு நேரத்தை வீணாக்குவதில்லை. சபாநாயகர் வரிசைக்கிரமப்படி அனுமதியளிக்கும் போது அங்கத்தினர் எழுந்து நின்று கேள்வி எண்ணையும் அதற்குப் பொறுப்பேற்க வேண்டிய மந்திரியையும் குறிப்பிட்டு விட்டு அமர்கிறார். பின்னர் மந்திரியின் பதில் கிடைக்கிறது.



மக்கள் சபையில் யாரேனும் மெத்தப் படித்தவராகத் தம்மைப் பாவித்துக் கொண்டு நடம்படப் பேச முற்பட்டால் அவர் பரிகாசத்துக்குள்ளாவார். சொற்பொழிவை முன் கூட்டியே அழகுற எழுதிவைத்துப் படிப்பது என்பது இடையிலே கிடையாது. அது பிரபுக்கள் சபை அல்ல, (சாதாரணமான பொது) 'மக்கள் சபை' என்பதை யாருமே மறப்பதில்லை. அங்கத்தினர்கள் சபைக்குள்ளே ஒருவரையொருவர் பெயர் சொல்லி அழைப்பதில்லை என்பது ஒரு சம்பிரதாயம். அவர் வகிக்கும் பதவியையோ அல்லது அவரைத் தேர்ந்தெடுத்த மக்கள் வாழும் தொகுதியையோ குறிப்பிட்டுத்தான் விளிக்கிறார்கள்.

தர்க்கங்கள், வாதப் பிரதிவாதங்கள் எல்லாம் காரசாரமாக ஆனால் கண்யமான முறையிலே நடைபெறுகின்றன. கிண்டலும் ஹாஸ்ய ரசமும் கும்மியிட்டு விவாதங்களுக்கு உயிரூட்டிச் சோபிக்கச் செய்கின்றன. அவ்வப்போது பிரதமரும் எழுந்து சில விஷயங்களைச் சுருக்கச் சொல்லி விளங்க வைத்தார். இத்தனைக்குமிடையில் பதவியிலிருப்பவர் எதிர்த்தரப்பினரிடம் காட்டிய மதிப்பும் மரியாதையும்தான் என்னை வெகுவாகக் கவர்ந்தன. எதையுமே அற்ப விஷயம் எனக்கருதி அலட்சியப்படுத்தாமல் மிக முக்கியமானதாக ஏற்றுக்கொண்டு, பலமாக மறுத்தார்கள், ஆவன செய்வதாக ஒப்புக் கொண்டார்கள், அல்லது கவனிப்பதாக வாக்களித்தார்கள்.

ஜனநாயகத்துக்கு எதிர்க் கட்சி ஒன்றின் அவசியத்தை, இன்றியமையாத தன்மையை முற்றிலும் உணர்ந்தவர்கள் பிரிட்டிஷார் என்பதை நன்றாக நான் மனத்தில் பதிய வைத்துக் கொண்டேன். இல்லாமலா ஆளும் கட்சியினரை 'அரசிக்குச் சொந்தமான அரசாங்க'த்தை அமைக்க விட்டு அதே சமயத்தில் 'அரசிக்குச் சொந்தமான எதிர்ப்பை' வகுக்கும் கௌரவத்தையும் உரிமையையும் மாற்றுக் கட்சியினருக்கும் வழங்கியிருக்கிறார்கள்? (Her Majesty's Government and Her Majesty's Opposition) அது மட்டுமா? எதிர்க் கட்சித் தலைவரின் அரிய சேவைக்காகச் சர்க்காரிலேயே சம்பளம் வேறல்லவா தருகிறார்கள்! ஆட்சி பீடத்திலுள்ளோர் இழைக்கும் தவறுகளைத் தயங்காமல் எடுத்துக் கூறிக் கண்டிப்பதன் மூலம் தமது கடமையை ஒழுங்காக நிறைவேற்றும் அவருக்கு, வருஷத்துக்கு இரண்டாயிரம் பவுன்கள் (சுமார் இருபத்தாறாயிரம் ரூபாய்) ஊதியமாகக் கிடைக்கிறது.

"சுதந்திரமாக ஜனநாயக ரீதியிலே இயங்கும் நல்லதோர் அரசாங்கத்துக்கு அதன் சீரிய தன்மையை எடுத்துக் காட்டும் மிக முக்கியமானதோர் அறிகுறி என்ன?" என்று எந்த ஆங்கிலேயனைக் கேட்டுப் பார்த்தாலும் கிடைக்கும் ஒரே பதில் இதுதான்:

அந்த நாட்டிலே தகுதி வாய்ந்த திறமை மிக்க எதிர்க் கட்சி ஒன்று இருக்கிறதா? இருக்

கிறதென்றால் அங்கே உண்மையான ஜனநாயகம் நடைபெறுகிறதென்று நிச்சயமாக நம்பலாம்!

'அயர்லாந்திலே பாம்புகள்' என்ற தலைப்பின் கீழ் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதப் புகுந்தாரும் ஒருவன். ஒரே வரியில் நீண்ட நாட்களாகச் செய்த ஆராய்ச்சி முற்றுப் பெற்றுவிட்டதாம்.

"அயர்லாந்திலே பாம்புகளே இல்லை!"

அதே போலத்தான் இங்கிலாந்திலே அரசியல் நிர்ணயச் சட்டம் என்பதாக எடுத்துக் கொண்டால், அப்படி ஒன்றும் அங்கே கிடையவே கிடையாது என்று மிகச் சுலபமாகச் சொல்லிவிட்டுப் போய் விடலாம். ஆம், இந்தியாவில் உள்ளதுபோல் அங்கே அரசியல் நிர்ணயச் சட்டத்தை யாரும் எழுதிவைக்கவில்லை. சரித்திர காலம் தொட்டு இன்றுவரையில் வழி வழியாக வந்துள்ள சட்ட திட்டங்கள், வரையரைகள், கோட்பாடுகள் இவையே அவர்களுக்கு நேர்மையான பாதையில் இட்டுச் செல்லும் வழி காட்டியாக அமைகின்றன. குறிப்பிட்ட காலத்தில் ஒரு சில நபர்கள் நியாயம் எனக் கருதி நிர்ணயித்த சட்டங்களைக் காட்டிலும் பல்லாண்டு பல்லாண்டுகளாக வந்துள்ள ஒழுங்குமுறைகள் சாலச்சிறந்தவை எனக் கருதுபவர்கள் பிரிட்டிஷார். அவற்றுக்கு மதிப்புக் கொடுத்து அந்தச் சம்பிரதாய ஒழுக்கங்களிலின்றும் பிறழாமல் நடக்கிறார்கள்.



அசைக்க முடியாத அரசியல் நிர்ணயச் சட்டம் என்பதாக ஒன்றை ஒப்புக்கு வகுத்து விட்டுப் பின்னர் ஆட்சி பீடத்திலுள்ளோர் பாராளுமன்றத்தில் தங்களுக்குள்ள பெரும்பான்மை பலத்தைக் கொண்டு அதனைத் தங்கள் இஷ்டப்படியெல்லாம் திரும்பத் திரும்ப மாற்றி அமைத்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும் காலம் காலமாக வழக்கத்தில் இருந்து வந்துள்ள நீதி முறைகளைக் கடைப்பிடித்து அவற்றினின்றும் வழுவாமல் நடந்து கொள்வது எவ்வளவோ மேலல்லவா?

தேர்தல்களில் மக்கள் காட்டும் உற்சாகம் சொல்லி முடியாது. தேர்தல் சமயத்தில் அதற்கென விடுமுறை நாட்கள் கிடையாது என்றாலும் கூட வோட்டுரிமையைப் பயன்படுத்தாதவர்களின் எண்ணிக்கை அங்கே மிக மிகக் குறைவு. லீவு கிடைத்த போதிலும் வீட்டில் படுத்துத் தூங்குகிறோமே நம்மில் பலர்; அதுபோல் அநேகமாக யாருமே அங்கு இல்லை என்று கூறி விடலாம்.

பண்டைக் காலத்தில் இங்கிலாந்தில் தேர்தல் முறைகளில் லஞ்சமும் ஊழலும் தாண்டவமாடின. 1830ம் வருஷம் லிவர்பூல் என்ற நகரத்தில் மட்டும் ஒவ்வொருவோட்டையும் சுமார் இருநூறு ரூபாய் முதல் ஆயிரத்து முந்நூறு ரூபாய் வரை விலை பேசி வாங்கினார்களாம். அப்படியானால் அந்த அங்கத்தினர் தமது பதவிக் காலத்தில் எந்தெந்த விதங்களிலெல்லாம் செல்வம் சேகரிக்க முற்பட்டிருப்பார்? நினைக்கவே நெஞ்சம் கூசுகிறதல்லவா? பழைய கதை என்ற அளவுக்கு ஆறுதல் பெறலாம். இந்த அநியாயங்களெல்லாம் நாளாவட்டத்தில் மறைந்து போயின. இருபத்து நான்கே வயது நிரம்பிய வில்லியம் பிட் பிரதம மந்திரியாக வந்தபோது சீர்திருத்த மசோதா கொணர்ந்தார் சட்ட சபையில். மசோதா அப்போது தோல்வியுற்ற போதிலும் பின்னால் லார்ட் கிரே, ஸ்டுவர்ட் மில் போன்றோரின் விடாமுயற்சியால் படிப்படியாகப் பல முன்னேற்றங்கள் உண்டாயின. தேர்தல் முறை எல்லா வகைகளிலும் சீர்ப்பட்டது.

இன்றைக்கு வாக்காளர்கள் தங்கள் தொகுதிக்கான மக்கள் சபை அங்கத்தினரை மட்டும் தேர்ந்தெடுக்கிறார்கள் என்பதில்லை. மறைமுகமாக எந்தக் கட்சி நம்மை ஆளப் போகிறது. யார் பிரதம மந்திரியாக விளங்குவார், எம்மாதிரியான கொள்கைகளைக் கடைப்பிடிப்பார்கள் என்பது போன்ற பல விஷயங்களையும்முடிவு கட்டுகிறார்கள். தேர்தலில் வெற்றி பெற்ற பெரும்பான்மையோர் குறுகிய காலத்துக்குத்தான் தங்களைப் பதவியிலிருக்க மக்கள் அனுமதித்திருக்கிறார்கள் என்பதை என்றுமே மறப்பதில்லை. எதிர்த் தரப்பினர் தங்கள் முக்கிய கடமையாகிய எதிர்ப்பைச் சரிவரச் செய்தபோதிலும், ஆட்சிப் பொறுப்பு ஏற்றுக் கொண்டிருப்பவர்களிடம் விசுவாசத்துடன் நடந்து கொள்கிறார்கள்.

அன்று மாலை பாதாள ரயிலில் வாட்டர்லூ வரை சென்று திரும்பிக் கொண்டிருந்தபோது இதையெல்லாம் பற்றி எண்ணி எண்ணிப் பிரிட்டிஷாருடைய அரசியல் பண்பில் ஈடுபாடும் ஓரளவுக்குப் பொறாமையும் கொண்டேன் நான். வழியில் ஏதோ ஒரு ஸ்டேஷனில் மின்சார ரயில் நின்றபோது அழகிய பெண் ஒருத்தி நானிருந்த அதே ரயில் பெட்டிக்குள் ஏறினாள். மரியாதைக்கு ஒரு மென்னகையை உதிர்த்து, எடுப்பான மேனியை எழில் பொங்க அசைத்து, அந்த அசைவிலே நல்லதொரு நறுமணத்தைப் பரவவிட்டவாறே வந்தமர்ந்தாள் என் பக்கத்தில். அப்போதுதான் வெளியாகியிருந்த மாலைப் பத்திரிகை ஒன்று அவள் கரத்தில் சுருண்டு கிடந்தது. அதைப் பிரித்துப் பார்க்க ஆரம்பித்தாள்.

எந்தச் செய்தியை அவள் அதிகமாக விரும்பிப் படிக்கிறாள் என்பதைத் தெரிந்து




கொள்ளும் ஆர்வம் உந்த மெள்ளத் தலையைச் சாய்த்து ஓரக் கண்களால் கவனித்தேன்.

அணு ஆயுத உற்பத்தி பற்றி பிரிட்டிஷ் தொழிற் கட்சியில் ஏற்பட்டிருந்த கருத்து வேற்றுமை, பிளவு குறித்து முன் பக்கத்தில் கொட்டை எழுத்துக்களில் தலைப்புப் போட்டிருந்தார்கள். அதை அந்த இளம் பெண் சட்டை செய்யவே இல்லை! அந்தப் பக்கத்தையே புரட்டிவிட்டாள். அடுத்து "இளவரசி மார்கரெட் கடைத் தெருவுக்குப் போகிறாள்" என்று ஒரு செய்தி வெளியாகியிருந்தது. கையிலிருந்து தொங்கிய சிறு தோல் பையைத் துழாவி ஒரு சாக்லேட்டைத் தேடி எடுத்து வாயிலிட்டுச் சுவைத்தவாறே அந்தப் பகுதியைச் சுவாரசியத்துடன் படிக்கத் தொடங்கினாள். இளவரசி அணிந்து பார்த்த நகைகள், வேண்டாம் என ஒதுக்கியவை, விரும்பி எடுத்துக் கொண்டவை எல்லாவற்றுக்கும் விவரமான ஜாபிதா கொடுத்திருந்தார் பத்திரிகை நிருபர்.

ரயில் நின்றது. மீண்டும் அதே புன்முறுவல், மெல்லிய சென்ட் மணம். — கையோடு கொணர்ந்த பத்திரிகையை அங்கேயே அலட்சியமாய்ப் போட்டு விட்டுப் போய்விட்டாள்.

அடித்துப் பிடித்துக்கொண்டு ஒரு கும்பல் உள்ளே புகுந்தது. யுவதி விட்டுச் சென்ற 'பேப்ப'ரைக் கையிலெடுத்துக் கொண்டு என் அருகே அமர்ந்தவன் ஒரு வாலிபன். கருகருவென்ற மீசையுடன் ஹாலிவுட் நட்சத்திரம் டோனி கர்டிஸ் பாணியில் கேச அலங்காரமும் செய்து கொண்டிருந்த அவன் வாயில் போட்ட 'சூயிங்-கம்'மைக் கடித்து மென்றபடியே பத்திரிகையில் கண்ணோட்டம் செலுத்தினான். மனைவி வேறொருவனிடம் காதல் கொள்ள, புருஷன் ஆத்திரமடைந்து வாத்து வேட்டையாடவென்று அந்தக் காதலனை வஞ்சகமாக அழைத்துப் போய்ச் சுட்டுக் கொன்றுவிட்டான் என்பதாக ஒரு வழக்கு. வரி விடாமல் ஒரே மூச்சில் வழக்கு விவரங்களைப் படித்து முடித்தான் இளைஞன். சினிமாக்கள் நிறைந்த 'லெஸ்டர் ஸ்குவார்' என்னுமிடத்தில் ரயிலிலிருந்து இறங்கிச் சென்று விட்டான்.

மூன்றாவதாக அதே ஆசனத்தில் உட்கார்ந்தவரைக் கிழவர் என மதிக்க முடியா விட்டாலும் வழுக்கை விழுந்திருப்பதையும், உள்ள சிறிதளவு கேசமும் நரைத்திருப்பதையும் கவனித்தேன்.

சிகரெட்டைப் பற்ற வைத்துப் புகையைக் கக்கியபடியே கடைசிப் பக்கத்தில் காணப்பட்ட பகுத்தறிவுப் போட்டியின் விடுவிப்பதில் மூழ்ந்தார்.

எனக்கு ரொம்பவும் ஏமாற்றமாக இருந்தது. முற்பகலில் நான் பார்த்தும் கேட்டும் உணர்ந்தும் உருவாக்கிக் கொண்ட அபிப்பிராயங்களையெல்லாம் மாற்றிக் கொள்ள வேண்டியதுதானா?

பக்கத்திலிருந்தவரிடம் பணிவாகப் பேச்சுக் கொடுத்தேன். என் மன வேதனையை வெளியிட்டு விளக்கம் கோரினேன்.

சிகரெட்டின் சிவந்த நுனியைச் சில விநாடிகள் உற்று நோக்கிச் சிந்தனையில் ஈடுபட்டார் அவர். பின்னர் கூறினார்: "உங்கள் சந்தேகம் எனக்குப் புரிகிறது. பெரும்பாலான பத்திரிகைகளில் அரசியலே இடம் பெறுவதில்லை. வெறும் வம்புச் சாவடியாக விளங்குகின்றன என்பதைக் கண்டு நீங்கள் வெகுவாக ஏமாற்றம் அடைந்திருப்பீர்கள். ஆனால் இந்த வெளித் தோற்றங்களைக் கண்டு நீங்கள் பிரிட்டிஷாரைத் தவறாக எடை போட்டு விடக் கூடாது. அரசியல் அறிவைப் பத்திரிகைகளும் ரேடியோ டெலிவிஷன் போன்ற வேறு பல சாதனங்களும் புகட்டக் கூடியன என்பது உண்மைதான். ஆனால் இவையெல்லாமோ அல்லது தலைவர்களுடைய மேடைப் பிரசங்கங்களோதான் ஆங்கிலேயர்களுக்குப் பாராளுமன்றத்தில் உள்ள பற்றுதலுக்கும் ஜனநாயகத்திலுள்ள பக்திக்கும் காரணம் என்று உள்ளபடியே நம்புகிறீர்களா? இவையெல்லாம் அதற்கு உதவலாம், துணை செய்யலாம். ஆனால் அடிப்படையில் இயங்குவது வேறொன்று. அது வாழையடி வாழையாக ஒவ்வோர் ஆங்கிலேயனுடைய குருதியிலும் குதித்தோடும் சுதந்திர உணர்ச்சி."

நான் பிரமித்துப் போனேன். தனி மனிதன் சுதந்திரத்தைப் பாதுகாப்பது ஏதோ சில சட்ட திட்டங்கள் மட்டுமல்ல; அது பெருமளவுக்கு மக்களுடைய மனப்பான்மையைப் பொறுத்த விஷயம் என்ற படிப்பினையைப் பெற்றேன்.

இந்தப் பிரமிப்பிலிருந்து மீள்வதற்குள் நான் இறங்கவேண்டிய ரஸ்ஸல் ஸ்குவார் ஸ்டேஷனைத் தாண்டி ரயில் வெகு தூரம் சென்று விட்டது!



அப்படியே எடுத்துக் கொள்ளுகிறுர்கள் என சிறுவர்கள் மீது குறைகூற முடியாது...

சிறுவர்கள் தூங்கும் சமயத்தில் பெரியவர்கள் ருசிப்பதையும் குறைகூற முடியாது

நீங்கள் யாரையாவது குறைகூற விரும்பினுல், எங்களைத்தான் குறைகூற வேண்டும். ஏனெனில் அடக்க முடியாத ஆவலைத் தூண்டுவது ருசி மிகுந்த நியூட்ரைன்...




மிட்டாய்கள்



நியூட்ரைன் கன்பெக்ஷனரி கம்பெனி
பிரைவேட் லிமிடெட்
சித்தூர் (ஆந்திர பிரதேசம்)

NC 60

---

ஈறுகளை உறுதியுடனும்
பற்களை ஆரோக்கியத்துடனும்
சுவாசத்தை நறுமணத்துடனும்

**இருக்கும்படி பார்த்துக்கொள்ளுங்கள்**

பளிச்சென்று ஒளிவீசும் வெண்மையும்
ஆரோக்கியமுமான பல் வரிசைகளை
அடைய வேண்டுமானுல்

# போர்ஹான்ஸ்

பற்பசையை உபயோகியுங்கள்




ஈறுகளின் உறுதிக்காக என்றே டாக்டர் ஆர். ஜே. போர்ஹானஸ் கண்டுபிடித்து அளிக்கும் விசேஷத் துவர்ப்புப் பொருள் கலந்துள்ள பற்பசை இது ஒன்றுதான்.

Geoffrey Manners & Co. Ltd.

TAM. 8.27

# மறைந்த கடிதம்

## ஆர். கே. நாராயணன்

தபால்கார தாணப்பா தபால் பட்டுவாடா செய்ய வேண்டிய இடங்கள் விநாயக முதலித் தெருவும் அதற்கு இணையாகவுள்ள நாலு சாலைகளும்தான். என்றாலும் அவன் தன் 'ரவுண்ட்'டை முடித்துக் கொண்டு சந்தைச் சாலையிலுள்ள தலைமை ஆபீசுக்குக் கணக்குக் கொடுக்கத் திரும்புவதற்குச் சுமார் ஆறு மணி பிடிக்கும். காரணம், தான் கடிதம் எடுத்துப் போகிறவர்களுடைய வாழ்வு தாழ்வுகளிலெல்லாமே அவனும் கலந்து போனதுதான். எத்தனை எத்தனையோ ஆண்டுகளாக, அந்தக் கபீர்த் தெருவின் பதின்மூன்றும் நம்பர் வீட்டுக்காரர் ஒரு கடிதத்துக்காகப் பாதி வழி வரை அவனை எதிர்கொண்டு வருகிறார். அவர் இளைஞராக இருந்த நாள் முதற்கொண்டு தாணப்பா அவரைப் பார்த்து வருகிறான். அந்தத் திண்ணையிலேயே அவரது இளமை சாய்ந்து, தலை நரை கண்டதையும் கண்டிருக்கிறான். ஆசை மட்டும் நரைக்காமல் இன்னமும் அவர் குறுக்கெழுத்துப் போட்டிப் பரிசை எதிர்பார்த்துத்தான் வருகிறார். தாணப்பா அவரிடம் தினமும் " இன்னிக்கும் ஏதும் இல்லீங்கோ " என்ற அதே அறிவிப்பைத்தான் செய்கிறான். என்றாலும் கூடவே " அதுக்காக மனசை விட்டுடாதீங்கோ " என்றும் ஆறுதலளிப்பான்.

" இந்த மாசம் என்னவோ உங்க வட்டி தவக்கப்பட்டுடுத்துங்க" என்பான் ஒருவரிடம்.

" சின்ன ஐயா ஐதராபாத்திலிருந்து மறுபடியும் எழுதியிருக்காரம்மா ; ஏம்மா, சின்ன ஐயாவுக்கு இப்போ எத்தனை பசங்க?" என்று இன்னொருத்தியிடம் விசாரணை.

" நீங்க பட்டணத்திலே வேலைக்கு மனுப் போட்டிருக்கீங்கன்னு தெரியவே தெரியாதே. பாத்தீங்களா ? எனக்குச் சொல்லணும்னு கூட அக்கறை இல்லே. போயிட்டுப் போகுது. ஆறு நான் 'ஆர்டர்' கொண்டு வரேன், பாருங்க, அப்ப மட்டும் தேங்காய் பாயஸம் வெச்சு ஊத்தணும்."

இப்படியே ஒவ்வோர் இடத்திலும் அரை மணியாவது நின்று பேசுவான் தாணப்பா. அதுவும் மணியார்டர் என்று வந்து விட்டால் போதும் : அந்தத் தொகையின் ஒவ்வொரு ரூபாயும் எங்கே, எப்படிப் போகிறதென்று ஒரு 'கோடி' தெரிந்து கொள்ளும் வரையில் இடத்தை விட்டு அசைய மாட்டான் ; தபால் கட்டுக்களையும், பைகளையும் பரப்பிக்கொண்டு அமர்ந்து விடுவான். வெயில் கடுமையாக இருந்தால் ஒரு தம்ளர் நீர் மோர் கேட்டு வாங்கி நிம்மதியாகத் தாக சாந்தி செய்து கொள்வான். எல்லோருக்கும் அவனைப் பிடிக்கும். அவர்களுடைய வாழ்க்கை, ஆசை, அபிலாஷை, காரியங்கள் எல்லாவற்றிலும் அவனும் ஓர் அங்கமாகவே ஆகி விட்டான். விநாயக முதலித் தெருவின் பத்தாம் நம்பர் வீட்டுக்குரியவர்களிடம்தான் அவனுக்கு மிக மிக நெருக்கமான தொடர்பு. வீட்டுத் தலைவர் ராமானுஜம் ரெவின்யூ டிவிஷன் ஆபீஸில் சீனியர் கிளார்க். ஒரு தலைமுறை காலமாக- அதற்கும் அதிகமாகவே இருக்கும்- தாணப்பா அவருக்குத் தபால் எடுத்துச் செல்கிறான். முதன் முதலில் அவருடன் அவன் தொடர்பு கொண்டுதான் எத்தனை ஆண்டுகளாகி விட்டன ? அப்போது ராமானுஜத்தின் சம்சாரம் கிராமத்துக்குப் போயிருந்தாள்.

ஒரு நாள் ராமானுஜத்துக்கு ஒரு கார்டு வந்தது. ஆபீஸ் மேஜையில் தபால்களை விலாச வாரியாகப் பிரிக்கும் போதே தாணப்பா அதில் கண்ணோட்டம் விட்டான். அப்படித்தான் அவன் வழக்கம். 'பீட்' ஸெம்பியுடன்எடுத்த எடுப்பிலேயே விநாயக முதலித் தெரு, பத்தாம் நம்பருக்குத்தான் விரைந்தான்-அந்த மார்க்கத்திலுள்ள நூற்றைம்பது வீடுகளையும் தாண்டிக் கொண்டு. நேராக ராமானுஜத்தின் வீட்டை அடைந்தவன் " தபால் சார், தபால் " என்று கூவியபடி கதவை இடித்தான். ராமானுஜமும் கதவைத் திறந்து கொண்டு வெளிப்பட்டார். " கார்டை வாங்கிக்கறதுக்கு முந்தி கொண்டாங்கய்யா பிடி சர்க்கரை. அதிர்ஷ்டசாலி, அப்பாவாயிட்டீங்க! எம்மாம் வேண்டுதலை செஞ்சுக்கிட்டீங்க ?... ம். பெண் பிள்ளையாச்சேன்னு முனகாதீங்க. பொம்பளைப் பசங்க ஆண்டவனே போடற பிச்சையாச்சே. உங்களுக்குத் தெரியாதுங்களா ? காமாச்சி ! என்ன அழகான பேரு !" என்று மகிழ்ந்து போனான் தாணப்பா.

" காமாச்சி" என்று அவளை அவன் கூப்பிட்டான். இதற்கிடையில் எத்தனையோ ஆண்டுகளாகி விட்டன. காமாட்சி இப்போது வெடவெட வென்று உயர்ந்து வளர்ந்து விட்ட நங்கை. நாணிச் சிவக்கும் காமாட்சியிடம் தாணப்பா சொன்னான் : " காமாச்சி, போட்டோப் படம் தயார் பண்ணிக்க ! அட, என்னம்மா இப்படியொரு வெக்கம் ? இதோ உன் தாத்தா போட்டோ கேட்டுக் கார்டு போட்டிருக்காரே ! தாத்தா எதுக்குப் போட்டோ கேக்கணும், ..... அதுக்காக இல்லாட்டி ?"

ராமானுஜத்திடமே கூடக் கேட்டான். " கிழவனாரு இப்ப எல்லாம் அடிக்கடி எழுதறாரு இல்லே ?" என்று. 'அடிக்கடி' வரும் அந்தக் கடிதங்களில் ஒன்றைச் சேர்ப்பித்து, அதைப் படித்து முடிக்கும் வரையில் காத்திருந்தான். ஏனோ ராமானுஜத்தின் முகத்தில் கவலையின் ரேகை படர்ந்தது. " நல்ல

சமாசாரம் தானுங்களே?'' என்று கேட்டபடி வராந்தாத் தூணிலேயே நன்றாகச் சாய்ந்து கொண்டு விட்டான் தாணப்பா — இன்னும் பட்டுவாடா செய்யவேண்டிய கத்தைக் கடிதங்களைக் கையின் கீழ் அடக்கிக் கொண்டு.

"குழந்தைக்கு வரன் தேடறதிலே நான் அவ்வளவு முஸ்தீபா இல்லேன்னு மாமனார் நெனக்கிறார். அவரும் ஓரிரண்டு இடத்திலே பார்த்திருக்கார்; சரிப்படல்லே. நான் ரொம்ப அசிரத்தையாயிருக்கேன்னு அவருக்கு அபிப்பிராயம்'' என்றார் ராமானுஜம்.

"வயசானவங்க அப்படித்தான் இருந்துப் போட்டுக்கிட்டுக் கவலைப்படுவாங்க சாமீ'' என்றான் தாணப்பா.

"இதில் உபத்திரவம் இதுதான்: குழந்தை கல்யாணத்துக்காக அவர் ஐயாயிரம் ரூபாய் ஒதுக்கி வெச்சிருக்கார். அதனாலே, இந்த க்ஷணமே ஒரு வரனைப் பாருடான்னு தொணதொணக்கிறார். பணம் ஒண்ணு இருந்தா எல்லாம் ஆயிடுத்தா?''

"அதெப்படிங்க!'' என்று அவர் கருத்தை எதிரொலித்தான் தாணப்பா. 'அததுக்கும் ஒரு காலம் வர்றத்துக்கு முந்தி யாரு என்ன தலைகீழ நின்னாலும்....'' என்று இழுத்தான்.

ஒரு நாளை அடுத்து இன்னொன்றாக, மாதக் கணக்கில், தாணப்பா கடிதங்களைக் கொடுத்து வந்தான்; ராமானுஜத்திடமிருந்து செய்தி அறியக் காத்து வந்தான்.

ராமானுஜமும் இந்த ரீதியில் பதில் சொல்வார். 'பழைய சமாசாரமேதான் தாணப்பா!' 'ஜாதகம் பொருந்தவில்லையாம்' 'அவா அளவுக்கு மீறிக் கையில் கேட்கிறா' 'பெண் பிடிக்கவில்லை போலிருக்கு...'

"பெண் பிடிக்கவில்லையா? மகராசி மாதிரி முக





ராசிக்க கொளந்தைக்கு. கண்ணு முழுப் பொட்டையா இருந்தாலொழிய ...'' என்று ஆத்திரத்தில் இரைவான் தாணப்பா.

அந்த ஆண்டின் கல்யாணப் பருவம் முடிகிற தறுவாய். இன்னும் மூன்றே முகூர்த்தங்கள் தாம் இருக்கின்றன. மே இருபதாம் தேதி கடைசி முகூர்த்தம். காமாக்ஷிக்கோ சில நாட்களில் பதினேழாவது பிராயம் பிறக்கிறது. தாத்தாவிடமிருந்து வரும் 'நினைவூட்டி'களானாலும் நாளுக்கு நாள் உக்கிரமாகி வருகின்றன. ராமானுஜம் தலையால் தண்ணீர் குடித்துப் பார்த்து விட்டார்; எல்லா இடங்களிலிருந்தும் வெற்றுச் சீட்டுதான் கிடைத்தது. நம்பிக்கை தேய்ந்து போய்ப் பரிதாபமாகக் காணப்பட்டார் அவர்.

"தாணப்பா, எனக்கு மாப்பிள்ளை என்று ஒருவன் பிறக்கவேயில்லை போலிருக்கு'' என்றார் துயரத்துடன்.

"அவ வாக்கு சொல்லாதீங்கோ சாமி" என்றான் தாணப்பா. "ஆண்டவன் எப்ப மனசு வெக்கறாரோ...?" என்று தொடங்கியவர் சிந்தனையில் ஆழ்ந்தான். பிறகு சொன்னான்: "டில்லியிலே ஒரு பையன் இருக்கான். இருநூறு ரூவா சம்பாதிக்கிறானுங்க. நம்ம சந்நிதித்தெரு முகுந்தய்யருகூட அந்த இடத்தைப் பாத்தாருங்க. முகுந்தய்யரும் உங்களவர் தானுங்களே?"

"ஆமாம்."

"அவங்க மாசக்கணக்கா பேச்சு வார்த்தை நடத்திட்டிருக்காங்க. இது மட்டும் நூறு கடிதாசாவது அவங்களுக்குள்ளே பட்டுவாடா ஆயிருக்கும்....ஆனா, இப்போ சம்பந்தம் முறிஞ்சு போச்சுன்னு நிச்சயமாத் தெரியுதுங்க...எல்லாம் பணத் தகராறுதான்... அவங்க கடைசியா கார்டிலே பதிலைத் தெரிவிச்சது இவங்க கோபத்தைக் கிண்டி விட்டுடுத்துங்க. ஏங்க, அப்படியென்ன,



போஸ்ட் கார்டு அவமானப்படுத்தற ஆயுதமா என்ன? பெரிய பெரிய விஷயமெல்லாம் எழுதின எத்தனையோ போஸ்ட் கார்ட்-படம் போட்ட கார்டுங்ககூட - நான் பாத்திருக்கேன். ரெண்டு வருசம் முந்தி ராஜப்பா அமெரிக்கா போயிருக்கச்சே பசங்களுக்கு வாரா வாரம் இந்தமாதிரி படம் போட்ட கார்டிலே தான் எழுதுவாருங்க."

பேச்சை எங்கோ விட்டுவிட்ட தாணப்பா மீண்டும் விஷயத்துக்கு வந்தான்: "முகுந்தய்யரை நான் ஜாதகம் கேட்டுப் பாக்கிறேன். அப்புறம் பாப்போமே!" என்றான்.

மறுநாளே ஜாதகத்தையும் வாங்கிக் கொண்டு வந்தான்.

"பையனுடைய அப்பா-அம்மாவும் டில்லியில்தான் இருக்காங்களாம். அப்ப, நீங்க அவங்களுக்கே ஜாதகம் எழுதலாமுங்களே. காலம் கடத்தப்படாதுங்க" என்றான்.

ராமானுஜத்தின் குடும்பத்தில் நம்பிக்கைக் கதிர் ஒன்று பாய்ந்தது.

ஒரு நாள் தாணப்பா, "இன்னும் நூறு லெட்டர் பட்டுவாடா பண்ணணுமுங்க. ஆனா, இந்த டில்லி முத்திரையைப் பாத்தேனா, நேரா இங்கே வந்துட்டேன்" என்று கூறி ஒரு கடிதத்தைக் கொடுத்தான். ராமானுஜம் படித்து முடிக்கும் வரையில் ஆவலில் தவித்தான். "எம்மாம் சுருக்கப் பதில் எழுதிட்டாங்க! போட்டோப் படம் புடிக்கத்தான் போயிருக்கணும். ம், யாருக்குத்தான் புடிக்காமப் போகும்?" என்றான். "தினமும் ஒரு கடிதாக போடறுங்களே! சரி, காமாட்சி கலியாணம் முடியற மட்டும் லீவு போட வேணும்" என்றான் தாணப்பா ஒரு நாள்.

"என்னவோ இப்பவே எல்லாம் முடிஞ்சுட்ட மாதிரி பேசறியே. இன்னும் எத்தனை தடையெல்லாம் தாண்டியாகணுமோ? கடவுளுக்குத்தான் தெரியும். போட்டோ பிடிச்சுவிட்டதுன்னு கலியாணத்துக்கே சம்மதிச்சதாகி விடுமா?" என்றார் ராமானுஜம்.

அந்த வீட்டில் அதையடுத்து எல்லோரும் ஒரு முக்கிய விஷயமாக ஆலோசனை செய்தார்கள்: அதாவது ஒரு நாளைக்காக டில்லியிலிருந்து சென்னை வர ஒத்துக் கொண்டுள்ள பிள்ளை வீட்டாருக்குப் பெண்ணைக் காட்டுவதற்காக, ராமானுஜம் காமாட்சியைச் சென்னை அழைத்துச் செல்ல வேண்டுமா என்பதுபற்றி. கருத்துக்கள் மாறுபட்டன. ராமானுஜம்,

# * எல்லோராலும் புகழப்படுவது

TRAYONS

"டிரெயான்ஸ்" ரேயான் நூல்களினால் செய்த ஆடைகள் எல்லோராலும் புகழப்படுகிறது.

இந்தியாவில் முதல் முதலாக சிறந்த ரசாயன முறையில் தயாரிக்கப்பட்ட உன்னத நூல் "டிரெயான்ஸ்" ரேயான் நூல்கள். விலை மலிவு-நீண்ட கால உழைப்பு-பகட்டான உடைகளுக்கு ஏற்றது.

"டிரெயான்ஸ்" ரேயான் நூல்கள் 100, 120, 150, 300 டினையர்களில் தயாரிக்கப்படுகின்றன.

*



Rt

ஸ்டாக்கிஸ்டுகள்

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்

போன்: 21641. 61, செம்புதாஸ் தெரு, சென்னை-1. தந்தி: "CELYARN"

கிளைகள்:

போன்: 253. தந்தி: "CELYARN" 68/416, மெயின் ரோடு, செவ்வாய்பேட்டை, சேலம்.

போன்: 598. தந்தி: "CELYARN" 114/A, தெற்கு மாசி வீதி, மதுரை.

போன்: 3441. தந்தி: "RAYONS" யுனைடெட் இந்தியா பில்டிங் அவினாசி ரோடு, கோவை.

அவரது அன்னை, மனைவி யாருக்குமே இறுதி யான ஓர் அபிப்பிராயம் இருக்கவில்லை. என்றாலும் ஒருவரை யொருவர் ஆக்ரோஷ மாக எதிர்த்துக் கொண்டார்கள்.

"ஊரே நம்மைப் பார்த்துச் சிரிக்கும்" என்றாள் ராமானுஜத்தின் மனைவி. "பெண்ணை ஊர் ஊராக அழைச்சிண்டு போறதாமே!"

"என்ன விசித்திர எண்ணங்களோ! இந்த மாதிரி அர்த்தமில்லாத பத்தாம் பசலிக் கட்டுத் திட்டமெல்லாம் பார்த்துண்டிருந் தால், நாம் ஒரு நாளும் கல்யாணம்ங்கிற பக்கமே தலைவைக்கப் படுக்க முடியாது. அவசியமானால், குழந்தையை டில்லிக்கேகூடத் தான் அழைச்சுண்டு போய்க் காட்டணும். அது நம்ப கடமை" என்றார் ராமானுஜம்.

"அப்ப 'குஷாலா' அப்படியே பண்ணுங்க ளேன்; உங்க மனம் போனபடிதான் நீங்க செய்ய முடியும். அப்புறம் என்னை ஏன் கேட்கணுமாம்?" என்றாள் அவர் மனைவி.

கோப தாபங்கள் முற்றின. விஷயத்தில் முன்னேற்றம் காண்பது சாத்தியமாகவே தோன்றவில்லை. காலமா, ஓடுகிறது!

தபால்கார தாணப்பாவும் விடாமல் தினந் தோறும் அந்த வீட்டு 'ஆலோசனை அவை'யில் கலந்து கொண்டு வந்தான். "நான் மூணாம் மனுசன். அதனாலே நான் சொல்றதைக் கேளுங்க. இப்பவே பட்டணத்து வண்டியைப் பிடியுங்க. வருஷக்கணக்கா எழுதி எழுதிச் செய்யாததை ஒரு மணி நேரிலே பார்த்துப் பேசியே முடிச்சுடலாம். ஆமாம்" என்றான்.

"அம்மா, பட்டணத்திலேயிருந்து லெட் டர் வந்திருக்கு. நம்ம ஐயாதான் எழுதி யிருக்கணும். என்னங்க சமாசாரம்?" என் றான் தாணப்பா, ராமானுஜத்தின் மனைவி யிடம் அன்று அந்தக் கவரைக் கொடுத்தபின். அவள் கடிதத்தோடு உள்ளே சென்றாள்.

தாணப்பாவும் அன்று வந்திருந்த ரிஜிஸ்தர் தபால்களைப் பட்டுவாடா செய்து விட்டுத் திரும்புவதாகக் கூறி, அவ்வாறே மீண்டும் வந்து சேர்ந்தான். "கலந்து பேசிட்டாங் களாமா?" என்று ஆதுரத்துடன் கேட்டான்.

"உம், 'பெண் பாத்தாச்சு, அவா பேச்சி லேருந்து பிடிச்சிருக்கற மாதிரிதான் தெரிய றது'ன்னு காமாக்ஷி அப்பா எழுதியிருக்கார்."

"என்ன சந்தோஷ சமாசாரமுங்க? இன் னிக்கு ராவே பிள்ளையாருக்குத் தேங்கா உடைக்கப் போறேனுங்க" என்று ஆர்ப் பரித்த தாணப்பாவை இடைமறித்தாள் ஸ்ரீமதி ராமானுஜம்:

"ஆனாலும் இன்னொரு சிரமம் இருக்கு. அடுத்த தையில் செய்யலாம்னு இருந்தோம். இப்போ ஏற்பாடு எல்லாம் பண்ணி, கையோடு செய்யறது ரொம்பச் சிரம சாத்தியமா யிருக்கும். அவாளானா கல்யாணம் இந்த மே இருபதாந் தேதியே மூகூர்த்தம் வெச்சுட ணும்னு சொல்றாளாம். தள்ளிப் போடற துன்னா அப்புறம் மூணு வருஷத்துக்கு வெச் சுக்கறதுக்கு இல்லையாம். ஏன்னா பிள்ளை யாண்டானை ஏதோ 'ட்ரெயினிங்'குக்காக அயல் நாட்டுக்கு அனுப்பறாளாம்" என்றாள் பாதி சந்தோஷமும் பாதி கவலையுமாக.

"சொன்ன வார்த்தை தப்பாத மவ ராசருதான் இளைவரு" என்றான் அன்று இன்ஷூரன்ஸ் கவரை ராமானுஜத்திடம் அளித்த தாணப்பா. "முழுப் பணமும் அனுப்பிச்சிருக்காரு. இனிமே நீங்க பணம் சாலலேன்னு குறைப்பட்டுக்க முடியாது. காரியத்தை ஓட்டுங்க....இளைவருக்கு இந்தச் சம்பந்தம் புடிச்சிருக்கறதுலே எனக்கு எவ் வளவு சந்தோசம் தெரியுமா? அவரு பணமே பெரிசில்லே. ஆசீர்வாதம் தானுங்க நமக்கு வேண்டியது. அவரு மனசு குளிர்ந்து ஆசீர் வாதம் பண்ணியிருக்காருங்களா?" என்றான்.

"ஓ....பேஷா!" என்றார் ராமானுஜம்.

"இந்த இடம் குதிர்ந்ததுலே மாமனுக்கு ரொம்பத் திருப்தின்னு தெரியறது."

ஆயிரம் ரூபாய் கல்யாணம் என்பது மால்குடிக்குப் பெரிய விஷயம். மிகக் குறுகிய காலத்தில், சகலமான ஏற்பாடுகளையும் ஒண்டி யாகக் கவனிக்க வேண்டியிருந்ததால் ராமா னுஜம் மலைத்து மலைத்து நின்றார். தன்னால் முடிந்த மட்டில், ஓய்வு நேரம் முழுவதையும் அவருக்கு உதவி அளிப்பதிலேயே செலவிட் டான் தாணப்பா. மற்ற வீடுகளில் சொல்மாரி பொழிவதையும், உபதேசங்கள் நல்குவதை யும் கருத்துப் பரிவர்த்தனை செய்து கொள் வதையும் கணிசமாகக் குறைத்துக் கொண் டான். இப்போதெல்லாம் அந்த வீடுகளில் கடிதத்தை யார் கையிலும் கொடுக்க வேண்டு மெனக் காத்திருப்பதில்லை. ஜன்னல் வழி யாகவோ, திறந்த கதவு மூலமோ கடிதத்தை விட்டெறிந்து விட்டு "சார் போஸ்ட்" என்று பெருங்குரல் எழுப்புவதோடு சரி. "என்னப்பா சமாசாரம்? பறக்கிறாய்கிடந்து?" என்று யாரேனும் கேட்டால், "தயவு செஞ்சு மே இருபதாம் தேதி வரை என்னை விட்டு டுங்க. அப்புறம் உங்க வீட்டிலேயே வந்து பழியாக் கிடக்கிறேன்" என்பான்.

ராமானுஜம் நிலையற்றுத் துடித்தார். முகூர்த்த நாள் நெருங்க நெருங்கக் கவலை அவரைப் பிடுங்கித் தின்றது. "எல்லாம் நல்லபடி நடந்தாகணுமே! இடைஞ்சல் ஏதும் ஏற்படாதிருக்க வேணுமே" என்றார்.

"கவலையே படாதீங்க சாமி! சாமி புண்ணி யத்திலே பரமாதமா முடிஞ்சு போகுமுங்க. அவங்க கேட்டதை எல்லாம்—பணமாயும், பொருளாயும்,—அப்படி அப்படி கொடுத் திட்டீங்க. நல்லபடியாயும் நடந்துக்கிறீங்க. அவங்களும் பெரிய மனுசங்க."

"அதைப் பத்தியே ஒண்ணுமில்லேயப்பா. இந்த வருஷத்திலேயே இதுதான் கடைசி முகூர்த்தம். அல்ப காரணத்தில் தடங்கல் எதுவும் வந்து விட்டால், அப்புறம் இந்தச் சமாசாரமே பைசலாகி விடும். பையன் மூணு வருஷத்துக்கு வெளியிலே போயிடுறான். அவ்வளவு காலம் கட்டுப்பட்டிருக்கிறதாக - நாமும் சரி, பிள்ளை வீட்டுக்காராளும் சரி - சொல்றது சாத்தியமாயிருக்காதென்னு பார்க்கிறேன்" என்றார் ராமானுஜம்.

கல்யாண தினம். முகூர்த்தம் நடைபெற்று நாலு மணியாகிவிட்டது. எல்லோரையும் ஒரு நிம்மதி ஆட்கொண்டிருந்தது. டில்லியிலிருந்து வந்திருந்த அந்தத் துடிப்பான மாப்பிள்ளை—புது மாப்பிள்ளை—பந்தலில் ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தார். சந்தனம், புஷ்பம், ஹோமப் புகை இவற்றின் நறுமணம் காற்றிலே தவழ்ந்து கொண்டிருந்தது. மாப்பிள்ளையைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு பலர் அரட்டை அடித்துக் கொண்டிருந்தனர். கனமையான ஒரு தபால் கட்டோடு தாணப்பா வாசலில் தென்பட்டதும் சில சிறுவர்கள் அவனிடம் போய் "தபாலா?" என்று கையை நீட்டினார்கள். "தள்ளிப் போங்கள். யாரிடம் தருவதென்று எனக்குத் தெரியும்" என்றான் தாணப்பா. நேராக மாப்பிள்ளையிடம் சென்றான். கத்தைக் கடிதங்களை அவரிடம் அடக்க ஒடுக்கமாக நீட்டினான். "நல்லதை நினைக்கறவங்க எத்தனையோ பேர் ஆசிர்வாதம் அனுப்பிச்சிருக்காங்க. இல்லீங்களா? அது ஒவ்வொண்ணையும் என்னதையும் சேர்த்துச் சேர்த்துத் தரேனுங்க" என்றான். இந்தப் பணி புரிவதில் அவனுக்குக்கட்டுக் கொள்ளாத பெருமிதம். மிகவும் ஆழ்ந்த உணர்ச்சியுடன் அந்தக் காரியத்தைச் செய்தான் அவன். அதைக் கண்ட மாப்பிள்ளை ஒரு விளையாட்டுப் புன்னகையுடன் "தாங்க்ஸ்" என்று முணுமுணுத்தார்.

"உங்க மாதிரி மகாபட்டவங்க இந்த ஊட்டு மாப்பிள்ளையா வந்திருக்கிறதிலே எங்களுக்கு ரொம்பப் பெருமைங்க. அந்தக் கொளந்தை காமாட்சியை எனக்கு ஒரு நாள் புள்ளேலேருந்து தெரியும். அதுக்கு எப்படியும் இப்படி ஒரு மகாபட்ட புருசன்தான் வருவாருன்னு எனக்கு அப்பவே தெரியுங்க" என்று தாணப்பா கை தூக்கிக் கும்பிடு போட்டு விட்டு, வீட்டுக்குள் சென்றான், கடிதங்களைக் கொடுப்பதற்கு. அதோடு, டிபனை ஒரு கை பார்த்துத் தனக்கு ஒரு புத்துணர்ச்சி ஊட்டிக் கொள்வதற்காகவும்தான்.

அந்த முதல் கடிதத்தைக் காமாட்சியிடம் அளித்ததும் தாணப்பாதான். இது பத்து நாட்களுக்குப் பின் நடந்த சம்பவம். கேலிச் சிரிப்புடன் கடிதத்தைத் தந்தவன் "அம்மாடி.. கவரே என்ன வாசனை அடிக்குது? மெயில் மூணு ஸ்டேஷன் முன்னாடி வரச்சேயே இங்கே வாசனை வந்துட்டுதே. அப்பவே எனக்குத் தெரியும். இந்த மாதிரி நான் நூறு நூறுப் பாத்திருக்கேன், கண்ணு. என் கையாலே இதை வாங்கிக்க. பத்தாவது லெட்டருக்குள்ளே அவரு உன்னை மூட்டை முடிச்செல்லாம் கட்டி எடுத்துக்கிட்டு, தங்கிட்டே வந்து சேரணுமின்னு உத்தரவு போடப் போறாரு. அன்னிக்கே நீயும் இறக்கை கட்டிக்கிட்டாக்கும் பறந்து போயிடுவே. அப்புறம் இந்தத் தாணப்பாவை அடியோடு மறந்தே போயிடுவே, உண்டா இல்லையா?" என்றான்.

காமாக்ஷியின் முகம் சிவந்தது. அவள் கடிதத்தைப் பிடுங்கிக் கொண்டு உள்ளே ஓடி விட்டாள். அவன் திரும்பியவாறே சொன்னான்: "நீ அந்த லெட்டரைப் படிச்சு, எங்கிட்ட சமாசாரம் சொல்லுவேன்னு காத்துக்கிட்டிருக்கிறதுலே புரோசனமே இல்லே."

அன்றைக்கு ஏதோ விடுமுறை. ராமானுஜம் அச்சமயம் வீட்டிலிருப்பா ரென்று தாணப்பாவுக்குத் தெரியும். அவர் வீட்டையடைந்து ஒரு கார்டை அவரிடம் எடுத்துக் கொடுத்தான்.

"அடாடா" என்று கூவிய ராமானுஜம், "கெட்ட சேதி, தாணப்பா. சேலத்தில் என் சித்தப்பா ரொம்ப 'சீரியஸ்'ஸா கிடக்கிறாராம். என்னை உடனே வரும்படி எழுதியிருக்கு" என்றார்.

"கேக்கறதுக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்குங்களே. இதோ இன்னொண்ணு" என்றபடி தந்தியொன்றை நீட்டினான் தாணப்பா.

"தந்தி!" என்று சத்தமிட்டார் ராமானுஜம். அதில் கண்ணைச் செலுத்தியவர் அலறியே விட்டார்: "அவர் போயே போய் விட்டார்..."

அந்த அதிர்ச்சியைத் தாங்கவொண்ணாமல் அப்படியே திண்ணையில் உட்கார்ந்து கொண்டார். தாணப்பாவும் அதே அளவுக்குப் பரிதாபமாகக் காட்சியளித்தான்.

தாமாகவே மெள்ளச் சம நிலை பெற்று, ஆசுவாசமடைந்த ராமானுஜம் உட்பக்கம் திரும்பினார்.

"ஒரு நிமிஷம் சாமி, நான் செஞ்ச ஒரு தப்பைச் சொல்லியாகணும்... வந்து...கார்டிலே இருக்கிற தேதியைப் பாருங்க" என்றான் தாணப்பா.

"என்ன? மே பத்தொன்பதா? சுமார் பதினைந்து நாளாகிறதே!"

"ஆமாமுங்க. தந்தி மறுநாள் வந்திச்சு - அதாவது கல்யாணத்தன்னிக்கு. அதைப் பார்த்து நான் ரொம்பத் துன்பப்பட்டேனுங்க...'நடந்தது நடந்துடுச்சு'ன்னு எனக்கு நானே சொல்லிக்கிட்டேன். தபாலுங்களையும் நானே வைச்சுக்கிட்டேன். இல்லாட்டி கல்யாணம் நின்னுப்புடுமேன்னுதான்..."

தாணப்பாவை வெறிக்கப் பார்த்தார் ராமானுஜம். "அவர் செத்து மடிந்து கொண்டிருக்கும்போது இந்தக் கல்யாண சம்பிரமங்களைப் பற்றி நான் துளிக்கூடப் பொருட்படுத்தியே இருக்க மாட்டேன்" என்றார்.

தாணப்பாவின் தலை கவிழ்ந்தது.

"உங்களுக்கு இஷ்டமானால் புகார் கொடுத்திடுங்க சாமி. என்னை 'டிஸ்மிஸ்' பண்ணிடுவாங்க. அது ரொம்பப் பெரிய குத்தம்" என்று வார்த்தைகளைக் குதப்பினான்.

உடனே திரும்பி, படிகளில் இறங்கி, சாலை வழியே தனது 'பீட்'டை ஆரம்பித்தான்.

அவர்வுடன் அவனையே சிறிது நேரம் நோக்கிக் கொண்டிருந்த ராமானுஜம், "தாணப்பா" என்று கூவினார்.

தாணப்பா திரும்பிப் பார்த்தான்.

"நான் புகார் செய்வேன்னு நினைக்காதே" என்று உரக்கக் கூறியவர், "ஆனாலும் நீ இப்படிப் பண்ணினதில் எனக்கு மனத்தாங்கல்தான்" என்று முடித்தார்.

"உங்க மனசு எனக்குப் புரியுது, சாமி!" என்று பதிலளித்த தாணப்பா தெருத் திருப்பத்தில் மறைந்து போனான்.



# படித்துப் பாருங்கள்



## பழமுதிர் சோலை

திருமுருகாற்றுப் படையில் கூறப்படும் முருகனுக்குரிய ஆறு படை வீடுகளில் ஒன்றான பழமுதிர் சோலையில் அண்மையில் அமைக்கப் பெற்ற வெற்றிவேல் முருகன் கோயிலின் சார்பாக இந்நூல் வெளியிடப்பட்டிருக்கிறது.

கடந்த அக்டோபர் (1960) மாதம் பழமுதிர் சோலை முருகன் கோயில் திருக்கை வேல், தமிழவேள் திரு பி.டி. இராசனவர்கள் தலைமையில் தமிழ் நாட்டு ஊர்களுக்கெல்லாம் சுற்றுலாச் சென்று வந்தது. அவ்வாறு சுற்றுலாச் சென்ற நிகழ்ச்சிகளை விவரித்து அகவற்பாட்டாக அமைத்து, நன்கு எழுதியுள்ளார் இதன் ஆசிரியர் கி. பழநியப்பன் அவர்கள். நூலின் பிற் சேர்க்கையாகத் திருமுருகாற்றுப்படை, திருப்புகழ்ப் பகுதிகள் ஆகியவற்றைச் சேர்த்திருப்பது பயன் தரத்தக்கது.

கிடைக்குமிடம்: விவேகாநந்தா அச்சகம், 48, மேல மாசி வீதி, மதுரை. விலை ரூ. 1-50.

## டால்ஸ்டாய் கடிதங்கள்

உலகப் பிரசித்தி பெற்ற இலக்கிய ஆசிரியர் டால்ஸ்டாயின் நவீனங்களையும், தத்துவங்களையும் படித்தவர்கள் சுவை நிறைந்த அவருடைய கடிதங்களின் தொகுதியைப் படிப்பதிலும் ஆர்வம் காட்டுவார்கள். இதிலுள்ள கடிதங்கள் 1856—1857 ஆண்டுகளில் டால்ஸ்டாய் இருபத்தெட்டு ஆண்டு நிரம்பிய இளைஞனாக இருந்தபோது, வலிரியா அர்சனேவ் என்னும் இளம்பெண்ணுக்கு எழுதியவையாகும் என்கிறார் தொகுப்பாசிரியர். நூலில் தொகுக்கப்பட்டுள்ள பதினைந்து கடிதங்களிலும் தத்துவக் கருத்துக்களும், அறிவாழம் நிறைந்த தீர்க்கதரிசி ஒருவன் உலகை நோக்கும் திறனும் தெளிவாகத் தென்படுகின்றன.

மொழிபெயர்த்துத் தொகுத்தவர்: மு. இராசமாணிக்கம் எம். ஏ.; வெளியீடு: தொல்காப்பியர் நூலகம், 202, ஞானிஜான் தெரு, சென்னை-14. விலை ரூ. 1.50.

## கலையின் விலை

ஒரு கலைக் குடும்பத்தில் சந்தேக விதையை விதைத்து விட்டால் பிறகு அந்தக் குடும்பத்தில் ஏற்படும் துன்பங்களும் துயரங்களும் விஷ விருக்ஷமாக அல்லவா படர்ந்து விடுகின்றன? ராஜனின் குடும்பத்தில் சந்தேக விதையை விதைத்தனர் மஞ்சுவும் ராம்நாத்தும். பிறகு அவர்களே அந்தச் சந்தேக விருக்ஷத்தை அழித்து ராஜன்-ரஜனியின் துன்ப வாழ்வுக்கு முடிவு காண்கிறார்கள். கலையைத் துஷ்பிரயோகம் செய்தால் என்னென்ன விபரீதங்கள் நிகழும் என்பதை இந்நூலை எழுதிய நாடக ஆசிரியர் நன்கு சித்திரித்திருக்கிறார். நாடகப் பண்பும், பாத்திரங்களைச் சிருஷ்டித்திருக்கும் விதமும் இந்நூலுக்கு உயிரூட்டுகின்றன. ஆனால் அங்கங்கே அச்சுப் பிழைகள் நாடகம் ஆடாமலிருந்தால் இந்த நாடகம் பூரண வெற்றியோடு திகழ்ந்திருக்கும்.

ஆசிரியர்: எம். ஏ. அப்பாஸ்; பிரசுரம்: ஜெமினி பிரசுரம்; எல்லையம்மன் காலனி, சென்னை - 6. விலை ரூ. 1-50.

## கண்ணன் பிறந்தான்

‘கண்ணன் பிறந்தான்’ என்ற தலைப்பில் திரு பி. ஸ்ரீ. அவர்கள் ஸ்ரீஜயந்தி மலராக அளித்திருக்கும் இந்நூல் பாகவத சங்கிரகமாக வெளிவந்துள்ளது. கண்ணபிரான் கதைகள் சுருக்கமாகவும் எளிய முறையிலும் தெளிவாக எழுதப் பட்டிருக்கின்றன. கண்ணனைப் பற்றிய பிரபந்தப் பாடல்களுக்கு நடுநடுவே நல்ல விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

வெளியீடு: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை - 18. விலை 30 காசுகள்.

## காவடிச் சிந்து

தமிழகக் கடவுள் முருகன் மீது தமிழில் எத்தனையோ பேர்கள் எவ்வளவோ பாடல்கள் பாடியிருக்கின்றனர். இருப்பினும் சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் பாடிய காவடிச் சிந்துப் பாடல்களில் தமிழ் மக்கள் தங்கள் இதயத்தைப் பறி கொடுத்தாற்போல் வேறு எந்தப் பாட்டிலும் ஈடுபாடு கொள்ளவில்லை என்று சொல்லவேண்டும். அந்த சந்த நடையழகுக்கும், ஓசை இன்பத்துக்கும் சிருங்கார ரஸத்துக்கும், மற்ற ரஸ பாவங்களுக்கும் தமிழ் மக்கள் அடிமையே யாகிவிட்டார்கள்.

அண்ணாமலை ரெட்டியார் பாடல்கள் பல காலமாக நல்ல பதிப்பின்றிப் பிழைமலிந்த பதிப்பாகவே, கிடைத்துக் கொண்டிருந்தது. அன்பர் திரு கு. அழகிரிசாமி அவர்கள், மிகுந்த சிரத்தை யெடுத்து, பல ஏடுகளை ஒப்பு நோக்கிப் பிழை திருத்தி, விசேஷ விளக்க உரையுடன் நல்ல முறையில் பதிப்பித்திருக்கிறார். வெளியீடு: சக்தி காரியாலயம், ஆயிரம் விளக்கு, சென்னை, விலை ரூ. 1.75.

## தெய்வங்கள்

மனிதர்களில் எத்தனையோ வகை குணங்கள் படைத்தவரைப் பார்க்கிறோம்! தெய்வ மனம் படைத்தவரையும் காண்கிறோம்; அரக்க குணம் உள்ளவரையும் பார்க்கிறோம். இப்படிப் பலப் பாத்திரங்களைக் காண்கிறோம் இக் கதைத் தொகுதியில். ‘பேசவில்லை’ என்கிற கதை உணர்ச்சி வெள்ளமாகப் பெருக்கெடுத் தோடுகிறது.

ஆசிரியர்: எம். ஏ. அப்பாஸ், பிரசுரம்: ஜெமினி பிரசுரம், எல்லையம்மன் காலனி, சென்னை-6, விலை ரூபாய் 2.

Printed &. Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

Arvind



QUALITY FABRICS

மர்ஸிரைஸ்ட் ஸன்போரைஸ்ட்
வெள்ளை பாப்ளின்
கோல்ட் டிரிங்க்
மர்ஸிரைஸ்ட் ஸன்போரைஸ்ட்
கலர் பாப்ளின்
ப்ரூபெர்ட்




•SANFORIZED•
REGISTERED TRADE MARK
of CLUETT PEABODY & CO., INC., U.S.A.

அரவிந்த் மில்ஸ் லிட்.
ஆமதாபாத்–2

REGISTERED USER OF THE TRADE MARK 'SANFORIZED'

GISTERED No. M. 4392
gistered as a Newspaper in Ceylon